பூமா. புத்தேளினத்தைச் சேர்ந்தவனாயினும்
இப்போ தென்னை அறியாய் நீயே !

ஒலி மறைகிறது பூமா தேவியின் உருவமும்
மறைந்து விடுகிறது.

வாஸ்து. அறியேன் எனச்சொல்லி அகன்றது சோதி !

(தனிமையில்)

அறியேனோ நான் ? ஆயின் நான் யார் ?
நடக்குமிக் கோயிலுள் நாதன் இருக்கையில்
மடத்தனம் எப்படி வந்திடும் எனக்கே ?

(வெளியே யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டு)

கஷ்டம் ! கஷ்டம் ! கலையில் நண்பன்
கதவைத் தட்டிடத் தருணம் இதுவோ ?
ஆவிஉலகின் அதிசயங் காணும்
இந்த நேரத்தில் வந்து தொலைத்தான் !

(வரகுணன் கையில் விளக்குடன் வருகிறான்)

வரகுணன். எதையோ வாய்விட் டெடுத்த குரலில்
உரைத்திடக் கேட்டேன், உயர்தர மான
காவியமோ நீர் கற்பீர் இப்போ ?
நாடகம் படிக்க நானும் விழைகிறேன்.
நடிப்புக் கலைக்கிந் நாள்மதிப் பதிகம்.
நடிக்கத் தெரிந்த நல்லாசிரியன்,
பேராசிரியனைப் புறங்கண்டிடுவான் !

வாஸ்து. பேராசான் பெரும் நடிகனாய் விட்டால்
வாரா நன்மை ! வாஸ்தவத்தில் பல
ஆசான் மார்வெறும் நடிகரே யாவார் !

வரகுணன். பலநாள் அறைபுட் பதுங்கி புலகைப்
பலகணி வழியாய்ப் பார்த்திருந் தேன்றே
ஒருநாள், அதுவும் திருநாளாகப்,
புறம்போந் தென்னதான் போதனை செயினும்
அறவழி மாந்தரை ஆண்டிடலாமோ ?

வாஸ்து. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கிய உணர்ச்சியில்
ஊறிப் பிறந்திட வேண்டும் உரைகள்
பள்ளந் தேடிப் பாய்ந்திடு நீர்போல்
கேட்பவர் செவியிற் புகுந்தவர் கருத்தை
ஆட்கொளா விடில் உன் அழகிய கட்டுரை
வெற்றுரை யேயாம் வீண் உன் முயற்சிகள்;
போதனை செய்வதை நீதவிர்த்திடல் நலம்!
யாரோ கூறிய வாசகங் கொண்டுன்
பேச்சை நிரப்பிப் பெய்திடில் அது வீண்
எச்சுக் கிடமே!, அன்றியும் அவிந்த
சாம்பலை யூதிக் காண்பரோ ஒளியை ?
வறியவுன் செயலைச் சிறியரே வியப்பர் !
இதயத் திருந்தெழும் உரைகளே கேட்போர்
இதயம் பிணிக்கும் திறம்படைத்திடும் மெய்.
சொல்திறம் கொண்டே வெற்றிகொள்வார் உளர்
எந்தனுக் கத்திறம் வந்திடா தின்னும்.

வாஸது. பொய்த் திறமே நீ பெற்றிட் விழைவது.
பேச்சலங்காரம் பேணிப் பொருளிலா
வாய்ச்சொல் வீரனும் வகையயில் வாயோ ?
சீரிய பொருள்தனை நேரிய முறையிற்
செப்பிடும் போழ்தேன் ஒப்பனை மொழிகள் ?
நேர்மையும் ஞானமும் நிறைந்திடு நெஞ்சின்
வாய்மை சேர் சொல்லில் வனப்பெலாந் தங்கும்.
விதிவிலக்கென்னும் விலங்குகள் உடைத்து
நதிப்பெருக் கெனவரும், நயம்பெறு மொழிகள் !
உள்ளத் தெழுச்சியை ஒழிக்கப் பலவிதக்
கள்ள அணிகளைக் கற்பனை செய்வார்.
காரிகை கூறுங் கணக்கிற் கஞ்சிச்
சாரியை சந்தி சீர் அசை நேர்வர,
எழுத்தெழுத்தாக எண்ணிப் பார்த்துச்,
சேர்த்துக் கட்டிச் செய்யும் கவிதையில்,
வாரா இயற்கை வனப்பொடு வலிமை !
உலர்ந் துதிர் இலைகளின் ஊடே சலசலென்

றொலிபெருக் கிச்செலும் ஊதைக் காற்றின்
வறட்சியே மிகுமவ் வறட்டுக் கவிதையில்.

வரகுணன். கற்பவை கணக்கில ! கற்பவர் நாட்சில
கவிதா ஊற்றின் கரைக்குச் செல்லும்
வழிதான் எத்தனை வருத்தம் மிக்கது !
விருப்புடன் பன்னால் விரித்துப் பார்க்கும்
போதென் நெஞ்சம் பீதியுற் றிடுமே
பாதி வழிக்குப் போமுன் பேதையின்
காலந் தீர்ந்திடும் ! காணேன் முடிவை!.

வாஸ்து. ஒருமுறை உண்டிடில் மறுமுறை வேண்டா
அமிர்தம் காகித அடுக்கில் ஊறுமோ ?
உளத்திறுள் அமுத ஊற்றெடுக் காவிடில்
உயிர்ப்பிணி தீர்க்கும் உயர்கவி இன்றாம் !

வரகுணன். பண்டை நாள் தொட்டுப் பார்தனிற் பற்பல
ஞானிகள் தோன்றி நமக்களித்திட்ட
நூல்களால் இன்று நாம் உயர்ந்தோம் அறிவில்.

வாஸ்து. வெகுதூரத்துள விண்மீன் வரைக்கும்
சென்றுள நந்தம் அறிவின் திறத்தை
உண்மையில் மதித்திட ஒவ்வா தென்மனம்.
சென்ற காலத்தை மறைக்கும் திரையில்
சந்தொரு சிறிதிலை : தற்காலத்தின்
போக்கிது வென்பர் உண்மையில் தந்தம்
போக்கிற் கிசையப் பேசுவர் பலரும்.
காமாலைக் கண் காண்பது மஞ்சளே !
அதுபோல் அவரவர் அறிவிற் கேற்பத்
தலைகீழாகப் பலபல விதமாய்
கண்டறிவார்கள், கற்பனை செய்வர் ;
முற்று முணர்ந்திடு ஞானியைப் போல
நீதியுரைப்பர் ! நெறிவகுத்திடுவர் !,
பலபொருள் கொள்ளும் வகை யுரைத்திடுவர் !
பாவைக் கூத்துக் காம்இப் பதங்கள் !
இவற்றை யெண்ணிடில் ஏமாற்றம் மிகும்.

வரகுணன். ஆயினும் உலகில் அடைந்திடு மனிதன்,
தன்னைப் பற்றியும், தரணியைப் பற்றியும்,
சிறிதளவேனும் தெரிவா னன்றோ ?
இந்திரியம்முதல் அந்தக் கரணம்
பெற்றவ னன்றோ, பிறந்திடும் போதே !

வாஸ்து. ஆசறு காட்சியை அடைந்தா ரெவரே
பேசத் துணிவார் பிறரிடம் அதனை ?
ஒருசிலர், உண்மையின் ஒளியினைப் பெற்றார் ;
உள்ளவா றதனை ஒளியா துரைத்தனர் ;
உலகோர் அவர்களை ஒறுத்தார் முற்றும் !
சிறுவையில் அறைந்துயிர் செகுத்தார் ஒருவரை ;
ஒருவரைக் கல்லெறிந் தூரைவிட் டோட்டினர் ;
கல்லைக் கட்டிக் கடலில் எறிந்தார் ;
கழுவில் ஏற்றிக் கடிந்தார் சிலரை ;
தெருவில் வைத்துத் தீயிட் டெரித்தார் !
இன்றிர வித்துடன் முடிப்போம் பேச்சை,
சென்றது நேரம், வந்தனம் நண்பா !

வரகுணன். உம்முடன் இவ்வா றுரையாடித் தினம்,
உண்மை அறிந்திட உறுவேன் ஆசை
அறிவைப் பெற்றிட அயரா துழைப்பேன் ;
அறிந்தேன் அதிகம், ஆயினும் அனைத்தும்
அறிந்திடத் துணிந்தேன் : அடங்கா தாசை !

(வரகுணன் போகிறான்)

வாஸ்து
தனிமையில் நண்பன் கொண்டுள நம்பிக் கையின்
திண்மை பெரிதும் வியத்தற் குரிதே !
வேலைக் குதவா வியத்தமே யாயினும்,
அதனைப் பெறுவதற் காசைதான் எத்தனை !
இழவான் உறுதியைத் தளரான் முயற்சியில் ;
ஊக்கத் தோடிவன் மேற்கொளும் வேலையில்
ஊக்கித் துணைசெயும், ஒருபுழு வெனிலதை,
வாழ்த்திச் செல்வான், மகிழ்வான் மனத்தில்
நித்திய வாழ்க்கைச் சக்திகள் உலவும்

இத்தலம் அஞ்சா தூற்றவன் அன்றோ ?
அற்ப மனிதனே ஆவான் எனினும்,
போற்றுவன் இவனே!, பொறிகள் கலங்கிப்
புத்தி யிழந்திடும், அத்தரு ணத்திவன்
வந்தெனைக் காத்தான் ; மறவேன் நன்றியை.

ஐ ஐ ஐ ஐ

ஆ! அக்காட்சியின் அகண்டகாரச்
சோதிமுன், நான்சிறு துரும்பே போல்வேன்,
ஆயினும் அதுநான் ஆவேன், ஆதலின்
குயவனார் தருமட் குடமுடைத் துள்ளுள,
சுயம்பிர காசச் சுடரொளி கொண்டு,
நித்திய தத்துவ நிறைவை மறைக்கும்
திரையை நீக்கித் தெரிசித்(து) இறையின்
பரைவிளை யாட்டைப் பார்க்கத் துணிந்தேன் !
இடிமுழக் கெனச்சொன ஒருமொழியால் மனத்
துடிதுடிப் படங்கிச் சோர்ந்தேன் கணத்தில் !

ஐ ஐ ஐ ஐ

தேவி ! உன்றன் திருவிளையாடல்
நிகழும் இடம்வர நினைக்கேன் இனியே !
மந்திரத்தாலுனை வந்திடச் செய்தேன் ;
ஆயினும் எனைவிட் டகலா திருக்கச்
செய்திறம் அந்தோ!, கைவர விலையே !
உணர்விழுந் தின்ப வுந்தியில் மிதந்த
போதென் சிறுமையும் உன்தன் பெருமையும்
ஒருவா றறிந்தேன் ; உடன்ஒரு நொடியில்
போதக ஞானப் பொன்னுல கத்திருந்
தேதம் மிகுத்தவிப் பூதலத்தென்னை
வீழ்த்திச் சஞ்சல வாழ்க்கையில் ஆழ்த்தினை !
போதம் இழந்தேன் ; புகலிடம் காணேன்.
எவ்வுரை கொண்டினி எவ்வாறுய்வேன் ?!.
அகந்தனில் எழுமோர் ஆயிரம் உணர்ச்சிகள் ;
உகந்தெதைக் கொள்வேன் ? ஒழித்தற் குளதெவை ?
நன்றோ பிழையோ நஞ்செய லனைத்தும்

சுற்றிலுமுள்ள சுவடிகள்யாவும்
கற்பதனாலென் அற்றம் போமோ ?
மண்ணுடன் இதுவும் மண்ணே யாகும் !
ஆயிரம் நூல்களை ஆய்ந்தென் ? உலகில்
இன்பம் காண்பவர் எங்கோ சிற்சிலர்
துன்பமே பலர்க்கும் சொந்த உரிமையாம் ;
என்பதை யறிவார் எவரும் முடிவில்.

எர்முன் பல்லை இளிக்கும் மண்டை
ஓடே ! நீயும் ஒருநாள் உயிருடன்,
உலகில் திரிந்திடு போதென்னைப் போன்றே
உண்மையின் ஒளியைப் பெற்றிட வேண்டிப்
பெரிதும் முயற்சி செய்தாயெனினும்
ஒளியைக் காணு துழன்ருய் இருளில் !

✠ ☸ ✠ ☸

சக்கரம் ! சிற்றுளி ! சல்லடை ! சிறுமணை !
சுத்தியும், கடயமும், என்றிடுங் கருவிகள் !
சுற்றிலும் பற்பல சும்மா இருந்தெனைப்
பார்க்கும் போதவை, பரிகசிப் பவைபோல்
தோற்றம் அளிப்பதால், துயருற் றிடுவேன்.
பட்டப் பகலில் பல்நாள் முயன்றும்
அவற்ருல் இயற்கையின் அளவறிந் திடுவதற்(கு)
என்ருல் இதுவரை இயலவே யில்லை !
ஞானக் கண்களுக் ககப்படாப் பொருள்களை
ஊனப்பொறிகளால் உணர்ந்திடக் கூடுமோ ?
இயற்கையின் கோட்டைக் கிவையோ திறவு
கோல் ?
வலுவில் திருப்பினுல் மனப்பூட் டுடையுமோ ?
சிந்தைக் கதவும் திறக்குமோ இவற்ருல் ?

முன்னேர் இவற்றை யுபயோகித்தனர்,
என்பதற்கா யிவை இன்றே விருந்திடும் ?
எத்தனை நாட்புகை ஏறுமிச் சுவடியில் !
இந்த விளக்கிவண் எரியுமெத் தனைநாள் !

இவற்றுடன் நானேன் இடர்ப்பட வேண்டும்?
உபயோ கத்திற் குதவாப் பொருள்களால்,
பிரயோ சனமிலை; பிணித்திடும் கால்களை;
வழியிற் கிடந்து தடுத்திடும் இவற்றை
ஒழித்திட வேண்டும் உறுதிப் பொருளைத்
தேடிச் செல்பவன், சுமைகளைத் துறந்து
அவ்வப் போதவர்க் கவசியமான
சிற்சில பொருளால் பெற்றிடுவான் பயன்.

அச்சிறு குப்பியுள் அடைத்துள தெதுவோ?
காந்தமோ! அதுவென் கண்களைக் கவர்வதேன்?
அதைவிட் டொருகணம் அகலாதென்கண்
இருட்டிய வனத்தூடொளிரும் மதிபோல்
மருட்டிய மனத்துள் முளைத்தெழும் சோதி!

பளிங்குக் குப்பி! பணிந்தேன், உன்னைக்
களிப்போ டென்றன் கரங்களில் ஏற்பேன்!
விஞ்ஞானத்தால் விளைந்திடும் அமுதே!
அஞ்ஞானத்தால் அலைந்திடும் மனத்தில்
இன்ப உணர்ச்சியை எழுப்பித் தேக்கிக்
கவலையைப் போக்கும் கற்பக ரசமே!
உன்றனைத் தோற்றிய உயர்மனி தன்மதி
வியந்தரும், அதற்கென் வந்தனம் உரித்தாம்.
இடர்ப்படும் எனக்குநீ இன்பம் தருவாய்:
களிப்போ டுன்னைக் கண்ணுறும் போதே
கவலைகள் மனத்திற் கட்டவிழ்த் தோடின
கைகளில் எடுத்ததும் எய்திடும் சாந்தி
நெஞ்சகத் திருந்த சஞ்சலம் தீர்ந்தது
கரையிலா இன்பக் கடலெனைச் சேர்ப்பாய்.

எரியும் தேரொன் றிறகின் மீதே
வானில் மிதந்து வந்திடும் என்முன்
வரம்பிலா வான்வெளிப் பறந்திட விழைவேன்
தூலம்விடுத்துச் சூக்கும உலகிற்

சாலவும் திரிந்திடச் சலியேன் எனினும்
மண்புழு எனக்கது வாய்க்குமோ இன்று ?
சோதிப் பிழம்பாம் சூரியன் பக்கமே
நீ திரும் பாதே நினைவை யகற்று.
நெஞ்சில் உறுதியும் நேர்மையும் கொண்டு
கோழைகள் செல்லக் கூசிடும் அந்தக்
கோட்டைக் கதவை உடைத்துட் புகுந்திடு
தருணம் இதுவே ; தயங்கிட வேண்டாம்.
தேவர்கள் சாந்தியும் தெம்பும் இன்பமும்
தீவிர முயற்சிசெய் தியாவரும் பெறலாம்.
துணிவுள மனிதனுக் கெளிதே எதுவும்
கலங்கிய மனத்தெழும் கற்பனையால்வரும்
பிலம்வீழ் வோமெனப் பேதுற வேண்டாம்.
இடுக்கண் கண்டழிந் திடக்கூ டாததைப்
படுத்தும் பாட்டில் பயந்தோ டச்செய்
விழியாத் தூக்கத் தழிவாய் எனினும்
களிப்புடன் துணிந்திடு காரியம் கைவரும்.

குலமாதைப்போல் கூசியொதுங்கிப்
பலநாளிந்தப் பைக்குள் மறைவாய்ப்
பதுங்கி யிருந்திடு பளிங்குக் குப்பீ !
இன்றுனைக் கண்டேன் எடுப்பேன் கையில்
வாயொடு வாய்வைத் தளிப்பேன் முத்தம்
அடிக்கடி தந்தையார் அளித்த விருந்தில்
அவரது நண்பர்கள் அனைவரும் உன்னைக்
காதலித் தின்பக் கடலுட் டிளைத்தார்.
முந்தைநாள் நினைவுகள் முந்துறும் மனத்தில்
தந்தைகா லத்தவர் தந்த விருந்தில்
நட்டார் உற்றார் நாவலர் பாவலர்
தட்டாதளிக்கும் தாதாக்கள் சிலர்
பட்டாளத்துயர் படைவீரர் பலர்
இட்டமாய்ப் பலரும் இருந்தார் கூடித்
திட்டமிட் டோர்முறை செய்ததை எழுதாச்
சட்டமாய்க் கொண்டார் சகலரும் அதன்படி

வட்டமாய் மேஜையைச் சுற்றிநின் றிட்டார்.
வட்டக் கிண்ணியுள் வைத்தார் உன்னைக்
கட்டமனைத்துங் காற்றிலே விட்டார்.
தொட்டிடு முன்பொவ் வொருவருங் கிண்ணியைச்
சுட்டி, நீதரும் சுகந்தனை எண்ணி
ஆராவமுதென் றஞ்சலி செய்தனர்,
ஊறும் நாவால் உரைத்தார் உன்புகழ்
சீர்கொள ஈரடி செப்பிய பின்பெடுத்
தோர்மூச்சாலுனை உண்டார் முழுதும்.
பிள்ளைப் பருவத் தென்மனம் பிணித்துக்
கொள்ளைகொண் டவிக் காட்சியின் நினைவுகள்
உள்ளத் தெழுந்தின் றுவகை யளித்தன.
இன்றென் னேடுனை ஏற்றிப் போற்றிட
எவரும் இங்கிலர் ஏகநாயகனைக்
கூடியிரண்டறக் கொள்வேன் இன்பம்
இதுவரை கற்றுள விஞ்ஞானத்தின்
திறமெலாங் கூட்டிச் செய்தேன் புதுவகை
மதுவிதில் ஓர்துளி மாந்திடும் முன்மனம்
குதுகலித் தின்ப வுநதியில் மிதக்கும்
ஆதலின் இன்றிதை அருந்திடத் துணிந்தேன்
புன்மை யகற்றிப் புத்துயிர் பெற்றிடும்
புண்ணிய நாளிது பொழுதும் வந்தது.

வெளியில் திருக்கூட்டத்தார் பாடிக்கொண்டு
தெரு வழியே செல்கின்றனர்.
இடையிடையே ஆலயத்தில் அர்த்த சாமப்பூசைமணி
அடிக்கிறது உற்றுக் கேட்கிறான்.

திருக்கூட்டம் பாடிக் கொண்டு போகின்றனர்

“அம்பலத் தரசே அருமருந்தே
ஆனந்தத் தேனே அருள்விருந்தே,”

வாஸ்து

மணிதரு நாதமும் கவிதரு கீதமும்
தணிந்திடும் என்மனத் தாகமும் சோர்வும்;
ஆயினும் இவையென் ஆசையைத் தடுத்தவே.
வாயினுட் குப்பியை வைத்திடும்போது

கேட்டன புனித கீதமும் மணியும்
பாட்டின் பொருளைப் பார்த்தேன் எண்ணி
மதுவினை அருந்த மனம் வரவில்லை.

பலப்பல நினைத்துப் பரிதவித்திடாமல்
தலைவன் உளன் இது சத்தியம், உளநாள்
தனையும் காத்துத் தாங்குதல் அவன்கடன்,
நாம் அதிகாரி யன்றெண நம்பிடும்
பாமர மக்கள் பயன்பெற் றிடுவார் ;
நாதமும் கீதமும் நலந்தரும் அவர்க்கே.

சஞ்சலத் தால்மனம் தன்மையிற் குரங்காம்
அனைத்தையும் விசாரித் தறிந்திடு வேனெனக்
கனைத்தெழும் புத்தியோ கட்செவி நிகராம்
என்போல் இலையென் றிடுமகங் காரம்
வன்மதப் பட்ட வாரணம் போலாம்.
பித்தாய் யாதொடும் பின்செலத் துணிவதால்
சித்தமோர் நாயெனச் செப்பிடத் தகுமே.
இத்தகை யந்தக்கரணம் படைத்திடு
நாயினும் கடையனைத் தேடி யேன் வந்திடும்
தூய இவ்வொளிகள் ? சுட்டிய பொருளை
அகந்தனிற் கொண்டேன் ஆயினும் ஐயம்
அகலா தென்றனுக் கமைதியும் வாரா.
நெஞ்சம் பிணித்திடு நம்பிக்கையுமிலை
நம்பாதார்க்கிலை அம்பலத் ததிசயம்.
உம்பர் உலகத் துறை தரும் பாக்கியம்
என் போல் வார்க்கிலை இப்புவி தந்திடும்
இன்பமும் துன்பமும் ஏற்றிடுவேன் இனி
பூவன்னை ! உன் பிள்ளை நான் என்றும்.

# பொங்கல் திருநாளன்று மாலை.

ஊர் ஜனங்கள் ஆண்களும் பெண்களும் கூட்டம் கூட்டமாகக் கோட்டை வாசலின் வழியே போகின்றனர்.

தொழிலாளி 1 அண்ணே நீங்கள் அவ்வழி செல்வதேன் ?

மற்றவர் பண்ணையார் வேட்டைப் பறம்புக்குச் செல்வோம்

தொழிலாளி 1 சாலைபக்கம் போவோம் நாங்கள்.

கோல்லன் ஆலயம் போவது சாலவும் நன்று.

தொழிலாளி 2 அந்தப் பாதையில் ஆபத்ததிகம்
அந்திப்பொழுதிற் காகா நல்வழி

மற்றவர் எந்தப்பக்கம் சென்றிடுவாய் நீ ?

தொழிலாளி 3 யாவரும் எவ்வழி அவ்வழி நானும்.

தொழிலாளி 4 வாவிச் சோலைவழியே போவோம்
காவிச்சேலைக் கன்னியர் பலரைக்
கண்டுரையாடலாம் களிதரும் மதுவகை
உண்டிடலாம் என் உத்தேசம் இது.

தொழிலாளி 5 நாணிலி ! அங்கே நான் வரமாட்டேன்
பாணியுட் சென்று பாணியுண்டால் வரும்
பழிதனை எண்ணிப் பார்த்திடுவாய் நீ
இழி தகை இன்பம் ! எனக்கது வேண்டாம்.

— O —

ஒரு பணிப் பெண் பட்டணம் திரும்பலாம்—பாதை மேற் செல்லேன்.

மற்றொருத்தி கட்டாயம் அவன் காத்திருப்பான் அவண்.

முதல்வள் இருந்தால் எனக்கென் ? எப்போதும் அவன்
விரும்புவதனையே இருவரும் இன்பமாய்
விளையாடுவதற் கிடையூறுவேன்.

**மற்றவள்** சலியேல் தோழி ? தனித்தவன் வாரான் !
தோழன் ஒருவன் சுருட்டை மயிரன்
வாழ வெண்ணி வருவான் இன்று.

— 0 —

**மாணவன் ஒருவன்** நண்பா ! பார் ! அந்நங்கையர் நடையை !!
தன பாரத்தால் தளர்மின் இடையும்
உடலின் எழிலை உயர்த்தும் உடையும்
உரையும் விழியும் உளத்தை உருக்கும்
மாதரும் கள்ளும் மகிழ்தரும் எனக்கு,
ஆதலின் நண்பா அவர்பின் செல்வோம்.

சற்று தூரத்தில் நாகரீக மங்கையர் சிலர் வருகின்றனர்—
அவர்களில்,

**நகரதிகாரி மகள்** வேள்வலி கெடுத்த விடலைகள் பாராய் !
தோழி ! இவர் தம் துன்மதி யென்னே ?
உயர்குடிப்பிறப்பும் ஒழுக்கமும் நிறைந்த
நம்போலியரை நாடா தொழித்துக்
கூலிக்காரிகள் கொங்கையை விரும்பித்
தேடித் திரிவார் ! சிரிப்பிவர் செய்கை !
கரும்பை விடுத்துக் கடிப்பார் இரும்பை !!

**இரண்டாம் மாணவன்** வேண்டாம் அவசரம். மெதுவாய் நடப்போம்.
பெண்பால் இருவர் பின்னேயிருந்து
நம்பால்வரும் அந்நங்கையுள் ஒருத்தியை
அறிவேன், அவள் மீதாசையும் கொண்டுளேன்.
எதிலர்போல நடந்திடுவார் எனினும்
மாதிவர் விரைவில் மருவுவர் நம்இடம்.

**முதல் மாணவன்** எனக்கிவர் எழிலும் ஒயிலும் வேண்டாம் ;
வனத்தில் எதேச்சையாய் வாழும் கிளிகள்
வனப்பும் வலியும் வருமோ கூட்டில்
வளர்ந்த கிளிக்கு ? வா, வனக் கிளிகள்
பறந்திடும் முன்போய் பற்றிடுவோம்—மற்(று)
உழைத்துரம் பெற்ற ஒள்ளிய கையே

அணைத்திடும் அளவிலா அன்பு கொண்டேன் நாம்.
முதல்நாள் குப்பையைக் கூட்டிய கைகளில்
மறுநாள் இன்ப மங்கலம் கூடிடும்.

— 0 —

நகரவாசி நேற்றுப் பதவியேற்றுள் நகரத்
தலைவரை எனக்குச் சற்றும் பிடிக்கலை!
வரவரக் கருவம் வளர்ந்திடும் அவர்க்கு
பதவியைப் பெற்றபின் நகர்க்கவர் செய்ததென்?
முதலில் இருந்த நிலையிலும் மோசமே!
தொட்டதுக்கெல்லாம் சட்டமும் திட்டமும்!
கட்டுப்பாடுகள் கணக்கில் அடங்கா,
இதுவரை இல்லாப்புதுப்புது வரிகள்
சீ! இவன் செய்கை சிறிதும் சரியில்லை.

— 0 —

பிச்சைக்காரன் ஒருவன் பாடுகிறான்

1 ஆணிலே பெண்ணிலே என்போல்—ஏதும்
அறியாத பேதை யிப்புவி மீதிலுண்டோ?
வீணிலே நாளெலாம் போச்சே சற்றும்
வெட்கமில்லாமலே இரந்துண்ணலாச்சே. (ஆணிலே)

2. இரவுபகல் ஏமாறுதென்றும்—எரியும்
இடும்பை செறிவயறு செய்கொடுமை யதனாலே
பரபரப்புடன் மனிதர் நாளும்—எந்தப்
பழிபாவ மஞ்சாமற் றொழில்புரிவர் காணும் (ஆணிலே)

3. இல்லோர் இரப்பதுவும் இயல்பே—ஆயின்
இரப்பவர்க்குக் கொடுப்பதுவும் உடையவர்
தங்கடனே
எல்லார்க்கும் திருநாள் இன்றாச்சு—உங்கள்
இஷ்டம்போல் கொடுத்திடுங்கள் ஏழைக்கொரு காசு.
(ஆணிலே)

நகரவாசி (இரண்டாவது) உலா நாட்களிலும் உற்சவங்களிலும்
அவரவர் இன்பம், அடைவார் பலவிதம்
ஆலடி நிழலில் அன்பர்கள் கூடிக்

காலக் கணக்கையும் களிப்பினில் மறந்து
பயங்கரச் சண்டைகள் பாரெலாம் நிகழ்வதும்,
அயல்நாட்டார் அதில் அவதிப்படுவதும்,
என்றும்போல் நாம் இன்புற்றிருப்பதும்,
என்றிவைபற்றிச் சம்பாஷிப்பதில்
எனக்குள இன்பமற்றெறதிலும் இல்லை ?
ஆண்டவன் அடிக்கீழ் அனைவரும் தங்கி
இன்புடன் வாழ இடமுண்டுலகில்
என்றிருப்போம் நாம், இலை ! நமக்கின்னல் !!

நகரவாசி மூன்றுமவன் அண்ணே ! உன்சொல் அத்தனையும் சரி.
ஒன்றோர் மண்டையை உடைத்துக் கொளட்டும்.
எண்ணேம் பிறர்கேடு என்றும் நாமே.

குறி சொல்லும் கொங்குக் குறத்தி பாடிக்கொண்டு வருகிருள்.

1. மும்மையுல கெங்குமுயர் கொங்கு வளநாடு
மூவேந்தர் ஆட்சியிலும் முதலிருந்த நாடு
செம்மையின் இகந்தரசு செய்திடுவாராயின்
சீறியவர் ஆட்சியினைச் சிதைத்திடுவர் நாடு
செம்மல் இளங்கோவடிகள் செய்தொழிலை விட்டுச்
சீரிளமைத் தமிழணக்குச் சிலம்பணி செய்நாடு.
கொம்மை முலை மாதரிடைக் கன்றியொரு வாட்டம்
கூறுவதற்கிலை யெங்கள் கொங்குவள நாடே !

2. நிண நாற்றம் உண்டயதென நெய்த நிலம் நீக்கி
நீள்வரைகள் உடன்மருதம் முல்லைதிகழ் நாடு
மணங்கூட்டும் கறிவகையும் கரிக்கோட்டின் முத்தும்
மற்றும் உளபொருள் வேண்டிவரும் உலகர் பலரும்,
பணங்காசும் கடல்கூட்டும் பவளமொடு முத்தும்
பரிந்தளித்து வணங்கி மணம்பெறுவ ரெங்கள் நாட்டின்
குணங்காணக் காவிரியும் குணக்கோட்டம் விடுத்துக்
குதித்தனள் தென்திசை நோக்கிக் கொங்கு வளநாட்டே !

3 இமயமுள கயிலையினும் இனியதென ஈசர்
இருப்பர் அம்மையுடன் வெள்ளிப்பொருப்பதனில்
விருப்பாய்

சமயம் உயர்சைவம் இது சத்தியம் எந்நாளும்
தரணியொடு வானுலகர் தாமுணர்வதாலே,
இமயவரும் முனிவரரும் இறைவனருள் வேண்டி
இயற்றிடுவர் இனிய தவம எங்கள் மலைமீதே ?
குமரிமுதல் இமயம்வரை கூறு பலநாட்டுள்
கொங்கினுயர் நாடொன்று கூறுவதற்கிலையே !!

— OO —

குறத்தி நாகரிக மங்கையிடம்

அழகிய குழந்தாய் ! அருகே வாராய்
இளநகை தவழுமுன் எழில்முகப் பொலிவும்
இளமுலை இறுமாப்புடன் எழும் வலிவும்
கண்டிடில் யார்தான் கொண்டிடார் காதல் ?
மோதிரம் ஒளிவிடும் முன்கையை நீட்டாய்
கைக்குறி பார்த்துனைக் கை பிடிப்பவனைக்
கண் எதிராகக் காட்டித் தருவேன்
அந்தரங்கத்தில் ஆசை கொண்டுள்ள
சுந்தர புருஷனைச் சந்தித்திடலாம்
சேலையும் வளையும் சிந்தினை, விரைவில்
மாலையும் மணமும் வந்திடச் செய்வேன் ?

நகரநாகரிக மகள்

மொழிக்கொரு சப்பும் முலைக்கொரு குலுக்கும்
விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டும்
இயற்கை யெனும்படி எவ்வெவரோடும்
மயலுறப்பேசி மகிழ்தர, நடிக்கும்
குறத்தியிடம் நாம் குறி கேட்டிருப்பதைப்
பலரும் இழிவாய்ப் பார்க்கிறார் தோழி !
எனக்குறத்தி இவளோடுரை தரல்
மானக் கேடெனை மதிக்குமா என்னுளம் !
ஆயினும் சென்ற ஆடி நோன்பன்று
சேயிழை யென்றன் சிந்தையிற்கொண்ட
காதலன் தன்னை யென் கண் முன் காட்டினள் !
போதும் குறி இனிப் போவோம் தோழி !!

மற்றொரு நாகரீக மங்கை

என்மனம் விழையும் காதலன் தன்னையும்
பன்முறை அஞ்சனம் போட்டுக் காட்டினள்
குப்பாயந்தரி சிப்பாய்மார் பலர்
சிங்கக்குட்டிகள், சிநேகிதர் மத்தியில்
தங்கச்சிலைபோல் தலைவரைக் கண்டேன்.
அதுமுதல் இதுவரை அநேக வீரரை
நேரில் பார்த்தும் நிச்சயப்படவில்லை
அஞ்சனம் காட்டிய ஆள் அடையாளம் !

— OO —

## சிப்பாய்மார் பலர் சேர்ந்து களிப்புடன் பாடுகின்றனர்

1. அஞ்சவருவ தொன்றில்லை—நாம்
அஞ்சுவதும் இன்றில்லை !
கத்திச் சண்டையெனில் களிப்போம்— அந்தக்
கணத்தினிற் சென்றதிற் கலப்போம்.
குத்துச் சண்டையெனிற் குதிப்போம்—பகை
கொண்டவர் உதிரத்தைக் குடிப்போம்—அவர்
குடலை மாலையாய்த் தரிப்போம் !!! (அஞ்சவரு)

2. கோட்டை கொத்தளங்கள்மீது—நம்
கொடி பறக்க விடும்போது
சூது பகைவரது, யாதுமிருக்காது—சரி
கூற நமக்கே இணை ஏது ? (அஞ்சவரு)

3. நாட்டை அழிக்கவரும் பகைவர் —நம்மைக்
காட்டியே கொடுக்கும் கயவர்
வாட்டி இருவரையும் ஒட்டி ஒழிக்கும்வரை—தினம்
போட்டி போட்டுச் சமர் புரிவோம் (அஞ்சவரு)

4. மின்னிடை மாதர்கள் பணித்தால் —உயிர்
வேண்டினும் ஈந்திடத் துணிவோம்.
விண்ணிலேறிப்பகை வென்று வாகைபுனை—நாள்
எண்ணி யெண்ணிக் களித்திடுவோம் — (அஞ்சவரு)

— OO —

வாஸ்துவும் வரகுணனும் பேசிக்கொண்டு செல்கின்றனர்.

வாஸ்து
கார்த்திகைச் சோனையும் கூதிரும் கழிந்தன.
மார்கழிக் கருக்கலும் மஞ்சும் மாறின.
தெய்வதர் தூக்கம் தெளிந்து விழிப்பவும்
வடபால் உலகர் வலிபெற் றெழவும்
பகலவன் தென்றிசைக் கதிதனை மாற்றி
மகர ராசியுட் புகுந்தனன் இன்று
வானம் உயர்ந்து மாசற விளங்கும்
வேனில்வரும் இனிவிரைவில் எழுங்குறி
பானுவின் இளங்கதிர் பாய்ந்து தெரிக்கும்
கனிகாய் வகைகளும் கரும்பும் மஞ்சளும்
இனிதாய்ச் சோலைகள் எங்கும் பலிந்தன!
விளைபொருள் தானியம் வீடு வந்தடைந்தன.
அறுவடையான வயல்களில் ஆயர்
வேய்ங்குழல் ஊதிக் கால்நடை மேய்த்தனர்.
சாரலில் படர்ந்து தாழ்ந்து வீழ் அருவிகள்
ஆரம் போல்வன அன்னையின் மார்பில்;
தலைக்கருங் குழலில் தார் சூட்டிய தென
மலைச் சிகரங்களில் மருவின மஞ்சு!
இயற்கையரசி தன் துயில் நீத்திடும் வகைப்
பள்ளியெழுச்சிகள் பாடுவ குயில்கள்!
அவள் கண்டின்புற ஆடுவ மயில்கள்!
இன்னிசை கேட்கும் வானக மெங்கும்!
பன்னிறங் காட்டும் பாரெலாம் கவினுற!
நண்ப! நாம் வந்த வழியினைப் பாராய்.
அதோ! நகர்க் கோட்டையின் அழகிய வாசல்
அதுமுதல் இதுவரை அளவிலா மாந்தர்
திரள் திரளாக வருவதைப் பாராய்!
காலையும் மாலையும் கடையே கதியாய்க்
காலை மடக்கிப் பேழையுட் பாம்பென
கிடை விட்டகலா மூட வியாபாரிகள்,
ஆலைக் கரும்பென வேலையிற் சிக்கிச்
சாறு பிழிந்து வீறு குறைந்துள

ஏழைக் கூலிகள், ஏவலர், மற்றும்
பற்பல தொழில்களில் பயிற்சி மிக்குள்ள
அற்புதக் கம்மியர், அல்லும் பகலும்
ஓயா துழைத் துடல் ஓய்ந்திடுவோர்கள்
நெருக்கிய தெருக்களில் குறுகிய மனைகளில்
இருட்டறை யிருந்து குடித்தனம் செய்யும்
பெண்களும் ஆண்களும் பேழ்வாய் நரகெனும்
நகர்தனை விட்டொருநாளே யாயினும்
விடுதலை பெற்று வெளிப் போந்திடுவார்.
இயற்கையின் எல்லையை மிதித்ததும் அவர்தம்
அயர்ச்சி ஒழிந்தனர், ஆனந்தரும்
உற்சாகத்தால் ஓடுகின்றார்பார்!
எதிர்ப்புறம் காணும் மலைச்சரிவைப்பார்!
வர்ணப் பூக்கள் மலர்ந்தன போலப்
பன்னிற ஆடைகள் தரித்திடு பெண்கள்
இன்புற்றிறங்கணும் இருப்பதைப் பாராய்!
இலம் ம் என்றசை இ இா தெந்நாளும்
நிலந்தலை வணங்கி நெடிதுழைத்தந் நில
வளம் தரு பொருளெலாம் வரைவின்றிப் பெற்றதால்
உளம் ம் என்றுவகை உற்றிடும் உழவர்
அன்னையின் கருணையை அகந்தனிற் கொண்டு
ஆவினஞ் செய் நலத்தருமை பாராட்டி
ஞாயிறு போற்றி, நல்விழாக் கண்டனர்;
கட்டுப்பாடோ கணக்கோ காணார்.
இட்டம்போல் எலாம் எக்களித்திடுவர்.
கேட்டனை? இவர்களின் ஆட்டமும் பாட்டமும்?
ஆர்ப்பரித்திவர் செயும் ஆரவாரங் கேட்(டு)
ஆள்வினை துஞ்சிடும் ஆண்மை நான் பெற்றேன்.

வரகுணன் உம்முடன் கூட உலாவ வருவதால்
அடியேன் அடையும் நன்மை அனந்தம்.
ஆயினும் இந்தப் பாமர மக்கள்
கூடிக்குதித்துக் குடித்துக் களிக்கும்
இடம் செல என்மனம் இடந் தரவில்லை.

ஆட்டமும் இவர்களின் ஆர்ப்பாட்டங்களும்
பாட்டெனக் கூறும் பாமரக் கூச்சலும்
பேய்பிடித்தவர் போல் பிதற்றுவதும் எனக்(கு)
என்றும் பிடிக்கா இன்பந் தந்திடா
ஆதலின் அவர் இடம் போதற்கொவ்வேன்.

(அருகில் குடியானவர் சேர்ந்து கும்மியடித்துப் பாடுகின்றனர்)

அவன் : சின்னப்புள்ளே செங்கமலம் ! சிங்காரக் கொண்டைக்காரி !
சிங்காரக் கொண்டைக்கே நான் செந்தாழம்பூ ஆமாவேன் — சின்ன

அவள் : கின்னாரக்கார மாமா கேலிகள் செய்யவேண்டாம்
கேலி நீ செய்யலாமா ? சோலியைச் சொல்லு மாமா — கின்னார

அவன் : கண்ணாலேவாட்டி யென்னைக் கருவாடாச் செய்து போட்டே !
கருவாடாச் செய்த பின்னே தெருவோடே போறே பெண்ணே — சின்ன

அவள் : கண்ணாலம் செய்வேனென்னு கைபோட்டுச் சொன்னேமச்சா !
கைபோட்டுச் சொன்னபேச்சு பொய்வார்த்தையாக லாச்சு! — கின்னார

அவன் : பொய்யல்ல பொன்னுக்குட்டி பொரட்டாசி மாசம்பாரு
பொரட்டாசி போகவேணும் திருப்பூட்டிக் காணவேணு — சின்ன

அவள் : மெய்யான நேசமின்னா ஐயாவைக் கேட்டுப்பாரு
அய்யாவுக்காகு மென்னா ஐப்பசிக்கென்னைப்பாரு—
— கின்னார

குடியானவர்கள் கூடியிருந்த இடத்திற்கு அருகே
வாஸ்துவும் வரகுணனும் வருவதைக்கண்ட
குடியானவர்கள் தங்கள் ஆட்ட பாட்டங்களை நிறுத்தி
மரியாதையாய் வரவேற்கின்றனர். அவர்களுள் வயது
முதிர்ந்த ஒருவன் முன் வந்து வாஸ்துவை நோக்கி

கிழக் குடியானவன் *மருத்துவச்சாமி ! வருக !! வருக !!!*
*ஏழைகள் கூடி இன்புறும் வேளையில்*
*இவ்வழி வந்தெமை இன்புறச் செய்தீர்.*
*அறிவிற் சிறந்தீர் ! அன்பு மிக்குடையீர் !*
*வறியவரோடும் பிரியமாய்ப்பழகு நும்*
*பெருந்தன்மைக்குப் பெரிதும் வணக்கம்.*
*ஏழையேம் தரும் இத் தேறலை எம்முடன்*
*அருந்திடில் அடைவோம் அளவில் ஆனந்தம்*
*வையகத் தைய நீர் வாழ்க பல்லாண்டு !*

வாஸ்து *அன்புடன் நீங்கள் அளித்திடும் கள் எனக்(கு)*
*அமிழ்தினும் இனிதாம், அனைவர்க்கும் வந்தனம்.*
*எல்லா நலன்களும் எய்துக நீவிர் !*

(குடியானவர்கள் எல்லாரும் வாஸ்துவைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கின்றனர்)

கிழக் குடியானவன் *திருநாள் இன்றெமை தேடி நீர் வந்ததும்*
*இருந்தெம் மோடு கூடிக் களிப்பதும்*
*பாக்கியம் என்றே பகர்வோம். அன்றியும்*
*சாலவும் பொருந்தும். தந்தையும் தாங்களும்*
*அந்த நாட் கொடிய ஆபத்தான*
*காலத் தெம்மைக் காப்பாற்றி விட்டீர்.*
*பயங்கரமான வியாதி! அதற்கொரு*
*மருந்தும் இல்லை ! மாற்றும் இருக்கலை !*
*காய்ச்சல் கண்டதும் கட்டிகள் காண்பதும்*
*சில மணிக்குள்ளே சீவன் போவதும்*
*தந்தையார் அதற்குத் தக்கதோர் மருந்தைக்*
*கண்டறியும் வரை கணக்கிலா மக்கள்*

மாண்டனர் அந்நாள். ஆண்டகை நீரோ
அஞ்சா தெங்கும் சென்றெவ்வெவர்க்கும்
ஆறுதல் கூறி ஆதரவளித்தீர்
குடிசைகுடிசையாய் நுழைந்து நடுங்கித்
துடித்தார்க்கெலாம் தைரியம் சொன்னீர்
தந்தையார் தயவுடன் அன்றுயிர் மீட்ட
சவங்களில் பலபேர் இவண் இப்போதுளர்
மக்களுக்குதவிடும் மாதவத்தோரை
எக்காலத்தும் இறைவன் காப்பான்
தீனதயாளு என்றெவரும் புகழ்ந்திட
ஏழைகட்குதவி செய்திருப்பீர் என்றும்

எல்லோரும் சேர்ந்து — வாழ்க! வாழ்க!! வைத்தியர் வாழ்க!!!

வாஸ்து — உதவி செய்பவர்க்கும் உதவி புரிந்திடும்
ஈசன் ஒருவனே ஏற்றுதற் குரியவன்
வாழ்த்துவீர் அவனை, வணங்குவீர் அவனடி.

(குடியானவர்கள் கூட்டத்திலிருந்து வாஸ்துவும் வரகுணனும் அப்பால் செல்கின்றனர்)

வரகுணன் — பேராசிரியரே! புகழ்கேட்டுளந் தனிற்
பேரானந்தங் கொண்டேன். உம்மனத்(து)
எழும் உணர்ச்சிகள் தாம் எவ்விதம் இருக்குமென்(று)
அறிந்திட விழைவேன். ஆற்றலும் அறிவும்
படைத்திடுவதனல் அடைந்திடும் பற்பல
நன்மைகள் எல்லாம் நனி சிறந்திடுமிவ்
ஏழைகள் கூறும் இயன்மொழி வாழ்த்து.
என்னே இவர் உமைக் கண்டதுங் கொண்ட
பிரியமும் உளந்தனிற் பெருகிய மகிழ்ச்சியும்
கிழவன் மகனிடம் பெருமிதத்தோ டுமைச்
சுட்டிக்காட்டினன். சுற்றிலும் உள்ளவர்
தேவனே அன்றித் திருவுடை மன்னனே?

ஆவிர் நீரென யாவரும் கூடி
நெஞ்சில் நிறைந்த நன்றி யறிவுடன்
அஞ்சலி செய்தும் அடி பணிந்திட்ட
காட்சியைக் கண்டு களித்தனன், நீரோ ?

வாஸ்து

சில அடி மேலே செல்வோம், எதிர்உள
பலகைக் கல்மேல் தங்குவோம் சற்று.
பலமுறை இவ்விடம் பண்டைநாள் வந்து
தனிமையிற் றங்கித் தவம் புரிந்துள்ளேன்.
ஈசனை எண்ணிச் சாதனை செய்ததில்
ஊணும் உறக்கமும் ஒழித்தேன் பலநாள்.
அந்நாள் என்மனத் தாதர வதிகம்
ஐய மில் உறுதியோ டயர்வற முயன்று
ஐயன் கருணையைக் கைவரப் பெற்று
வையக முற்ற வெய்துயர் போக்கிட
எண்ணித் தினந்தினங் கண்ணீர் வடித்தேன்
பயங்கரக் கொள்ளைநோய் தணிந்திட வேண்டினேன்.
பாமரக் கும்பலின் வாயுரை வாழ்த்தெனைப்
பரிகசிப்பதுபோல் பற்றுமென் உள்ளம்
தந்தையும் யானும் சற்றும் இவர்களின்
வந்தனைக் குரியவர் அல்லர் என்பதை
என்மனம் அறியும். இறைவன் அறிவான்.
தந்தையோ உண்மையிற் பெரியார். அவரது
சாந்தமும் தயையும் மாந்தர் மனத்தைக்
காந்தமாய்க் கவர்ந்தன. கால மனைத்தும்
இயற்கைச் சக்திகள் இயங்கும் வகையும்
எண்ணரும் பொருள்களின் இயல்பும் அறிந்திடத்
தன்னைப் போன்ற வாதிகள் தம்முடன்
இருட்டறை தங்கி அங்கே ஞாலக்
கருப்பொருள், உரிப்பொருள் கண்டிட முயல்வார்.
நேர்மாறான இருவகைப் பொருள்களைச்
சேர்த்து முற்றிலும் வேறாக்கிடுவர்.
தொட்டாச் சுருங்கியைத் தோதகத்தி யுடன்

கட்டிப் போடுவன் ; காமவல்லியை
நட்டா முட்டியில் நயந்திடச் செய்வர்.
சாதியைப் போதியில் தாவிடச் செய்வர்.
ஏறு சிங்கியை இறங்கச் செய்து
இறங்கு சிங்கியை ஏறச் செய்வர்.
சிரியா நங்கையைப் பிடித்துச் சிறிய
நாகத்துடன் விளையாட விட்டிடுவர்.
நாகந்தொட்ட நங்கையின் பாட்டையும்
நங்கையைக் கொண்ட நாகத்தின் ஆட்டையும்
கண்டுளங் களிப்பர் காதலர் தம்மை
ஒன்றாய்ச் சேர்த்து உரிமையில் வேறோர்
படுக்கையிற் கிடத்திப் பயன் பெற்றிடுவர்.
புது மணங்கண்டு போதரும் பொருளை
மருந்தெனப் புட்டியில் வைத்துக் கொடுப்பர்.
இதுபோல் மருந்துகள் எண்ணில கண்டோம்
எத்தனை பேர்க்கிம் மருந்தைக் கொடுத்தோம்.
நித்தமும் எத்தனை மக்கள் மகிழ்வுடன்
வாங்கித் தின்றபின் வாரா தொழிந்தனர்.
மாமாரியா லுயிர் மரித்தவர்களினும்
மருந்தால் மடிந்தவர் மிகப் பலராவார்.
பலர்க்கிவ் விஷத்தை நானே கொடுத்தேன்
உலகை வெறுத்தவர் உண்டதும் சென்றார்.
உண்ணாதிருந்தும் உயிர் வாழ்கின்றேன்,
ஆயிரம் பேரைக் கொன்றவன்தான் அரை
வைத்தியன் என்னும் உரைப்படி நான் முழு
வைத்தியன் ஆவேன் என்பது திண்ணம்.
எத்தனை பேரைக் கொன்றேன் தினந்தினம் !
கொலைப் பாதகரைக் கொண்டாடி மகிழும்
நிலையிலா மக்களின் செயல்மிக வியப்பாம் !

வரகுணன் இப்படி நினைத்தேன் இடர்ப்படுவீர் நீர் ?
தப்போ சரியோ தனக்குத் தெரிந்ததைத்
தகப்பன் மகனுக்கு அறிவித்திடுவான்
தந்தைசொல் மேலாம் மந்திரம் மென்றதை

மைந்தன் திறம்படப் பயின்றிடு வதனல்
வளர்ந்திடும் வைத்தியக் கலைமுதற் பலவும்
வாழையடி வாழையென வரும் மனிதன்
காலத்துடுதான் கற்றுள கலைகளை
உலகோர்க் குரைத்து உண்மையை வளர்ப்பான்
சிற்றறிவால் வேறென் செய முடியும்?

வாஸ்து
தப்புக்களஞ்சியந் தனில் நம்பிக்கையை
முளைத்திடச் செய்ததை வளர்த்திடுந் தீவிர
ஆசையைப் பெற்றோன் அதிசய மனிதன்.
அறியாப் பொருள் மீதாசை கொண்டழுவான்.
அறிந்துள வொன்றை அநுபவித்தறியான்.
சிந்தையை வருத்து மிச்சிந்தனையாற் செவ்
அந்திப்பொழுதின் அருமையைக் குலைப்பதோ?
காலை தொடங்கிக் கடும்பகல் முழுதும்
வேலை செய்தலுத்து வீடு திரும்பும்
ஏழை மக்களின் இதயம் களிக்கவும்
வேளையில் ஊணும் வேண்டாராகி
மூளையைக் கலக்கும் முயற்சியில் சிவந்து
காய்ந்த உள்ளம் சாந்தி யுற்றிடவும்
சந்தி முன்வரும் நல்அந்திப் பொழுதின்
தூய்மையும் மாசுறும் துயர்தரு நினைவால்
அழுகணிச் சித்தம் ஆகா திப்போ(து)
ஆங்குயர் குன்றின் அழகிய சரிவில்
பாங்குற வமைந்த பாடியைப் பாராய்!
பச்சையில் மணிகளைப் பதித்துப் பார்ப்பவர்
இச்சை கொளும்படி எழிலுற விளங்கும்
புதிய நலங்களைப் புரந்தர வெண்ணிக்
கதிரவன் குட திசைக்கடலகம் நுழைந்தான்.
இறகுத் தேர்மீதேறிப் பரிதிபின்
பறந்தெப்பொழுதும் தொடர்ந்து சென்றிடவும்
வர்ணகத்திருந் திவ் வையகக் காட்சியைக்
காணவும் விழைந்தனன், கடத்தற்கரிய
வானுயர் மலை இனி வழிமறிக்கா எனை.

வெள்ளியை உருக்கி வார்த்தது போன்று
தெள்ளிய நீருடைச் சிற்றோடைகள் போய்
காய்ச்சிய பொன்னைப் பாய்ச்சிய தென்னக்
கலங்கிய நீருடைக் காறுறுகளுடன்
கலக்கும் காட்சியும், கரைகாப்பில்லா
உததி மிதலைகள் ஓங்கி விழுந்து தன்
இதயத் துடிப்பை இயம்பும் எறி கடல்
இளவெயிற் படிந்து ஒளிதருங் காட்சியும்
வானத்திருந்து காண விரும்பினன்.
உலகுயிர் வாழ உஷ்ணமோடொளிதரும்
அலர்கதிர் ஞாயிறும் ஆதித் தெய்வம்
அடிவானத்திற் கப்பால் சென்றது.
மங்கிய தொளியும்; கங்குலும் வந்தது.
போன இரவுடன் புதுப்பகற்கிடையில்
வானகம் மேலும் வாரிதி கீழும்
சூழ்ந்திட நெஞ்சிற் றோன்றுமோர் எண்ணம்!
பரிதியைத் தொடர்ந்தவன் கதிர்தரும் அமிழ்தைப்
பருகிய வண்ணம் பறந்திட வேண்டுவன்.
பகற்கனவேஇது! பகலோடழிந்தது!!
மனப்பரியேறி வானம் அளக்க
நினைத்தென்? அந்தோ நிலத்திலிருந்து
இம்மியும் மேலெழ இயலா உடம்பால்
எனினும் மேல்எழுந் தேற்றம் அடைந்திட
உயிர்க்ணம் அனைத்தும் ஓயா துழைக்கும்.
கானம்பாடிக் களிப்புடன் பறக்கும்
வானம்பாடியும் வரைபல தாண்டி
மேகத்திடையே மிதக்கும் பருந்தும்,
வாவியும் யாறும் தாவிப்பறந்து
தாயகம் சேரும் நாரையும், யாவும்
மேலும் மேலும் பறந்திடச் சலியா!

**வரகுணன்** என்றன் மனத்திலும் இவ்வாறெல்லாம்
எப்போதாகிலும் சிற்சில வேளையில்
எண்ண அலைகள் எழும்புவதுண்டு.

எனினும் இதுபோல் உயர்தரமான
சிந்தனையென்றும் தோன்றியதில்லை.
காரும் புயலும் காடும் மலையும்
காவும் தொடர்ந்தென் கருத்தைக் கவரா.
பறவையினத்தின் பறக்குந் திறங்கண்டு
அதுபோல் சிறகுகள் அடைந்திட விழைவேன் !
உள்ளத் துணர்வால் உற்றிடும் இன்பம்
கொள்ளக்கிடையா குவலயத்தது போல்
அந்நாள் முன்னோர் அறிவை வளர்ப்பான்,
எண்ணு தெண்ணி எழுதி வைத்துள்ள
அரும்பெரும் நூல்களை ஆய்ந்திடும்போது
அடைந்திடும் இன்பம் அளவிடற் கரிதே.
அதிலும் இதுவரை வெளிவராப் பழைய
சுவடியைக்காணின் உளத்தெழும் களிப்பேர்
உவகையை வாய் விட்டுரைத்திடப்போமோ !

வாஸ்து
உன் மனத்துள்ளிருந் துசுப்புவதொ ரேவிசை
என் மனத்துட் குடியிருப்பார் இருவர்
புலன் வசப்பட்டுப் பொறிவழிச் சென்றிவ்
உலக மாய்கையில் உழன்றிடும் ஒருவிசை.
மாயமாம் உலகை மறந்து வான்செலும்
தூய குறிக்கொடு துலங்கும் மற்றது.
ஒன்றையொன் றெழுதித்திட ஓயா துழைக்கும்
அந்தரத்தியங்கும் கந்தர்வாதிய
பூதகணங்காள் ! விரைந்திவண் வாரீர் !
புதிய வாழ்க்கையை விரும்பினன். அதனால்
என்றனைப் புதிய இடங்களுக்கழைத்துச்
சென்று புதுப்பொருள் துய்த்திடச் செய்வீர்.
மண்ணுலகாளும் மாட்சியிற் பெரிதாய்
விண்ணிடைப்பறக்கும் விஞ்சையை மதிப்பேன்.

வரகுணன்
மாநிலம் வதியும் மக்களைப் பிடித்து
வாட்டி வதைத்திட வழி பார்த்தென்றும்
சுற்றிலும் நம்மைச்சூழ்ந் தொளித்திருக்கும்
பேய்களை என் நீர் வாய் விட்டழைத்தீர் ?

துன்பம் இழைப்பதே தொழிலாய்க் கொண்டுள
வன் பகைப் பேய்களை வலிய அழைப்பரோ ?
எண்ணில அவர்படை எங்கும் இருந்திடும்.
நாற்றிசை வீசும் காற்றுடன் வந்திடும்.
வடதிசைப் பனியுடன் வந்திடும் வாடையின்
விடத்தால் மேனியின் வீறு குறைந்திடும்.
குண திசையிருந்து குளிரொடு வரும் அக்
கொண்டல் கொணரும் கொடுநோய் பலப்பல.
தென் திசைப்பிறந்து செந்தமிழ் பயின்று
மந்த மாருதமென வந்திடும் தென்றலும்.
சண்டமாருதமாய்ச் சலுதியில் மாறி
இன்பம்போல் தரும் எல்லையில் துன்பமே !
குடதிசைப் பிறந்த கோடையில் மிதந்து
வந்திடும் புதுவகை வாசம் கலப்பதால்
உள்ளமும் உடலும் உறுதி கெட்டலையும்.
பணி செய்பவைபோற் பசப்பி நம்மிடம்
அடுத்துக் கெடுக்கும் ஆகா உறவிவை.
ஆதலின் இதை விட்டப்பாற் செல்வோம்.
கங்குலும் வந்தது, காரிருள் சூழுமுன்
இங்கித மலைக்குச் சென்றிடுவோம் நாம்.
இருட்டும்போது தான் எல்லோருந் தம்
இருப்பிடம் சேர எண்ணுவர் இயல்பாய்.
இருட்டில் எதை நீர் இப்படிப் பார்க்கிறீர் ?
எனக்கவண் ஒன்றும் புலப்படவில்லையே.

வாஸ்து கருநாய் ஒன்றைக் கவனித்தாயா ?
கட்டைக் காட்டினுட் சுற்றிச் சுற்றித்
துள்ளிக் குதித்துத் திரிவதைப் பாராய் !

வரகுணன் குனிப்பாய் அதனைக் குறிப்பதற் கென்னுள(து)
அறிவேன் நாயை அப்போதிருந்தே !

வாஸ்து என்னவென் றதனை எண்ணுகிறாய் நீ ?
நாயென்றோ நீ நினைத்தாய் அதனை ?

வரகுணன் ஆம் ! இதிற் சற்றும் ஐயப்பாடிலை
தலைவனைக் காணு தலைந்திடும் நாய்தான்.

வாஸ்து வரவரச் சிறிய வட்டமாய் சுற்றி
வருவதைப் பாராய் ! மற்றிது செல்லும்
வழியெலாம் தீ யெரிவதுபோல் ஒளிவிடும்.

வரகுணன் கருநாய் ஒன்றே காணும் என் கண்கள்
உருவெளித் தோற்றமே நமக்குத் தெரிவது.

மந்திரத்தால் என் கால்களைப் பிணித்து
வஞ்சித்திட விது வழி பார்க் கிறதென
நெஞ்சில் ஓர் எண்ணம் நிகழுமிப்போது.

தன் எஜமானைத் தப்ப விட்டலைந்து
அறிமுக மில்லாப் புதியவரைக் கண்டு
அருகில் வருவதற் கணையும் அஞ்சும்.

வாஸ்து (உற்றுக் கவனித்தபடி) வரவர வட்டமும் குறுகி வந்திடும்
அருகினில் நம்மிடம் அணுகுவதைப் பார்.

வரகுணன் நிலத்திற் படுக்கும், குதிக்கும், குலைக்கும்.
வாலைக் குழைத்து வருமிப்பொழுது
நிச்சயம் நாய்தான் பேய் பிசாசன்று.

வாஸ்து நாயே ! வா ! வா !! நாம் போம் வழியே !!!

வரகுணன் உம்மையே பார்க்கும். உமைப்பின்பற்றி
நீர் நடந்திடும் போததுவும் நடக்கும்.
நின்ருல் அதுவும் கிடக்கும் அவ்விடம்.
பேசினுல் மிகவும் பிரியமாய்க் கேட்கும்.
இழந்த பொருள்களை எடுத்துக் கொடுக்கும்.
கைக்கோல் எனினும் கடலுட் குதித்துத்
தேடி எடுத்துச் சேர்க்கும் உம்மிடம்.
நல்ல சாதி நாய் இது வாகும் !

வாஸ்து சரிதான் உம் சொலிற் றவறிலை சற்றும்
எரிவாய்ப் பேயின் ஏற்பாடன்றிது.
பழக்கத்தால் வரும். பயங்கொள என்னுள ?

வரகுணன் *நன்றாய் பழகிய நாயெனில் ஞானியும்*
*அன்போடதனை அடைந்திட விழைவன்*
*அனைத்துயிர் ஒன்றென் றறிந்திடும் உங்கள்*
*அன்பிற் கிதுவும் அவசியம் உரித்தாம்.*

— 0 —

இருவரும் திரும்பிக் கோட்டை வாசலுள்
நுழைகின்றனர் !
நாயும் பின் தொடர்ந்து செல்லுகிறது.

## கல்லூரியில்

# தன் அறையுள் வாஸ்துவும் நாயும்.

---

வாஸ்து

கரம்புங் கழனியுங் கடந்திங் குற்றனன்
இரவும் கரு நிறத் திரை விரித்திட்டது.
வனப்புறு காட்சிகள் யாவும் மறைந்தன.
தனிமையும் இருளும் தந்திடும் சஞ்சலம்
சஞ்சலத்தால் மிக அஞ்சிடும் நெஞ்சில்
தீய எண்ணங்களும் செய்கையும் சேரா
பேராசைகளும் பேதமும் விடுத்து
அனைத்துயிர் மாட்டும் அன்பே கொண்டிடும்
நினைப்பால் மனமும் நேர்மையுற்றிலகும்
சித்தமும் தெளிந்து சிவன்பால் சென்றிடும்.

—

சீ! சீ! நாயே! சும்மா இராயோ?
ஓயாதேன் நீ ஊளையிட்டலறுவாய்?
துடிதுடித் திப்படித் துள்ளிக் குதிப்பதேன்?
அடிக்கடி கதவின் அண்டையிற் செல்வாய்
வாசற்படி தனில் வாசமென் கண்டாய்?
வெளியே உன்தன் விளையாட்டால் எனைக்
களித்திடச் செய்தாய். காப்பேன் அதனால்
சொற்படி கேட்டுச் சும்மா இருந்தால்
அற்பனே இனியும் ஆதரித்திடுவேன்
மூலையில் ஒதுங்கி முடங்கிக் கிடந்திடு.

—

எரியும் விளக்கின் எதிரே அமர்ந்து
தனிமையில் அறையுள் தங்கும் போழ்தில்
உள்ளவா றுண்மையை உணர்ந்திட முயலும்
உள்ளத்துள்ளே ஒளி எழும் உறுதி.
அகத்தின் இருளும் அகன்றிடும். அங்கிலைப்
பகுத்தறிவின் குரல் பாங்குடன் கேட்கும்.
மிகுந்த நம்பிக்கையால் வெறிகொளும் உளமும்
ஞாலக் கருவின் அலைகளைத் தாண்டி
மூலப்பதிக்குச் சென்றிட முயலும்

நாணிலர் நாயே ! வாயை நீ மூடு ! உன்
ஏடுெலி பெரிதும் இடர்ப்படுத்தும் எனை
தூய்மையும் சாந்தமும் தோயும் உளத்தெழும்
ஆழ்ந்த எண்ணங்களை அழிக்கும் உன் குரல்.
அறியாப் பொருளை மதியான் மனிதன்
அதனால் நியாயமும் நன்மையும் ஈதென
அறியாதவற்றை அலட்சியம் செய்வான்
அதுபோல் நீயும் அறியா திரைவாய்.

என்னதான் உறுதி கொண்டிருப்பினும் சஞ்சுதியில்
என்மனம் அமைதியை இழந்திடும் மீண்டும்.
சாந்தியோர் சிறிதும் தழைப்பதும் இல்லை.
போதுமென் மனமாம் பொன் செயும் மருந்தோ
ஏது செய்திடினும் எனக்ககப்பட விலை
ஒரு கணம் சுரந்த ஊற்றும் மறுகணம்
வறண்டிடும். மற்றது மனத்துள் என்றும்
உலவா ஊற்றாய் நிலவிடச் செய்யும் .
உபாயமும் அறியேன். — ஓயா திவ்வித
ஏமாற்றங்கள் ஏற்படும் அடிக்கடி
அனுபவத்தால் வரும் அவநம்பிக்கையால்
துயர் உறும் மனத்திற் சோகமே பெருகும்.
ஆயினும் மனத்தெழும் அடங்காத் தாகம்
தாயினைப்போல் எனைத்தயவுடன் வருத்திச்
சளத்திற் பிணிப்பட் டவற்றிற் றவிக்கும்
உளத்தின் திகைப்பை ஒழித்துப் பயன்தரும்
உறுதிப் பொருள்களில் உறுத்தும் ஆசையை
வையகப் பொருள்களில் மையல் அகற்றி
தெய்வீக வாழ்விற் சிந்தையைச் செலுத்த
ஆண்டவன் அருளையே வேண்டுவன் யாண்டும்.
திருவருட்பேற்றை பெறும் வழி காட்டத்
திருவாசகம்போல் ஒரு வாசகம் இலை.
திருவாசகத்தைத் திரும்பவும் படித்திட
இது போதென்மனம் பெரிதும் விழையும்.

(புத்தகத்தைப் பணிவுடன் எடுத்துத் தியானித்துக் கயிறு போட்டுத் திறந்து பார்த்துப் படிக்கிறன்)

ஆதியில் வாக்காய் அமர்ந்தாய் போற்றி !
வாக்கொலி நாதம் பலசொற் கொருபொருள்
வாசகங் கூறும் வாய்மையை விளக்கிப்
பேசக் கூடிய பெரியவர் யாருளர் ?
காட்சி யளித்தென் கவலையைத் தீர்ப்பரோ ?
என்மனத் தியல்பாய் எழும்பும் ஒளியாம்
எண்ணமே துணையாய் உண்மையைக் காண்பேன்.
ஆவே சந்தரும் ஆத்தும உணர்ச்சி கொண்டு
அறிவேன் வாசகம் அறைந்திடும் பொருளே.
நாதம் ஆதியென் றேதும் நூல்களின்
வாதந் தனையொவ் வாதென் மனமும்
ஒலிமுதற் காரியம் எனினும் அதுவே
ஆதிக் காரணம் ஆவதெப் படியோ !
ஒலியெனப் படுவதும் புலன்வழிப் பெறுமோர்
பொறியுணர் வாகும் — ஒருவர்க் கிதனை
உணர்த்திட உள்ளே ஒருபொருள் வேண்டும்.
எங்கும் நிறைந்த நாதப் பொருளே
அங்ஙனகயிற் கனியென அறிந்தது வாகும்
அறிவே ஆதி ஆதல் நீதி.
சொல்லறு வெளிதனில் சத்திகள் ஐந்தும்
எல்லையில் கூடத் திடையறு தடித்திட
ஏதோ ஒருவிசை இருத்தல் அவசியம்,
ஆதலின் சத்தியே ஆதியென் றிடுவேன்.
விசையும் இயங்கா விடத்துப் புலப்படா
இயக்கம் இல்வழிச் சக்தியும் இலதாம்.
இயக்கம், அசைவு, செய்கைஎன் றறையும்
தொழிலே ஆதியென் றேதிடத் தகுமே.

((மீண்டும் அமைதியின்றி அலையும் நாயைப் பார்த்து)

ஓ ! ஓ ! நாயே ! ஊளைத்தை வாய் மூடு.
ஓயா திப்படி ஊளையிட் டால்தான்
நாயா வாயோ ? நாணமும் இலேயோ !

இவ்வறை என்னுடன் இருந்திட வேண்டில்
எவ்வித இரைச்சலும் செயக்கூ டாது.
ஓயா திப்படிக் குரைத்திட ஒவ்வேன்.
இருவரும் சேர்ந்துஇவ் விடத்தில் கூடி
இருந்திட முடியா தெனவே இருவரில்
ஒருவர்இவ் வறைவிட் டொழிந்திடல் வேண்டும்.
விருந்தினன் உன்னை வெளியில் போம்படி
வருத்துதல் உலக வழக்கல வாதலால்
சென்றிடு நீயே! திறந்துள கதவும்!

—

என்னநான் காண்பது! இந்திர சாலமோ!!
நான்என் கண்களை நம்பக் கூடலை!
என்னுடன் வந்தவிக் குக்கலோர் கணத்தில்
இத்துணைப் பெரிதாய் எப்படி வளர்ந்தது?
இருகால் தூக்கி எழுந்து நின்றிடும்!
இதனைஇப் போதெவர் நாயெனச் சொல்வார்?
நாய்போலில்லை! ஆயின் இது என்?
வாய்நிறை யப்பல்! தீயுமி ழுங்கண்!!
அந்தகா ரத்துறை ஆங்கா ரப்பேய்!
ஆம்! அறி வேன்இதை ஆட்கொளும் முறையும்.
அக்கரஞ் சொன்னல் ஆடும் சொற்படி.
(கூளிகளும், குட்டிப்பேய்களும் வெளியேயிருந்து பாடுகின்றன)
அகப்பட்டுக் கொண்டான் அறையி னுள்ளே
அந்தோ! பொறியினில் நரிபோலே!
இகல்செய் திவனை வெளியேற்ற
இயலா ததனல் இவன் பின்னே
அறையுள் எவரும் நுழையாதீர்
அவனுடன் நீங்களும் சிறைப்படுவீர்!
மறைவாய்ப் பதுங்கிக் காத்திடுவோம்,
மாயம் செய்தவன் வரும்வரைக்கும்
மேலும் கீழும் நாற்புறமும்
மெதுவாய்ச் சுற்றிப் பறந்திடுவோம்,
காலம் பார்த்தே தந்திரமாய்

கடுக்காய் கொடுத்தவன் வந்திடுவான்
நகந் தோன்றிய நாள் முதலாக
நம்முடன் நிழல்போல் அன்பாகத்
தகப்பனைப்போல் நமைக் காத்தானே.
தந்திர மந்திரம் வல்லவனே.

— O —

வாஸ்து என் முன் எழும் இப்பேயை அடக்கும்
மந்திரம் தன்னை மனத்திற் கொள்வேன்
மந்திர வலியால் மயங்கிய பேயினி
அடுப்பங்கரையில் ஆனைபோல் உப்பி
அறையை நிறைக்கும் — ஆவியாய் மாறிக்
கூரையின் வழியாய் ஏறிப்போமோ ?
நில் ! இனிமேலே செல்லாதே நீ !
அடக்கியாளும் என் அடிகளில் விழுந்திடு !
வெற்றுரை யன்றென் வெகுளியைக் கணமும்
காத்திடப் போதிய ஆற்றல் உனக்கிலை.
தீய்த்திடும் உனையென் சினத்தெழும் பெருந்தீ
மூவிலைச் சூலத் தொளிரும் எரிமுன்
மேவிடுவாயோ ! வீண் உன்முயற்சி.

(அறை முழுவதும் வியாபித்திருந்த ஆவிப் படலம் சுருங்கி ஒழிய அடுப்புக்கப்பாலிருந்து சாரண உடையுடன் கலியன் முன் வந்து வணங்கி)

கலியன் ஏனிவ் விரைச்சல் ? யாரோடிப் போர் ?
எசமான் இஷ்டம் — என் செய வேண்டும் ?

வாஸ்து சாரணன் நீயோ ? ஞானியின் காரணம்
கோபம் விடுத்தினிக் குறு நகை புரியவோ ?

கலியன் ஆன்ற விந்தடங்கிய சான்றோய் ! வணக்கம் !
சற்று முன் உண்மையில் நடுங்க வைத்திட்டீர் !

வாஸ்து யாதுன் பெயரோ ?
வீண் இக்கேள்வி !

கலியன் நாதம் ஆதி யென்றேதும் சுருதியின்
வாதந்தனை யொவ்வாது மறுத்து உன்
அறிவால் ஆதியை ஆராயும் நீ
அடியேன் பெயரை அறிந்தென் அறிவாய்?

வாஸ்து சனியன், கலியன், சண்டிப்பேய் எனும்
பெயர்கள் ஒருவரின் இயல்புணர்த்திடல் போல்
நும் போலியரின் நுண் மாண்பனைத்தும்
கண்போல் விளக்கிக் காட்டும் பெயர்கள்
ஆதலின் உந்தன் பேர்தனைக் கூறாய்?

கலியன் நான் யாரென்பதை நவின்றிடில் நானே
என்றும் தீதே புரிந்திட எண்ணிச்
செய்யும் சூட்சியின் முடிவால் யார்க்கும்
நன்றே பயக்கும் சக்தியின் சாயை நான்.

வாஸ்து தத்துவப் பொருள் உம் உத்தரத்துளதோ?

கலியன் நித்தமும் ஈசனை நிந்தித் தவனுரை
கொள்ளாப் பிடாரி. கொடுமகங்காரி என்(று)
எல்லோரும் என்னை இழிவு செய்திடினும்
என் செயலில் சிறிதேனும் தவறிலை.
முடிவும் முதலும் ஒன்றேயாயின்
இடையில் தோன்றியிருப்பதுவே சரி
எவறும் பாழிருந்து வெளிப்பட்டு ஒளிதனில்
விளங்கிடும் அனைத்தும் மீண்டும் முடிவில்
பாழ் வெளிக்குட்போய் பதுங்கிடுமாயின்
பரிணமித்தென் பயன்? பதைப்பறப் பாழுட்
சும்மாயிருப்பதே சுகமெனச் சொல்வேன்.
தோன்றியிருந்திடில் துன்பமே இலையே!
பழியும் பாவமும் அழிவும், கழிவும்
இழிதகை யனைத்தும் எனக்குரித்தானவை.
தீமையெலாம் என் ஆணைக் குரித்தாம்.

வாஸ்து சாயை யென்றுன்னை சாற்றுவா யெனினும்
மாயையின் பூரண வடிவுனக் குளது!

கலியன்

உள்ளவாறுண்மையை உரைப்பேன் உனக்குக்
கள்ளங்கபடிதிற் கடுகளவும் இலை.
பிழையெலாம் திரண்ட பிண்டமு மெனினும்
பின்னமில் பூரண பிம்பமென்றெண்ணி
பேதை மனிதன் பெருமிதம் கொள்வான் !
ஒளிதனைப் பெற்ற இருள் எனும் ஆதித்
தாயின் சாயையின் சாயை நான் ஆவேன்
ஆதியில் அனைத்தும் தானேயாகிய
அந்தகாரத்தில் அவதரித்திடும் ஒளி
இருளில் பிறந்த அவ்வொளியே கூற்றாய்த்
தாயை விழுங்கத் தலைப்படுஞ் சேயின்
ஓயா முயற்சியில் உற்றிடான் வெற்றி
பூதப்பொருளில் தோன்றிய ஒளி அப்
பூதப் பொருட்டுணை கொண்டு நின்றியங்கும்
பூதப் பொருளால் தடைப்படும் முடிவில்
ஊழிக் காலத் திருளில் ஒளிந்திடும்.

வாஸ்து

அழிக்கும் வேலையிற் களிக்கும் உனை நான்
உணர்ந்தேன் இப்போ(து) ஊழிக் கூத்தின்
பேரழிவுன்னால் பெயராதெனவே
சிறுகச் சிறுகச் சிதைத்திடுவாயோ ?

கலியன்

சிதைக்கும் தொழிலிலும் இதுவரை வெற்றி
கிடைத்திடவில்லை. என்ன முயன்றும்
உலகை யழித்திட முடியவே யில்லை
சூனியத்தோ டெதிர்மாறாய்ப் போரிடும்
நானிலம் தன்னை நலியாதாக்கி
காக்கும் தெய்வீக சூக்கும சக்தியை
அழித்திட எண்ணி அனைத்தும் பார்த்தேன்.
சூறாவளியால் தொலைத்திட நினைத்தேன்.
பூகம்பத்தால் போக்கிட முயன்றேன்.
பேரிடி, பெருமழை, பெருந்தீயொடு புயல்
இவற்றால் இந்த நிலத்தையும் நீரையும்

இல்லாமற் செய்ய இயலாது அன்றியும்
உயிர்க்கும் சக்தியோர் சிறிதும் குறையலே
உயிர்க்கணம் அனைத்தும் வெறுத்தன என்னை.
பொல்லா மனிதனும் கொள்ளான் என்சொல்
ஆ ! ஆ ! எத்தனை ஆயிரங் கோடி
மாந்தரை மாய்த்தேன் ? ஆயினும் மனிதன்
அஞ்சா தின்றும் அவமதிப்பான் எனை
உலவா ஊற்றெனப் பெருகும் உதிரம்
திரள் திரளாகத் தினம் சனி உயிர்களின்
வரவால் என்றன் வயிற்றெரிச்சல் மிகும்
பைத்தியங் கூடப் பற்றிடும் போலும்.
நிலத்திலும் நீரிலும் நிலையிலாக் காற்றிலும்
அணுவிலும் சிறியவை ஆயிரங் கோடி
கணக்கிலா உயிர்கள் கணந்தொறும் தோன்றும்.
சேற்றில், சகதியில், சில்லெனும் குளிரில்
ஆற்றொணுக் கொடுவெயிற் பாலையின் சூட்டில்
எந்த நிலையிலும் முந்துறும் உயிர்வகை
நீறுசெய் நெருப்பே மீதியாம் எனக்கு
வெறெவ்விடமும் விட்டிடா உயிர்கள்.

வாஸ்து
ஏகப் பொருளை எதிர்ப்பவனோ நீ ?
சாகத்துணிந்த பின் சமுத்திரம் முழங்கால் !
ஆக்கும் சக்தியை, அருட்பெருஞ் சோதியை
காக்கும் தெய்வக் கருணைக் கடலை !
எதிர்த்திட எண்ணினை ! ஏற்கா துன்செயல் !!
வீண் உன் முயற்சி ! வெற்றி உனக்கிலை !!
வெறும் பாழ்பெற்ற வியத்தகு மகனே !
சிறுமதி விடுத்துச் சீர்திருந்திடுவாய் !

கலியன்
செப்பிய அனைத்தும் சிந்தையிற் கொண்டேன்
அப்பால் ஒருநாள் ஆராய்வோம் இதை
இப்போதே கிடச்செப்பாய் அனுமதி.

வாஸ்து
அதை விட்டேக,என் அனுமதியேனோ ?
சன்னலும் கதவும் உன் முன்னல் உளவே !
புகைக்குழலூடும் போவாய் நீயே !

[illegible]
மாயையின் பூரண வடிவு[illegible]

வாஸ்து — வாசற்படியைத் தாண்டிச் செல்லும்
வலி எனக்கில்லை — வழியில் அங்கே
நரிக்காலொன்று மரித்திடும் பாராய்!

வாஸ்து — ஐங்கோணச் சக்கரத்தாலோ அவதி?
அதுவுனை வெளிச்செலத் தடுத்திடுமாயின்
அறையினுள் எப்படி வந்தாய் முதலில்.
உன்போல் பேயைப் பிணித்திட எவையுள?

கலியன் — முன் புறக்கோணம் மூடப்படவில்லை
மூடக்கின் புயங்கள் முற்றிலும் சரியாய்
அடைக்கப்படவில்லை — இடைவெளியிருந்தது

வாஸ்து — தற்செயல்ாய்ச் சிறைப்பட்டாய் இவ்வறை
சொற்படி கேட்டு நீ சும்மாய் இருந்திடு.
நிச்சயமாகவே நீ என் அடிமை
தற்செயலாகத் தானே வந்தாய்.

கலியன் — காட்டில் திரிந்த நாய் கதுமெனத் திறந்த
வீட்டினுள் நுழைந்தபின் வெளிச்செல முடியா(து)
அகப்பட்டறையுள் அவதிப்படும் பேய்.

வாஸ்து — சன்னல் வழியாய்ச் சென்றாலென்ன?

கலியன் — உன்னரக்கரிது. உண்மையிற் பேய்களும்
இட்டம்போல் நடந்திட முடியாது
கட்டுப்பாட்டுக்கடங்கியே வாழும்.
தனியொரு சட்டப்படி முதற்செலும்
வழிதனைத் தேர்ந்திட வாய்ப்பெமக்குளது.
திரும்பும் வழியைத் தெரிந்திடும் உரிமை
எமக்கிலை. சென்ற வழியே மீளத்
திரும்புதல் நியதி, விலக்கிதற்கில்லை.

வாஸ்து — நிரயத்தோர்க்கும் நியதிகள் உண்டெனும்
உரையது கேட்டேன் உளங்களி கொண்டேன்.
செய்கடன் இருந்து திறம்பா யென்னில்
செய்திடுவோ மொப்பந்தம் இருவரும்.

கலியன் — முறையிற் குறித்தவை எதுவாயினும் சரி
முற்றிலும் அதன்படி நிச்சயம் நடப்பேன்.
முறைப்படி முறையை எழுதி முடிப்பதற்கு
இதுபோதெனக்கவகாசம் இல்லையால்
இப்பொழுது எனக்கு விடை கொடுத்தனுப்பு.
மற்றொரு சமயம் வருவேன் உன்னிடம்.

வாஸ்து — இனியும் சற்றே என்னோடிருந்துன்
இங்கிதப் பேச்சால் இதம் எனக்களிப்பாய்.

கலியன் — மறுத்திட வேண்டாம் மன்றாடுகின்றேன்.
திரும்பவும் விரைவில் வருவேன் உறுதி.

வாஸ்து — உன்றனை வருத்தும் விருப்பம் எனக்கில்லை
வலைபோட்டுன்னைப் பிடித்திட வில்லையே.
இட்டப்பட்டே கட்டுப்பட்டால்
பேயைப் பிடித்தவன் பிடியைத் தளர்த்தினால்
வேண்டும் போதது மீண்டும் வருமோ ?.

கலியன் — சித்தம் போலினிச் செய்வேன் என்னும்
இச்சை கொளும்படி விச்சைகள் செய்தென்
கைத்திறம் காட்டிக் களிப்பித்திடுவதற்கு
அனுமதி நீ எனக் களித்திடல் வேண்டும்.

வாஸ்து — நிபந்தனை இதுவெனில் உடன்பட்டேன் நான்
அனுமதி தந்தேன் ஆனால் விஞ்சைகள்
இனிமையாக இருந்திட வேண்டும்.

கலியன் — ஆண்டொரு நாளும் காண்டற்கரிய
அற்புத அனுபவம் இத்தின மடைவாய்
ஐம்புலங்கட்கும் அளிப்பேன் சுவைத்துத்
தெவிட்டிய புலனும் திரும்பப் பசிகொளும்
பவித்திரமான பயோதிர விருந்து
கேட்டிடு கீதமும் நோக்கும் காட்சியும்,
சாட்டியம் அன்றி, சந்ததம் இருந்திடும்,
புலன்கள் நுகரும் பொருள்களின் இன்பப்
புணர்ப்பால் உந்தன் உணர்விழந்திடுவாய்.

எதிர்பார்த்திடுவதற் கெவரு மிங்கிலை
இருவரும் கூடி இருப்பது போதும்
ஆயத்தம் சரி, ஆரபமிப்பீர்.

(வெளியிலிருந்து இனிய கீதம் கேட்கிறது — இயக்கர் பாடுகின்றனர்)

1. காரிருள் மூடிய வானத்திலே ஒளி
கால் விட்டெழுவதைக் காணும் ஐயா !
பாரிடம் முற்றும் மறைத்த இருள் பையப்
பார் விட்டகல்வதைப் பாரும் ஐயா !

2. கருத்தைக் கருக்குங் கவலையெனுங் கரு
மேகங் கலைந்து கரந்திடும் பார்
வருத்தம் இன்றி மனம் வையகமும் உயர்
வானும பறந்திட நீ விழைவாய்

3. அந்தரத்தே பல சுந்தரத் தாரகை
அன்புடன் தண் ஒளி வீசிடவும்
கந்தருவர் பலர் சிந்தை மகிழ்தரும்
கானம் இசைப்பதைக் கேட்டிடுவாய்.

4. மல்லிகை முல்லை மலர்ந்திடுமே அதன்
வாசங் கண்டு வரும் வண்டினங்கள்
கள்ளையுண்டு தலைகால் தெரியாமல்
களித்துப் பறந்திடும் சோலை யெங்கும்.

5. சோலைச் செறிவினிற் காதலர்கள் இரு
பேரும் தனித்துரை யாடிடுவர்.
மாலைப் பெருக்கி மனத்தைப் பிணித்திட
மாமரத்தோர் குயில் கூவுதுபார்.

6. மாவும் பலாவும் பழுத்திருக்கும்—சிறு
வாழைக் குலைகள் கனிந்திருக்கும்
காவும் மலையுங் கடந்துவரும் இந்தக்
சாறெறெங்கும் கனிச்சாறு.

7. மின்னிவரும் இந்தப் பொன்னருவி அரும்
பொன்னும் மணியும் கொழித்தோடிடும்
கன்னல் வயல் வழிச்சென்ற புன்னைவனங்
கடந்து கடலில் சேர்ந்திடும் பார்.

8. ஆர்கலி சூழ் பச்சைத் தீவுகளில் பல்
ஆயிரம் புள்ளினம் ஆர்த்திடும் பார்.
பார்மிசைக் கூத்தர் விறலியரும் விளை
யாடிக் களித்திசை பாடிடுவர்.

9. ஓங்கி வளர்மலை உச்சியில் ஏறிட
உல்லாசமாய்ச் சிலர் செல்வார்கள்.
வீங்கு பனிக்கடல் நீந்திவரச் சிலர்
மீன் படகேறி மிதந்திடுவார்.

10. தூவியில் ஏறி விண்மீது செல்வார் சிலர்
சோர்வின்றி இவ்விதம் மேன்மேலும்
தாவிடுவார் வலி கூடிடுவார் உயர்
தாரகை தாண்டிச் செலவிழைவார் !

(வாஸ்து இருந்தவிடத்தில் தூங்கி விடுகிறன்)

கலியன் மெச்சினேன் ! உங்கள் விச்சையை வியந்தேன் !
நண்பர்காள் ! நீர் செய் நன்றியை மறவேன் !!
இங்கிதப்பாட்டில் இழந்தான் மதியை
வாஸ்துவே ! நீயினி நன்றாய்த் தூங்கு !
பேய்தனை யாட்கொளப் போதிய ஆற்றல்
வாய்த்திடா் இன்னும் வழியும் அறியாய்.
மோகன வடிவின் முழுத்திறங் காட்டிச்
சாகஸம் செய்திவன் சலுதியில் விழித்திடாத்
தூக்கத் திவனைத் தேக்கிடுவீர் நீர் !
எந்தனைப் பிணித்திடு மந்திர வலையைக்
கிழித்திவ்வறையைக் கடந்திடுவதற்கு
எலிப்பல்லண்ணான் வழிசெய வேண்டும்
ஈ, மூடு பேனும் ஈ, எலி, தவளை
மூட்டைப் பூச்சிகள் முதலாங்குலங்கட்கு
இறையா மென்றன் உரையது கேட்டு இங்(கு)

அனைவரும் இதுபோதவசியம் வருக !
எங்கிருந்தோ ஒரு எலி வரும் அதோ பார்
அஞ்சிட வேண்டாம் அழைத்தேன் உங்களை
அஞ்சாதிந்த அறையுட் புகுந்து
வாசற்படியின் வலையைக் கிழித்து நான்
வெளியிற் சென்றிட வழி செய்திடுவீர் !
புறத்துள கோணம் பிணித்துள தென்னை
அறுத்தெறிவீர் அதை — ஆம் ! அப்படித்தான் !!
வழி கிடைத்திட்டது — வெளியிலும் வந்தேன்.
வாஸ்துவே ! வந்தனம். மகிழ்ந்தினி துறங்கு !!

(வாஸ்து சிறிது நேரத்தில் கண் விழித்துச் சுற்று முற்றும் பார்க்கிறன். நாயையும் கலியனையுங் காணது திகைக்கிறன்)

வாஸ்து மீண்டுமோர் முறையும் ஏமாந்தேனே ?
கண்டுரையாடிய கலியனும் மறைந்தான்.
கன்னப் பிசாசைக் கண்டதும் கனவோ ?
நாயிவ்வறை விட்டகன்றதும் அதிசயம் !

# அறையில் வாஸ்து.

வெளியிலிருந்து கலியன் கதவைத் தட்டுகிறன்.

வாஸ்து — சாந்தியைக் கெடுக்கப் போந்தவர் யாரோ?
யாராயினும் சரி — நேரே வரலாம்.

கலியன் — நான்தான்!

வாஸ்து — வா! வா!

கலியன் — மும்முறை அழைப்பீர்!!

வாஸ்து — உள்ளே வா என மூக்காலும் சொனேன்.

கலியன் — சரி! நாம் இருவரும் சஹுதியில் பழகிப்
பிரியா நேயம் பெற்றிடுவோம் இனி
மயங்குறும் உன் மனமாச கற்றிடுவேன்.
உயர்குடிப் பிறந்த இளவலைப் போன்று
அழகிய செம்பட்டாடை யுடுத்து
அதன்மேல் கச்சையும் அங்கியும் அணிந்து
கூரிய தனிவாள் இடையிற் சொருகி
சேவலின் தூவியைச் சிரசிற் தரித்து
உன் மனத்துறு நோய் ஒழித்திட வேண்டி
உண்மையில் இங்கு வந்துற்றேன்; ஆதலின்,
நீயும் எனைப்போல் உடுத்துப் புறப்படு;
வையக வாழ்வின் வகை யறிந்திடுவோம்.

வாஸ்து — எப்பெயர் தாங்கினும் எவ்வுடை தரிக்கினும்
அற்பக்கவலைகள் ஆயிரம் சூழ்ந்திடும்.
இப்புவி வாழ்வெனக் கின்பமே தரவில்லை;
எப்போதும் மனம் ஏங்கித் தவிக்கும்.
அற்ப சுகங்களில் அகங்களித் தின்புறும்.
இளமை கழிந்தது — எனினும் உலகை
வெறுத்திடப்போதிய முதுமையும் வரவில்லை.
பொருள்களில் விருப்பம் சிறிதும் குறையவில்லை.
மீசை நரைத்துடல் மெலிந்திடு மெனினும்

ஆசை நரைத்துளம் அமைவுறு தின்னும்
இவ்வுலகிற் பெற என்னுள தின்பம்?
எவ்வம் மிகுத்த இவ்வையக வாழ்க்கையை
இன்றே துறந்திடு — இன்றே துறந்திடு
என்றிடும் வாசகம் ஒன்றே உலகில்
பொன்று தொளிரும் உண்மைப் போதகம்.
ஒவ்வா வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும்
எவ்வெவர் செவியிலும் இடையறு தொலித்திடும்.
இவ்வுரை கொள்ளா என்மனத்தெழு தரும்
அற்பக் கவலைகள் ஆயிரம் — அவற்றால்
அவதியுற்றந்தோ! அழிந்தேன் நாளும்.
தினந்தினம் காலையில் சூரியன் எழுவதைக்
காண்டொறும் துயர்கொடு கலுழுமென் நெஞ்சம்
மீண்டும் ஒருநாள் வீணாயிற்றென —
வைகலும் இங்ஙனம் வறிதே கழிவதால்
உய்வகை காணு துழன்றேன் — இரவில்
தனிமையில் அறையுள் தங்கிடும் போழ்தும்
இனிமையைக் காணேன் — இழிவே தோன்றும்
எண்ணியாங் கொன்றும் முடியா நிலையில்
கற்பனையால் வரும் களிப்பும் கைத்திடும்.
தூங்கும்போதும் துயர் தரும் கனவுகள்
உள் ஒழித்திருந் தெனை ஓயா தியக்கும்
கள்வனும் இறை மனக்கட்டழித்திடுவான்.
புறத்துள எதையும் பெயர்த்திட ஒவ்வான்.
ஆதலின் இனியும் வாழ்ந்திடச் சகியேன்!
சாதலை விரும்பினேன் — சலித்ததிவ்வுலகம்!!

கலியன் எனினும் இறப்பதற்கு எவரே விரும்புவார்?
கூற்றுவன்தனையும் போற்றுவார் உளரோ!

வாஸ்து மாற்றலர்ப்பொருது வாகை சூடிய
வெற்றி கொள் வீரன் பெற்றிடு மின்பமும்,
ஆதரம் பயிலும் காதலியோடிவர்,
ஈருடல் — ஒருயிர் எனும்படி வாழும்

ஆர்வலர் பெற்றிடும் அந்தமில் இன்பமும்,
வாய்த்திடும் சிலர்க்கே — வாழ்பவர் அவரே.
அற்புதச் சோதி முன் அன்றே என்றன்
ஆவியைப் பலியாய் அளித்திலேன் — அந்தோ !
சோற்றுத் துருத்தியைச் சுமந்தலைகின்றேன்.

கலியன் ஆயினும் ஒருவன் அன்றொருநாள் புவி
அமிழ்தினை அருந்தத் துணிவிலா தயர்ந்தான்.

வாஸ்து வேவு பார்த்திருப்பதோ வேலையுனக்கு ?

கலியன் யாவுமறிந்திடும் ஞானியன்றாகிலும்
அறிவேன் பலப்பல அந்தரங்கச் செயல் !

வாஸ்து உய்வழி காணும் உயர் நோக்குடன் மனம்
வெய்துயர் பேணும் வியன் மதிப்போக்கை
மாற்றிடும் பூர்வ வாசனையெனில் அதைத்
நூற்றித் துரத்திச் சுட்டொழித்திடுவேன்.
எனை விட்டகலா இளமைச் சிறுமதி
நினைவிற் கொணரும் சிறுமைச் செயல்பல.
இன்னு மென்னேடிரும் இளமையின் நினைவுகள்
முன்னனுபவித்த சிற்றின்பம் நினைந்திடும்
வன்மையோடென்றும் தன்னையே வியக்கும்
நாணமிலாத ஆணவப் பேயே !
உந்தனை முதலில் கொன்றொழித்திடுவேன்.
அவனிக்காட்டில் அலைந்திடும் கொடிய
ஐம்புல வேடர்கள் அளித்திடும் பொருள்களை
அறிவெனக்கொள்ளும் சிறுமதி கெடுக !
குறியறிவில்லா உளந்தனில் முளைக்கும்
பழிமிகு சூழ்ச்சிகள் பற்று தொழிக !!
அழிவிலாப் புகழாம் ! — அது பகற் கனவே !!
மருள் நிறை நெஞ்சம் பொருள் எனக்கொள்ளும்
அன்புடை மனைவி, அருமைக் குழந்தைகள்
மாண்புள சுற்றமும் மண், மனைமுதலாம்
மாயாகாரிகள் சாராதொழிக !
துணிவுடன் பழிபல புரிந்திடத் தூண்டிப்

பணிவும் பண்பும் மாற்றிப் பயனிலாக்
களிப்பினில் நாளைக் கழித்திடச் செய்யும்
காசே ! — உன்மீ தாசையை ஒழித்தேன் !
வெறிதரும் கள்ளே ! வெறுத்தேன் உனையும்.
கச்சணி கொங்கை மடவா ருடனே
இச்சை விருகுடன் நித்தமும் கூடிப்
பெற்றிடும் இன்பமும் பேணேன் இனிமேல்.
நலமிலா வையக வாழ்க்கையை விரும்பியிம்
மலபாண் டத்துள் வைகிடத் தூண்டும்
மாயா தத்துவம் அனைத்தையும் மாய்ப்பேன்.
இவற்றை யெலாம்விட இனிநமக் குளதென,
நினைக்கும் உறுதியும் நாட்டமும் கெடுக !
உறும்வரை காத்திடும் பொறுமையும் ஒழிக !!

(ஒளிக்குட்டிகளின் புலம்பல்)

1 உடைத்துவிட்டாய் நொடியில் — ஓ ! ஓ !!
ஊறு செய்தாய் உலகை
படைத்தவன் பார்த்திரங்க — ஆ ! ஆ !!
பாருடைச் சீர் அழித்தாய்.

2. எண்ணப்படா உலக — இயற்கையின்
வண்ணத்தை நீ துடைத்தாய்
மண்ணிடை வாழும் உயிர் — வர்க்கத்தின்
பண்ணுடைப் பாட்டழித்தாய்.

3 வீறுடன் மோதியதால் — இப்புவி
நூறுதுண் டாயினதே !
வேறு வேறுய்ச் சிதறி — வீழ்ந்திட்ட
கூறுகளைக் கூட்டிச்

4. சூனியத்திற் சேர்ப்போம் — சரமமும்
சொல்லி அழுதிடுவோம் !
மானிடர்க்குள் மணியே ! இனியொரு
மானிலம் வேறு செய்வாய்.

5. தாயமனத்துடன் நீ — புதுத்துறை
தோய்ந்தினி வாழ்ந்திடுவாய்
நேயம் மிகுந்திடுமேல் — வாழ்க்கையின்
கீதம் இனித்திடுமே !!

கலியன் அன்புடைச் சீடரின் அழகிய பாடலைக்
கேட்டனை ? கருத்திற் குறித்துக் கொள்வாய்.
புலன்வழிச் சென்றிப் புவிதரும் இன்ப
சுகங்களை நாளும் நுகர்ந்திட வேண்டும்.
தனிமையில் இனியும் தங்கிடுவாயெனில்
உயிரும் உளமும் உரம்அற் றுலரும்.
சோகத் தோடு தொடர்ந்துற வாடுதல்
யாவர்க் காயினும் ஆபத் தாமது !
ஏக்கமும் தூக்கமும் இயற்கையை மாற்றி
ஊக்கம் போக்கி உறுதியை அழிக்கும்,
எத்தகை மனிதர்கள் ஆயினும் இனத்துடன்
ஒத்திருப் பதுவே உலகோர் கடமை !
மனிதர்கள் பக்தியில் வாழ்ந்திருப்பவனே
மனிதத் தன்மையில் மாண்புற் றிடுவான் !
உயர்குலத் தில்நான் பிறந்தே னெயினும்
இழிகுல மாந்தர்தம் உடன்உனைச் சேர்க்கேன்.
என்னோ டிணக்கம் கொள்வா யாயின்
உன்னோ டுலகில் திரிந்திட விழைவேன் !
தோழமை பூணத் தடையிலை — மற்றுன்
அன்புள பணியாள், அடிமையும் ஆவேன்
அவசிய மாயின் — ஐயுற லினியேன் ?

வாஸ்து பணிசெய விழையுமுன் குறியெதிர்ப் பெதுவோ ?

கலியன் அதுகுறித் திப்போ தவசர மேயிலை !

வாஸ்து அகம்பாவத்தால் ஆனந் தப்படும்
மகன்நீ என்பதைச் சகம்முழு தறியும்
வீண்பெரு மைக்காய் வியப்பாய் எனினும்
குறியெதிர்ப் பின்றிப் பிறருக் கெதுவும்
இயற்றுவ துந்தன் இயல்பல் லாதலால்
வேண்டுவ திதுவென வெளிப்படை யாய்ச்சொல் !
அளவிலாக் கையாள் கன்வது வதுமெய் !

இமைப்பொழுதேனும் உனைப்பிரியாமற்
கண்இமை போலக் காத்திடும்
காவலாள் உனக்கு நான் ஆவேன் இம்மையில்.
இதுபோல் உறவாய் மறுமையில் எனக்கு நீ.
மறுமையைப்பற்றிய கவலை எனக்கில்லை.
புதுஉலகொன்றை நிருபித்திடுவதற்கு
இருப்பதை முற்றும் ஒழித்துவிட்டாயோ ?
என்மனம் விழையும் இன்பமனைத்தையும்
தந்திடும் போக பூமி இவ்வுலகம்.
என்மனத்துயரைத் தன் ஒளியால் தினம்
ஒழித்திடக் காலையில் உதித்திடும் சூரியன்
இனிய இவ்வுலகம் ஒழிந்தபின் வருவது
யாதாயினுமென் ? யார்க்கது வேண்டும் ?
வருங்காலத்தவர் வாழ்த்தினும் தூற்றினும்
இரு வேறுலகம் இருப்பினும் சரியே.
இவ்வுலகத்தை இழந்திட என்றும்
ஒவ்வேன் — அவ்வாறு உரைக்கவும் கேளேன் !

**கலியன் (தனியே)** இந்நிலை எதற்கும் இணங்குவாய் போலும் !
எனினும் முறியை எழுதிக்கொள்வோம்.
இனியொரு கணமும் துனி கொளவேண்டாம்.
இதுவரை யாரும் அநுபவித்தறியாப்
புதுவகைப் பொருள்களை உனக்களித்திடுவேன்.

**வாஸ்து** எனக்களித்திடுவதற் கென்னுள துன்னிடம் ?
உயர் நோக்கங் கொண்டயர் வறமுயலும்
தூயவன் உள்ளக்கிடக்கையை உன் போற்—
பேயறிந்திடுமோ ? யாவோ உன் பொருள் ?
புசித்தபின் தணியாப்பசி தரும் உண்டி !
அலைந்திடு ரசம்போல் நிலைகொளாச் செல்வம் !
தோற்பதற்கே பலர் ஆடும் சூது !
கைப்பிடி நாயகன் கண்முன் வேறொரு
காதலன் தேடிக் கண்ணடிக்கும் பெண் !
ஒளிவிட்டழியும் எரி மீன் போன்றுயர்
வானமளாவி மறையும் வெறும்புகழ்.

பறிக்குமுன் அழுகிப் பதங்கெடுங்கனிகள்,
தளிர்த்துத் தினந்தினம் பழுத்துதிர் இலைகள் !
இவையே நீ தரும் சுவையுள் பொருள்கள் !!

கலியன் இத்தகைப் பொருள்கள் மெத்தவும் எனக்குள ;
நீயவை நல்லவை ஈதெனப் பின்னால்
பையப் பார்ப்போம் பண்புள நண்பரே !
இழித்துரைத்திட்டாய் ! எனக்கதிற் சலிப்பிலை
பழித்தவன் ஒருநாள் பணிந்ததைப் போற்றுவான்.

வாஸ்து எப்போதாயினும் இப்புவிதரும் சுகம்
இனிதென வெண்ணிப் பனி மலர்ப்பாயலில்
களிப்புடன் நீட்டிப் படுத்திடக் காணில்
அப்போதே நீ ஆட்கொளலாம் எனை.
அந்நாள் எனக்குக் கடை நாள் ஆமே !
அதுவரை உன்னால் ஆவதெல்லாம் செய்.
கண்டுந் தேனும் கலந்து கசிவுறும்
சொல்லியர் மெல்லியர் தோளுடன் சேர்த்துக்
காமக்கலவிக் கள்ளைத் தினந்தினம்
மொண்டு கொடுத்தெனை மோக முறச்செய்
மயக்குறு பொருள்கள் யாவுள, அவையெலாம்
எய்திடச் செய்தெனை ஏய்த்திடலாம் நீ.
பிறந்தார் பெறுவது பெருகிய துயர் இதை
மறந்திப்பிறவியை வாழ்த்துவேனாகில்
அக்கணம் எனைச் சிக்கெனப் பிடிப்பாய்.

கலியன் கட்டுரை தானே !

வாஸ்து அட்டியல்லாமல்
ஒட்டிக் கொடுக்கும் ஒப்பந்தம் இது !
என்னே இதன் எழில் ! இன்னும் சற்றிவண்
இரு ! இரு ! என நான் உரைத்திடும்போது
தகர்த்திடுன் தளைகளை — தரியெனக் கவற்றை
பகலவன் வாராப் பாழிடம் உன்னோடு
உறைவேன் — அதுமுதல் அடிமையும் ஆவேன்.

கலியன் கருத்திற் கொண்டேன் — கட்டுரை முற்றும்.
பொறுத்துப்பார் பின் வருந்திட வேண்டாம்.

வாஸ்து இது செய உனக்கும் உரிமை அளித்தேன்.
மிகைபட என்றன் திறமையை மதித்திலன்.
உண்மையிற் பார்த்தால் இம்மையில் அடிமை நான்
உனக்கோ? பிறர்க்கோ? எவர்க்கானுலென்?

கலியன் நீ புதுவாழ்க்கையை மேற்கொளும் இன்றே
நான் என் கடமையை நலமுறத் தொடங்க
நினைத்தனன், எனினும் நீயோ ஒன்றிடை
மறித்தலும் கூடும்; நாருவண்ணம்
முறிதனை ஓரிரு வரிகளில் எழுதிக்
கொடுத்திட வேண்டுவன் — கொள்ளேல் கோபம்.

வாஸ்து கற்றும் அறிவிலாக் கசடனே! என் சொல்
வெற்றுரை யென்றோ வேண்டினை எழுத்தில்?
மனிதனும் அவன் வாய் வார்த்தையும் பொய்த்திடில்
புனிதமாமோ அவன் பொறித்துக் கொடுப்பது?
வாய்மையிற் றிரியா வாக்கிற்குள்ள
தூய்மையும் சீவனும் துப்புரவில்லாப்
பூதப் பொருள்களில் பொறித்திடில் வருமோ?
உளத்தின் தூய்மையை உணர்த்திடும் வாய்மை:
மெய்யெனக் கண்டன எல்லாவற்றுளும்
வாய்மையின் நல்லதை நான் கண்டறியேன்.
ஆயினும் உன்போல் அறிவிலா மக்கள்
வாயினும் கையே வலியுடைத்தென்பர்!
வாக்கு மூலத்தினும் எழுத்து மூலத்தையே
வேண்டிடில் நீ உன் விருப்பப்படி கொள்.
எழுதிக் கொடுத்திட எனக்குத் தடையிலை
கல்லிலோ, செப்பிலோ, காகிதத் தாளிலோ
கல்லுளி, ஊசி, கழுகின் சிறகிதில்
எதைக்கொண் டெதிலுனக் கெழுதிடப் பிரியமோ
அதைக் கொண்டதில் நீ எழுதி முடித்தால்
அப்படியே அதை ஒப்புக்கொடுக்கிறேன்.

கலியன் இதற்கோ இத்தனை ஏச்சும் பேச்சும்?
இரண்டொரு வரிகள் எழுதிக் கீழே
இரத்தத்தாற் கையெழுத்திடிற் போதும்.

வாஸ்து அறிவிலா ஆசை! ஆயினும் தருவேன்!!
குருதி கொண்டெழுதிப் பெறுவதென் கூறாய்?

கலியன் செந்நிறக் குருதியிற் சேரும் வலிமை

வாஸ்து சொன்ன சொல் மாறேன்! துணிகொள வேண்டாம்;
வாக்கைக் காப்பதென் வாழ்க்கையின் நோக்கம்.
பருந்தென்றெண்ணிப் பறந்தேன் உயர,
குருகென்பதை நன்குணர்ந்தேன் கடிதில்,
நாறு முன்போலொரு நலமிலாக் கயவனே
தேவியும் அன்றெனைத் திரணமாய் எண்ணித்
துரும்பெனச் சொல்லித் துறந்தாள் — அதுமுதல்
இயற்கையும் என் கைக்ககப்படா தொழிந்தது;
சிந்தனைக் கதிர்விடு திரையும் கிழிந்தது;
எந்தநூல் கற்கவும் இசையாதென்மனம்;
வித்தையை முற்றும் வெறுத்தேன் ஆதலின்
புலன்வழிச் செல்லும் உளத்தெழும் தீவிர
உணர்ச்சிகள் அனைத்தையும் தணித்திடுவேன் இனி!
இன்பசாகரத்தின் எல்லை கண்டிடுவேன்.
மதியை மயக்கும் மாயாவித்தை
மந்திரங் கற்பேன், மறப்பேன் கவலையை!
கதியினில் மாறுங்காலச் சக்கர
நதியிற் குதிப்பேன், நலியாததிலுறும்
வெற்றியும் தோல்வியும் இன்பமும் துன்பமும்
பெற்றிடுவேன்; விதிப்போக்கை எதிர்ப்பேன்.
சாந்தியில் கிளர்ச்சியே மாந்தரின் இயற்கை.

கலியன் எந்தப் பொருளையும் சொந்தமாக் கொண்டுன்
இன்பத்திற்கே ஏதுவாக்கிக்கொள்
அந்தம் அளவெனும் வரையறை யொன்றும்
வகுப்பார் இங்கிலை; வாழ்க்கையில் இனிமேல்
வரவரக்கொள்வாய் வரையிலா இன்பம்.

ஆசை வெட்கத்தை அறியாதாதலின்
கூசா தின்பமே குறிக்கோளாய்க்கொள்.

வாஸ்து

இன்ப மன்றன்ப ! நான் எய்திட விழைவது !
உண்மையில் வேண்டுவது உள்ளக் கிளர்ச்சியே.
வேதனை செய்யும் பேரானந்தம்
காதலை யொத்துக் களி தருங்கடும்பகை
துருதுருத்திடச் செயுந் தொல்லைகள் — இவையே.
வித்தையை முற்றும் வெறுத்திடும் என்மனம் ;
ஓதலை ஒழித்தேன் — ஆதலின் இனியென்
கருத்தொருமித்த கருமம் இதுவாம்
கடுந்துயர் அனைத்தும் கருத்திற் கொள்வேன்,
மன்பதையுற்றிடும் இன்பமும் துன்பமும்
என்னிதயந்தனில் ஏற்பேன் ; உலகத்
திழிவும் உயர்வும் ஈதென அறிவேன்
எவ்வெவர் தீமையும் நன்மையும் நாடிச்
சிந்தையில் எந்தன் சொந்தமாய்க்கொண்டு
கள்ளப்புலன் வழிக் காமுற்றிறுதியில்
எள்ளப்படு குழிவீழும் மனுக்குலம்
பெறும் கதி யானும் பெறுவேனுக !

கலியன்

ஊழிகள் தோறும் உடலிருந்திறைவன்
ஆடும் கூத்துகள் அனைத்தையும் அருகிற்
கண்டும் மனத்துட் கடுந்துயர் கொண்டும்
என்றால் அவன் செயல் எதையும் உணர்ந்திட
முடியலை ! என் சொல் முற்றும் நம்பு.
பிறந்தநாள் தொட்டுப் பின்னொருநாள் வரைச்
சிறந்திடு மனிதருள் எவனும் இதுவரைப்
பழம் பொருட்டன்மையை அறிந்திலன்.
அனைத்தும் இருப்பது அவன் பொருட்டென்றறி
மங்காச் சோதியின் மத்தியில் என்றும்
தங்குவன் மேலே தனிப்பெருந்தலைவன்,
கங்குல் அகலாக் காரிருள் நடுவே
எங்களைக் கீழே என்றும் வைத்தனன்.

கங்குலும் பகலும் கலந்து வந்திடும்
இங்கே இடைநிலத்திருத்தினன் உங்களை !

வாஸ்து — மூன்றிடத்தும் சென்றறிவேன் முழுதும் !

கலியன் — நன்றாய்ச் சொன்னாய் நண்பா ! ஆயினும்,
சந்தேகம் நான் கொண்டேன் சிறிது.
அறிந்திடப் பலவுள, அறிபவன் நாட்சில ஆதலின்
நல்லவை நாடிச் சொல்வதைக் கேள்.
புலவனைத் தேடி யுன் துணைவனாகக் கொள்.
அவன் தன் சிந்தனைத் தேர்மீது ஏற்றி
சுந்தரப் புவியெலாம் சுற்றிக் காட்டி
முந்துறும் மேன்மைக் குணங்களைத் தேடி
உன் மனத்தேற்றி உயர்வித்திடுவான்.
அரிமா ஆண்மையும், கலைமான் வேகமும்
மான்மகன் தாபமும், நான்முகன் ஊகமும்
சேர்த்துன் மனக்குறை தீர்த்திடுவான் மெய்.
நரித் தந்திரங் கொண்டு அரிமா நோக்கத்து
உயர்பொருள் காணும் வியன்கலை அளிப்பான்
கட்டுக் கடங்காக் காதல்கொள் காளையைக்
கட்டுப்படுத்திக் களவை மறந்துயர்
கற்பின் வழிச் செலக் கரணப்படுத்தும்
அற்புத மனிதனை அறிவாயெனிலவன்
திருநாமம் சொல், திருமிகு பிண்டரே !
அவனைக் காண ஆவல் கொண்டேன் நான்.

வாஸ்து — தீவிர முயற்சிகள் யாவும் வீண் எனில்
மனுக் குலத்தவரின் மணி முடியாக
விளங்கிட விழையும் நான் என் ஆவேன் ?

கலியன் — நீயார் எனில் நீ என்றும் நீதான் !
உயர்முடி தரிப்பினும் செருப்படி உயர்த்தினும்
இயல்பாய் உனக்குள எண்சாண் உடம்பை
ஒரு சாண் ஆகினும் உயர்த்திட மாட்டாய் !
இருந்தபடியே இருப்பாய் என்றும்.

**வாஸ்து**
முன்னோர் அரிதின் முயன்று தேடிய
பன்னூல் கற்றுப் பயன் என்? இதுவரைக்
கற்றதும் கேட்டதும் முற்றிலும் வீணோ?
கற்றபின் நெஞ்சில் உற்றிடா துறுதி
புதுத்திறம் எதும் பொருந்திடக் காணேன்
மயிர்க்கிடையும் உடல் வளர்ந்திடவில்லை
எல்லையில் ஒன்றெனக் கெட்டாதின்றும்

**கலியன்**
பலரும் உலகைப் பழிப்பது போன்றே
நலமுணர் சான்றோய்! நீயும் நவின்றாய்!
அறிவுடையார் தம் அடிக்கீழ் உலகம்
அளித்திடும் இன்பம் அனைத்தும் கொள்வோம்.
அடகெடுவாய்! உனக் கைப்புலன் உளவே.
அத்துடன் மனமும் புத்தியும் உடையாய்!
நம்பொருள் என்பவை நனி சுவைத்தற்குள்.
வல்லவன் தன் கைப்பலத்தாற் சில்லரைப்
பல்லக் கெடுக்கப் பணித்திடும்போது—அப்
பாமரர் பலமெலாம் பணித்தவர்க்குரித்தாம்.
விரும்பிடில் முடுகித் துறத்துவன்; மற்றவர்
வருத்தமுய பாரான் வாழ்த்தையும் கேளான்!
பொறியிற் செறியைம் புலப்பரியேறி
அலியுறு சிந்தையை அகற்றி யென்னுடனிப்
புனிதனைப்பார்க்க புறப்படு விரைவில்.
தத்துவம் நாடித் தளர்வுறும் சித்தம்,
உத்தியானம் பல சுற்றிலும் இருப்பினும்
களரியுட்சென்று சுழலும் குருட்டுக்
கழுதைக் கொப்பாம், எழு! எழு! போவோம்!
அழுங்குறு சிந்தையை அகற்றிப் புறப்படு.

**வாஸ்து**
அவ்வழி எப்படி ஆரம்பிப்போம்?

**கலியன்**
இவ்விடந்தனை விட்டேகுவோம் முதலில்;
ஓயா வேதனை உறுத்தும் வீடிது!
நேயா! நீ இத்தீயகத் திதுவரை
நிகழ்த்திய வாழ்க்கையை நினைக்கவும் சகியேன்!

முகையிலா வாலிபர் உடன் உறைந்தென்றும்
முதுக்குறை வுணர்த்தும் தொழிலை யுன் நண்பன்
பெரு வயிற்றனிடம் விட்டு நீ விலகி
உமியைக் குத்தியேன் உடல் சலித்திடுவாய் ?
சீரிய கலைகளைச் சிறுவர்க்குரைத்திடத்
தைரியம் உனக்கிலை ! தாழ்வாரத்திலோர்
மாணவன் உன்னைக் காண வந்துள்ளான் !

வாஸ்து இதுபோதவனைப் பார்த்திட விரும்பேன்.

கலியன் சிறுவன் பாவம் ! விருப்புற்றடைந்தான்.
வழ்தே திரும்பெனில் வருத்தப்படுவான்,
சட்டையும் உன் தலைப்பாகையும் தருதி,
(கலியன் வாஸ்துவின் உடைகளை அணிந்து கொள்கிறன்)
இட்டப்படி சில இசைவித்தவனை
அரை நாழிகைக்குள் அனுப்பி வருகிறேன்.
அதற்குட் புறப்பட ஆயத்தம் செய்.

(பேராசிரியன் வாஸ்துவின் உடைகளை யணிந்து
வெளிவந்த கலியன் தனிமையில் தனக்குள்)

மனிதா ! உந்தன் மாண்புள மதியையும்
புனிதமாம் ஞானப் பொலிவையும் இழந்தால்
புரைசேர் மாயைதன் பொய்ச் சுகத்தால் உனை
வரையறையின்றி வஞ்சிப்பதற்கும்
அநுமதித்தாய் ! இனிஆட் கொள்வேன் உனை !
விதிப்பயனால் அதி தீவிர பக்குவ
மதிபடைத்தானிவன் ; மற்றது கொண்டுயர்
கதிபெறவெண்ணிக் கடிதினிற் செல்லும்
வழியிலிப் புவிதரும் வாழ்க்கை யின்பங்களைக்
கழிய விட்டேகும் இக்காளையைத் தொடர்ந்து
பாழ் நிலத்திழுத்துப் பணிய வைத்திடுவேன் !!
சாரமற்றயர்ச்சியே தரும் ருசியற்ற
சோரக்காட்சிகள் சூழ்ந்திடத் திகைப்பான்
அப்பொழுதவன் உளத்தடையும் அவசரம்

பார்த்துப் பரிகசித்திடுவேன், மற்றவன்
ஆத்திரம் அதிகரித்திடச் செய்தலைப்பேன்!
அரும்பசிக்குதவா அன்னமும், அவலும்
ஆறாத் தாகம் தீரா நீரும்
கண் முன் தோன்றிக் கரந்திடச் செய்வேன்!

(வாஸ்து எழுதிக் கொடுத்த முறியைப் பார்க்கிறான்)

எழுதிக் கொடுக்கா திருப்பினும் முடிவில்
முழுதும் மாயைக் கடிமையா வதுமெய்

(மாணவன் எதிராக அருகில் வருகிறான்)

மாணவன் உலகம் போற்றும் உத்தம ஆசான்
புகழது கேட்டுப் போந்தேன் இவ்விடம்.
அவரைக் கண்டவர் அடிக்கீழ்த் தங்கி
அவருரை கொள்ள ஆவல் கொண் டுள்ளேன்.

வாஸ்துவுடையில் கலியன் அகமகிழ்ந்தேன் உன் புகழுரை கேட்டு
ஆயினும் எனை நீ மிகைபடச் சொன்னாய்.
ஏனையோரைப்போல் நானுமோர் மனிதனே!
இதுவரை யாரிடம் ஓதி வந்தாய் நீ?

மாணவன் சதுரரே! நீர் எனைத் தயவு செய்தேற்பீர்!
என் அகத்திருந்தே இதுவரை கற்றேன்.
அன்னையோ வெளியில் அனுப்புதற் கொப்பாள்.
உண்மை சேர் ஞானம் பெற்றிடும் உறுதியால்
அண்ணினேன் உம்மை, ஆர்வமோ டிளமையும்
அஞ்சா உறுதியும் அடக்கமும் கொண்டுளேன்.
பொன்னும் போதிய தென்னிடம் உளது.

கலியன் உரிய இடம் வந்துற்றாய் அன்பா!

மாணவன் ஆயினும் இங்கே தாமதித்திடுவதற்
கேனோ என்மனம் இசைந்திடவில்லை.
திரும்பிப் போகவே விரும்புமென் னெஞ்சம்.
சிறைக் கூடத்தின் சுவர்களைப்போல் உயர்
பித்திகை மனத்துட் பீதியைக் கிளப்பும்;

சுற்றியோர் மரமோ செடியோ உயிருள
மற்றெப்பொருளும் கட்புலன் ஆகா !
கலைக் கூடத்தின் அறைகளில் அடுக்கிய
மலைகளைக் கண்டென் மனந் தடுமாறும் !
குறுகிய அறையுட் பெருகும் இருட்டில்
கண்களும் குருடாம், காதும் செவிடாம்.

கலியன் பழகப் பழகப் பண்படும் யாவும்
பழக்கம் பெரிதாம். பாலுண் குழவிதன்
ஆய் முலைவாய்க் கொள அழுமே முதலில் ;
அப்பால் வரவர, அதன்பசி தணித்திட
எப்போதும் முலைக் கேங்கித் தவித்திடும்.
அதுபோல் ஞானப் பாலுண நீயும்
விதுப்புடன் ஏற்பாய் வாணியை விரைவில்.

மாணவன் வாணியின் நேசம் வேணு மிப்போதே
அருளைப் பெறும் வழி அறிவித் திடுவாய்.

கலியன் அறுபத்து நாலாம் கலைகளுள் எவற்றைப்
பெறுவதற் குனக்குப் பிரியம் அதிகம் ?

மாணவன் பலகலை கற்ற பண்டிதன் என்றெனை
உலகவர் போற்ற விளங்கிட விழைவேன்.
இகபரம் என்றிடும் இரு வேறுலகத்
தியற்கையை விளக்கும் சுருதிகள் அனைத்தையும்
கற்றிடக் கருதினேன்.

கலியன் கருமம் நன்றாம்.
எனினும் குறிவிட் டிடை வெளி நின்றான்
புனித நாட்களைப் போக்கிட வேண்டாம்.

மாணவன் கண்ணுங் கருத்துமாய்க் கலை பயின்றிடுவேன்
எண்ணேன் பிறிதெதும். இரவும் பகலும்
பன்னிரு மாதமும் பயில்வேன் ஆயினும்,
வருடம் ஒருமுறை வசந்த காலத்திற்
சிலநாள் விடுமுறை பெற்றென் மனம்போல்,
பலவிடங்களைப் போய்ப் பார்த்திட விழைவேன்.

கலியன் அலர்கதிர் ஞாயிற்றின் செலவொழிப்பாரெவர் ?
வாணாள் மிகச்சில, வீணாய்க்கழித்த பின்
வேதனைப்பட்டால் மீளவும் வருமோ ?
ஆதலின் உளநாள் அனைத்தையும் பயனுறக்
காலங்கருதிக் கணந்தொறும் முயன்றால்
ஞாலங்கருதினும் கைவரும் எளிதாய் ;
முறைப்படி எண்ணித் துணிந்து முயன்றால்
சிறைப்பட்டவன் பின் செல்லுங் காலமும்.
எனவே, முதலில் எண்ணங்களைச் சீர்
பண்ணிடுந் தர்க்க சாத்திரம் படித்திடு.
இக்கலை கற்றவன் எளிதிற் பிறரிடம்
பேச்சில் சிக்கான், சிக்கனமாய்த்தன்
சொற்களை வழங்கிச் சௌரிய மாயவன்
முற்படும் எதிரியை முறியடித் திடுவான்.
அப்பால் உங்கள் ஆசான்மார் வந்(து)
இப்பால் நீ தினம் எளிதாய் இயல்பின்
எண்ணாதியற்றும் உண்ணல், உடுத்தல்,
இருத்தல், நடத்த லென்றிடும் பலவினை மனத்(து)
உருக்கொளும் வகைகளை விரித்துக் கூறுவர்.
இவையெலாம் தானே நிகழ்ந்திடா தென்பர் !

முதலில் சிந்தையுள் முளைத்திடும் இச்சை
அதன்பின் பிரக்ஞையில் ஆணை பிறக்கும்.
ஆணை செலுத்தும் அரசன் ஒருவனும்.
ஆணையைத் தாங்கி அதன்படி நடக்கும்
ஆண்டிகள் பலர் அவண் அண்டியிருப்பராம்.
வெளிப்பட நிகழும் செயல்களைக் கண்டுளந்
தொளிந்து நடந்ததை உணர்ந்திடலாமாம்.
எதுவொன்றின்றி யாதும் நடைபெறு
தாதலின் முதற்செயல் அவசியம். அஃதிலை
ஆயின் அடுத்துறும் காரியமும் இலை.
ஆயிரங் காலுள பாவிடை ஊடை நூல்
அரை நொடியிற் புகுந்து அழகுறப்பிணைதல் போல்
சிந்தையாம் பாவிடை முந்துறச் செல்லும்

இச்சைகள் என்னும் மெல்லிழை ஊடை
எண்ணில சேர்ந்துயர் எண்ண மெனப்படும்
நுண்ணிய ஆடையை நெய்திடும் என்பர்.
ஆயினும் இந்தப் புலவருள் யாரும்
ஒரு முழமேனும் நெய்திட அறியார்.
உயிருள பொருளின் உளவறிந்ததனை
வளர்த்திட வேண்டி வதைத்ததன் உயிரைக்
களைந்தபின் வருந்திக் கையைப் பிசைவார்.
இயற்கை யென்றிதற்கு இரசாயன முறைப்படி
ஒன்று வேறுதல் என்று கூறிடுவர்.

மாணவன் உம்சொற் பொருள் எனக்கொன்றும் விளங்கலே!

கலியன் அஞ்சேல் நண்பா! கொஞ்ச நாட்குள் நீ
பல்கலைச் சொற்களின் பயன் அறிந்திடுவாய்!
அப்பால் எல்லாம் அறிவாய் எளிதில்.

மாணவன் இப்போதெனக் கிவை எல்லாம் குழப்பம்.

கலியன் மற்றுள கலைகளைப்பற்றி நினைக்கு முன்
தத்துவ சாத்திரம் கற்றிடு முதலில்.
மனிதன் மூளைக்கெட்டா ஒன்றையும்
இனிதின் விளக்கிக் காட்டும் இக்கலை.
உண்டோ, இலையோ, உண்மையில் நீயிதை
அறியா நிலையிலும் அழகிய சொற்கொண்(டு)
அறைவதைக் கேட்டுத் தலை யசைத்திடுவாய்.
முதல் அரை வருடம் நடைமுறை இதைக்கேள்.
நிதம் சொற்பொழிவை இதமுறக் கேட்டிடு,
தவறேல் என்றும், தாழ்த்தேல் காலம்.
தகவுடை ஆசான் பகர்வன எல்லாம்
விருத்தியுள் தெளிவாய் இருந்திடு மெனினும்
கருத்துடன் வேத வாக்கென மதித்துக்
குறித்துக் கொள்வதுன் பொறுப்பென் றறிவாய்.

மாணவன் மீண்டும் இதனைக் கூறிட வேண்டேன்.
செப்பியபடியே ஒப்பி நடப்பேன்.

மாணவன் எழுதிக் கொண்டால் பொழுது கிடைக்கும்
போதெலாம் எடுத்ததை ஓதலாம் இனிதே.

கலியன் சரி நீ ! விரும்பும் கலை எது கூறாய் ?

மாணவன் சட்டம் படித்திட இட்டம் வரவிலை

கலியன் விந்தையன் றிதை நீ வெறுத்திடல் இயல்பே,
இந்தக் கலையில் எனக்கதி பழக்கம்
கட்டுப்பாடு செய் சட்ட திட்டங்களும்
கணக்கிலாப் பழக்க வழக்கம் இவையெலாம்
வினைப்பயன் போலப் பிணித்திடுங்கணங்கணம்.
எந்நாட்டவரும் இன்னலுற்றிடுவர்.
பிறர் நடைபேணிப் பழகிய பழக்கம்
பெரு வழக்காகித் துயர் விளைத்திடுவதும்,
ஆதியில் மனிதரின் பாதுகாப்பிற்கெனச்
சாதகப்படுத்திய சட்டம் வரவரப்
பாதகம் செய்வதும் பார்க்கில், கோலிய
வேலியே பயிரை மேய்வது போலாம்.
பகுத்தறிவைப் பாழ்படுத்தும் பழக்கமும்
வகுத்திடு சட்டமும், வாழ்க்கையின் வைரிகள் !
எவர்க்கும் பொதுவாம் இயற்கை விதிகளை
இவற்றால் பலரும் என்று தழிவர்.

மாணவன் அறைவதைக் கேட்க அருவருப்பே மிகும்.
குறைவிலை உண்மைக் குருவாய்க்கொள்ளும்
ஒருவனுக்கேதும். உறுதி பெற்றிடுவான்
தத்துவ சாத்திரம் கற்றிடலாமோ ?

கலியன் இத்துறையிறங்கி நீ மெய்ப்பொருள் காண்பது
மெத்தக்கடினம். வேண்டுமென்றே யுனை
இழுக்குள பாதைக் கிழுத்துச் செல்வேன்.
மெய்யும் பொய்யும் விரவிய நூல்களில்
ஐயம் பார்த்துப் பொய்யை விடுத்துள
உண்மையை உணரும் உயர்மதி வேண்டும்.
ஆலம் அமிழ்தெனக் கோலம் கொள் கவி
கால மிதாதலின் நாலறிவா ளுயர்

சீலம் பெறுவதிற் சிரமம் அதிகம்.
அன்றியும் பலர்பல அறைவார், அவற்றுள்
ஒன்றையே உறுதியாய்க்கொண்டிட வேண்டும்.
குருமொழி யொன்றே தருமுனக் குறுதி.
நல்லவை, தீயவை என்பன எல்லாம்
சொல்லள வாதலின், சொல்லே துணையாய்த்
தொடர்ந்துளக் கதவைக் கடந்தா யாயின்
இறுதியில் எதிர்ப்படும் உறுதியின் சிகரம்.

**மாணவன்** சொல்லுக் கோர் பொருள் இல்லாதிருக்குமோ ?

**கலியன்** இருக்கும் நன்றாய் ! எனினும் சிந்தையை
உருக்கும் நினைவுகள் உதவா எதற்கும்.
எண்ணம் பேற்செல இயலா நிலையில்
நண்ணிடும் ஓர்சொல், நலிவகற் றிடுமது !
வில்லம்பினும் சொல், வியத்தகு மாயுதம் !
சொல்லேருழவர் தொடுசரம் கொடிதாம்.
எல்லையில் பொருளையும் எளிதில் விளக்கிடும்
ஒல்லையில் திட்டம் உருக்கொளச் செய்யும்
சொற்களை நம்பித் துணிந்திடல் எளிது !
சொல்லோர் சிறிதும் துயர் உறா தென்றும் !!

**மாணவன்** இன்னும் சிறிதுமைத் துன்புறுத்திடுவேன்
மன்னிப் பீர் எனை ! மற்றுள கலைகளில்
மருத்துவம் பற்றியும் கருத்தையறிந்திட
விருப்பங் கொண்டேன், வருத்தந் தவிர்ப்பீர் !
ஈண்டு நான் தங்கும் ஆண்டொரு மூன்றில்
கற்பதற் குள்ள கலைகள் மிகப்பல.
முற்படச் சிற்சில மொழிந்திடின் — அவற்றுட்
கற்பன கருதிக் காண்பேன் மெய்வழி !

**கலியன் தனக்குள்** அறவுரை பேசி அலுத்தேன் ! — சற்றினித்
திறமுள பேயின் குணம் சிறி துரைப்பேன்.

**மாணவனைப் பார்த்து** மருத்துவக் கலையென் மனத்திற் கொத்ததே !
பருத்த அண்டத்தொடு பண்டியுட் பிண்டமாம்.
இருவிதப் பொருள்களின் இயல் புணர்ந்தவற்றின்

அகம்புறம் என்றிடும் வகையறிந்திடலாம் ;
அப்பால் ஒப்புக்கொள்வோம் யாவும்
தப்பா தீசன் தன்வழி நடப்பதை !
விஞ்ஞா னத்தின் விரிவெலாம் பார்த்தென் ?
மெய்ஞ்ஞா னத்தின் விளக்கத் தனவே
எந்தக் கலையும் வந்திடும் எவர்க்கும் !
கட்டிப்பிடித்திடுங் கணக்கறிந் தையென
அனைத்திடு மொருவனை ஆசான் எனக்கொள்.
உனக்குப் போதிய உடல் வனப் புள்ளது !
மனத்துளும் மாறு உறுதி பெற்றுள்ளாய்
அச்சம் ஒழித்திடு ! ஆண்மை வளர்த்திடு !!
நிச்சயம் பலரும் நிபுணனென் றுன்னை
மெச்சிடுவார்கள் — முக்கியமாகப்
பெண்களோ டெப்படிப் பழகுவ தென்னும்
பண்பதை நன்றாய்ப் பயின்றிட வேண்டும்.
ஆ ! ஊ ! என்றோர்—ஆயிரம் விதமாய்
வாய்விட் டுயிர்த்து மாயம் செய்வர்.
பெருமூச்செறிவார், பேசா திருப்பார்.
வெருவினர் போன்று மருண்டு விழிப்பார்.
வெறுப்பவர் போன்று விருப்புடன் மருவுவர் !
சிறுமியர் இயல்பிற் செய்யும் இவ்வித
ஏமாற் றெல்லாம் எளிதில் அறிவான்
மாமாத்திரப்பேர் வல்லான் ஒருவன்
ஆறுதல் அளிப்பான் அருமருந்தொன்றால்.
நெடுநாட் பழகிய நேயனைப் போன்றவர்
படுக்கைக் கருகிற் பாங்குற வமர்ந்துப்
பரிவுடன் அவர்க்குள குறையெலாங் கேட்டுப்
பிரியங் கொண்டிடப் பேசிட வேண்டும்.
பெரிய வைத்தியன் எனப் பேர்பெறவேண்டி
நீண்ட பட்டங்களைப் பூண்டிட வேண்டும்.
தைரியமாகக் கைதனைப் பிடித்து
நாடிப் பரீட்சை நடத்தும் போதே
தேடிக் கடைக்கண் குறிப்பையும் நாடிக்

கையை மெதுவாய் அழுத்தி அதன்பின்
பையப் பண்டியைத் தடவிப் பார்த்துப்
பெண்களின் குறையிது வென்றறிந் திடுவான் !

மாணவன் நன்ருய்ச் சொன்னீர் ! ஞாயமுண் டும் சொலில் !

கலியன் கற்பனை இதுவெறும் கல்லைக் கடித்தல் போல் !
கற்பகம் போன்றது வாழ்க்கையின் அநுபவம்.

மாணவன் மற்றும் பலமுறை வந்துன் சீரிய
சொற்களைக் கேட்கத் தூண்டிடும் ஆசை.
வந்திட லாமோ ? அன்றிது கனவோ ?

கலியன் சந்ததம் வந்திடு. தடையிலை சற்றும்
எந்த நாளாயினும் வந்திடுன் இட்டம்போல்.

மாணவன் போய்வருமுன் இப்புத்தகத்திற் சில
வார்த்தைகள் எழுதிட வந்திப்பேன் நான்.

(மாணவன் தன் புத்தகத்தைக் கொடுக்கக் கலியன்
அதில் கீழ்வரும் வாக்கியத்தை எழுதிக் கொடுக்கிறுன்)

அல்லன நல்லன அறிந்தபின் நீயும் அவன்போலாவாய்.

(மாணவன் பணிவுடன் புத்தகத்தை வாங்கி வணங்கிச்
செல்கிறுன்)

கலியன் முதுமொழி யிதை யுன் மேல் வரிச்சட்டமாய்
விதுப்புடன் கொள்வாய் ! எனினும் விடாமல்
பிடித்திடும் மாயை. பேதையே ! உன்னைப்
படைத்தவன் பெரிய தேவனே யாயினும்
கடைநாள் வந்துனைக் காப்பாற் றுவனே ?
உடைந்திடு மனத்துள் அடைந்திடு வாய் துயர்

(வாஸ்து வருகிறுன்)

வாஸ்து எங்கு சென்றிடுவோம் ?

கலியன் எனக்கென்ன தெரியும் ?
சங்கைக்குரிய என் நண்பரன்றே இனிச்
சென்றிடும் பாதையைத் தெரிந்திட வேண்டும் !
முன்னால் நண்ணிய பிண்டத்துல்கையும்

பின்னால் பெரிதாம் அண்டத்தளவையும்
கண்டறிந்திடுவோம். காண்போம் இன்பம் !!

வாஸ்து  தாடி நீண்டிருப்பினும் சனங்களோடியல்பாய்
நாடிப் பழகும் நற்பண் பெனக்கிலை.
உலகத்தவரோ டொட்டப் பழகிப்
பயன் பெறுவேனோ ? பயங்கொளும் நெஞ்சம் ;
பிறர்முன் நான் மிகச் சிறியன் எண்றெண்ணிப்
பலர்முன் செல்லப் பதட்டங் கொள்வேன் !

கலியன்  காலத் தாலெல் லாஞ் சரி யாய் விடும்
கோரப்படுவது குறையா ஊக்கமே.

வாஸ்து  புறப்படலாமெனில் புரவி வேண்டாமோ ?
வாகனம் எங்கே ? சேவகனும் இலை !

கலியன்  இதோ ! இத்துணியை விரித்ததன் மேல் நாம்
இருந்திடில் வேண்டிய இடம்செல முடியும்.
ககனத் தெழும்பிப் பறந்திடலாம் பார்.
நாட்டை விட்டுச் செலும் நமக்கேன் அதிக
மூட்டை முடிச்சுகள் ! உடுத்திய துணியுடன்
புறப்படுவோம் வா ? பொறு !! ஒரு கணத்துட்
பறந்திட விசைதரும் பவனம் செய்வேன்.

# மருதூர் கள்ளுக் கடை

குடிப்பவர் கூட்டம்.

குறை மூக்கன் குடிக்கப்படாதாம் ! சிரிக்கப்படாதாம் !
விடியா மூஞ்சிகள் வேண்டா மிங்கே.
இடி இடியென் றெக்களத் தெப்போதும்
கலகலவென்று கதைத்திடும் நீயேன்
சலந்தனில் மூழ்கிய சலங்கைப் பூனைபோல்
புலம்புகிறாய் முகப்பொலி விழுந்தின்று ?

கறைப்பல்லன் எல்லாம் உன்னால் ஏற்பட்டதுதான்,
சல்லா பத்திற் கிருவர் வேண்டுமே ?
நீ யுன் பொறுப்பை நினைத்திட வில்லை.
வாயுனக்கேன் இனி ! வம்பு பேசாதே.

(குறை மூக்கன் ஒரு மொந்தை கள்ளைக் கறைப்பல்லன் தலையில் ஊற்றி அபிஷேகம் செய்கிறான்)

குறை மூக்கன் வம்புந் துன்பும் வந்தன பார் இதோ !

கறைப்பல்லன் (துடைத்துக் கொண்டு) கம்பளிப் பயலே ! கழுதையே !! நாயே !!!

குறை மூக்கன் (சிரித்துக் கொண்டு) தம்பி ! உனக்கே தகும் இவை முற்றும்.

செங்கண்ணன் சண்டை செய்கிறவன் யாராயினும் சரி,
மண்டையில் அடித்து வாசலில் ஓட்டு
குண்டங்குண்டமாய்க் குடிப்போம் வாரும் !
தொண்டை கிழிந்திடத் தூற்றுவோம் உலகை.

பாடுகிறான் என்னானே, உன்னானே, சொன்னேனே தன்னானே !

பெருவயிறன் கன்னான் கடையில் கரடி போந்தது போல்
கன்னா பின்னா வெனக்கத்தும் சத்தம்
காதைத் துளைக்குது வாயை மூடச்சொல்.

செங்கண்ணன் முகட்டைக் கிழித்திட ஒலிக்கும் குரலே
புகழ்ச்சிக்குரிய பெருங்குரல் என்பர் !

குறை மூக்கன் அது மிகவும் சரி — ஆட்சேபிப்பவன்
ஒதுங்கித் தனியே பதுங்கிக் கொள்ளலாம்.

பாடுகிறான் ச ரி க ம ப த நி ச

செங்கண்ணன் ச நி த ப ம க ரி ச

குறை மூக்கன் சாரீரம் வெகு நன்றாய்ச் சேருது
வாரீர் சேர்ந்தொரு பாட்டுப்பாடுவோம்.

(இருவரும் சேர்ந்து பாடுகின்றனர்)

ராமனும் எங்கே? — ராம
ராச்சியம் எங்கே? (ராம)
ராவணனை மாய்த்துவிட்டு
சானகியை மீட்டு விட்டு
யாவரையும் வைத்துவிட்டுத்
தேவனெனப் போன — அந்த (ராம)

கறைப்பல்லன் வழக்கை விலைக்கு வாங்கும் பாட்டிது!
சழக்கனுக்கேற்ற சண்டிப் பாட்டிதைக்
கேட்டிடமாட்டேன், நாட்டுக்கதிபதி
ராமனேயாகுக! ராவணன் ஆகுக!!
நாமதற்கேன் விவகாரஞ் செய்யணும்?
ஆண்டவன் எனையோர் அரசனாகச் செய்யா
ததுகுறித் தவரை நான் வாழ்த்துவன் தினமும்.
மனிதரை மேய்த்திட மனிதருள் ஒரு தனித்
தலைவன் வேண்டிடில் தாபதன் ஒருவனைப்
பண்டார சன்னதி யாக்கிப்பலரும்
கொண்டாடுவோம் உயர் பீடத்திருத்தி.
வாழ்க்கையில் வெற்றி யளித்திடுந்தன்மைகள்
யாவென நீவிர் யாவரும் அறிவீர்!

(குறைமூக்கன் பாடுகிறான்)

காவிச் சேலைக்காரி

1. வாவிச் சோலைக்கருகே — அன்றொரு
காவிச் சேலைக்காரி
மேவித்தன் பார்வையினால் — என்றன
தாவிதனைக் கவர்ந்தே

2. சென்றனள் பின் தொடர்ந்தேன் — அவளோ
திரும்பிப் பார்க்கவில்லை.
நன்றென முன் நடந்தே — வழியின்
நடுவில் நின்று கொண்டேன்.

செங்கண்ணன் காதற் பாட்டும் காதலர் கூட்டமும்
வேதனையே தரும் வேண்டாம் எனக்கு.

குறை மூக்கன் கைதனங் காணவும் கடைக்கண் பேசவும்
மைவிழி மாதினை மெய்யுறப் புல்லி
வாயொடு வாய்வைத் தளித்த முத்தங்களோர்
ஆயிரங்கோடி பொன்பெறும், அதை நான்
நினைத்துப் பாடுவேன், நீ யார் தடுத்திட.

(மீண்டும் பாடுகிறான்)

3. வார்த்தை பெற வேண்டி — வழியை
மறித்து நின்ற என்னைப்
பார்த்து நீ யார் உனக்குச் — சற்றுமுன்
பழக்கம் இல்லாத

4. பெண்ணுடன் என்ன வேண்டும் ? — சின்னஞ்சிறு
பிள்ளையும் நீயலவே !
கண்ணியமாக வழி — விட்டுந்தன்
காரியம் பார்க்கச் செலாய் !

5. இவ்வுரை கூறியவள் — இருவழி
ஈட்டியாற் கொல்வாள்போல்,
செவ்வரிக் கண்ணுளும் — என்முன் ஒரு
சித்திரம் ஒத்து நின்றாள்.

கறைப்பல்லன் பாட்டிதுபோல் நான் கேட்டதே இல்லை.
காதும் குளிர்ந்தது, கருத்தும் இனித்தது.
மீதியும் கேட்போம், மேலும் பாடுக.

செங்கண்ணன் நிலையிலாப் பெண்களை நினைந்தேன் வீணாய்
நெஞ்சழிந்திடுவாய் ? நஞ்சினுங் கொடியவர்
என்றிடில் நீயதை இன்று சொற் கேளாய்
ஆயினும் அவர் குணம் அறிவாய் ஒருநாள்.

அதுவரை மனம்போல் கவிகளாக் கித்தினம்
அர்ச்சனை செய்திடு ! தடுப்பாரிலையுனே.
நான்ஒரு சிறுக்கியை நம்பினேன் சிலநாள்
தான் ஒரு முடவனைத் தனிமையிற் றேடிக்
கொண்ட பின் இருவரும் சென்றனர் அயலூர்.
போகும் வழியில் புதியவன் ஒருவன்
தாடி நரைத்துள கிழவன் எதிர்வந்(து)
ஏடி ! பெண்ணே !! கூடிடுவோம் வா
என்றதும் அவன்பின் ஏகினள் கள்ளி.
குன்றென உயர்ந்திடும் தோளுடைக் காளையைத்
தள்ளித் தளர் நடைக் கிழவனைக் கூடும்
கள்ளிகட்கோ உன் கருத்தை இழப்பாய் ?
தூக்கிலாப் பெண்களின் மூக்கை யறுத்திடத்
தூண்டும் என்மனம்; தோன்று திரக்கமே !

கறைப்பல்லன் (கைகளைத் தட்டி) போதும் ! நிறுத்துன் புலம்பல் சலித்தது.
வாழ்க்கையிற் பலவகை யனுபவம் பெற்ற என்
வார்த்தையைச் சிறிதுநீ கேட்டிட வேண்டும்.
மங்கையர் கொங்கையில் மதியிழந் தோர் சிலர்,
இங்குளர் — அவர்களின் ஏக்கம் போக்கும்
புதுவகைப் பாட்டொன் றுரைசெயக் கேட்பீர்.
எல்லோரும் உடன் பல்லவி பாடுக !!

காதல் தீயிலே உடல்

1. மாதர்மீது வைத்திடும்
காதல் தீயிலே — தினம்
உடலும் கருகி வேகுமாம்
உளமும் உருகிப் போகுமாம் ! (மாதர்மீது)

2. அடுக்களைக் குள் ஓரெலி
குடித்தனம் செய்திருந்ததாம்,
அடையும் வடையும் இட்டம்போல்
கிடைத்த மட்டுந் தின்றதாம். (மாதர்மீது)

3. பண்டார சன்னிதியைப்போல்
குண்டான ததன் பண்டியும்,
பண்டந் திருடும் எலிதனைக்
கொன்றொழிக்க மடையனும்

4. எண்ணியொரு நாள் வெண்ணெயில்
உண்ண நஞ்சை வைத்தனன்,
நஞ்சை யுண்ட குண்டெலி
நெஞ்சுலர்ந்து நா வரண்டு

5. கொண்ட தாகம் மிஞ்சவே
கண்ட நீரைக் குடித்ததாம்.
காதல் கொண்ட மனிதர்கள்
நோதல் போலத் துடித்ததாம்!

5. அங்கும் இங்கும் ஓடிற்றும்
சங்கிச் சலித்து முடிவிலே
அடுப்பங் கரைக்கே வந்ததாம்
படுத்துப்புரண்டு மடிந்ததாம்.

7. அதைக்கண் டந்தச் சமையலான்
ஆஹா! உனக்கும் இன்றுடன்
அந்திக் காலம் வந்ததோ?
என்று குலுங்கச் சிரித்தானும்! (மாதர் மீது)

பெருவயிறன் இதற்கேன் இத்தனை குதூகலம் பாவம்!
எலிகளைக் கொல்ல எவனோ மடையன்
விஷம் வைத்தானாம்! வீரச்செயல் இதைப்
பாராட் டிடுவர் பரம முட்டாள்கள்.

கறைப்பல்லன் அவ்வகள் உன் தோழர் ஆவது சரியே!

குறைமூக்கன் வழுக்கைத் தலையும் கொழுத்த எலியும்
வயிறு பெருத்துள வகையில் தோழரே!!
எலிகளின் துயர்கண் டெவ்வள விரக்கம்!
இருவரும் பெரு வயி றுடையவர் அதனால்
ஒருவருக் கொருவர் உறவு கொண் டாடுவர்.

(வாஸ்துவும் கலியனும் கள்ளுக்கடைக்கு வருகின்றனர்)

கலியன் இன்பமே பேணும் இந்தக் குழுவினர்க்(கு)
உந்தனை யறிமுகம் செய்து வைத்திடுவேன்,
அவனிமீ தெவ்விதக் கவலையு மின்றிக்
காலங் கழித்திடுங் கலை யறிந் திடலாம்.
சீலம் துறந்த சிறு மதியினர் இவர்க்கு
எல்லா நாளும் இன்புறு நாளே !!!
வளைந்த தன் வாலைத் தொடர்ந்து பின் சுற்றி
விளையாட் டயரும் பூனைக் குட்டியைப்
போன்றிவ் வொருவரும் போதுமென் மனத்தொடு
சான்றோர்என்னத்தன் காரியத்தைக்
குறுகிய எல்லையுட் கருதியிருப்பவர்.
கடை முதலாளி கருணையாற் கடன் சொலிக்
கிடைத்த மட்டுங் குடித்திடுவார், பின்
எதையும் எண்ணு தின்புற் றிருப்பர்.

கறைப்பல்லன் பார்க்கும்போதே ஊர்க்குப் புதியவர்
என்பது விளங்கும் ! எங்கோ இவர்கள்
போகும் வழியிற் புகுந்தனர் போலும்.

குறைமூக்கன் தஞ்சையைச் சேர்ந்தவர் என்று நினைக்கிறேன்.
தஞ்சா வூரார் தந்திர சாலிகள்.
பலரொடும் சரசமாய்ப் பழகுவர் என்பர் !!

செங்கண்ணன் யாத்திரைக் காரரை யாரென மதித்தாய் ?

குறைமூக்கன் பெருங்குடிப் பிறப்பிவர் முகந்தனிற்றெரியும்
அனுமா னிப்பதேன் ? அவர்களைக் கொண்டே
அறிவேன் விவரம், அரைநொடியதனில்,
சொல்விளம் பியிலோர் சொப்புட் கொண்டால்
எல்லாம் அவர்வாய் இருந்தறிந்திடலாம்.

செங்கண்ணன் கண்டிப்பாய் இவர் கழைக் கூத் தாடிகள்.

பெருவயிறன் கண்டதும் அவ்விதம் கருதினேன் நானும்.

குறைமூக்கன் பேசாதிருப்பீர் ! லேசாய் இவர்களின்
அந்தரங்கம் எலாம் அறிந்திடுவேன் நான்.

கலியன் மந்த மதியினர் — தந்திரமாய் இவர்
(வாஸ்துவிடம்) தலைமீதேறும் சனியனை அறியார் !

வாஸ்து வந்தனம் ! தோழரே !!

செங்கண்ணன் வந்தனம் வருக !!
ஒருகால் நொண்டும் முடவர் உன் தோழரோ ?

கலியன் இருவரும் இங்கே இருந்திட லாமோ ?
அனுமதி யுண்டெனில் அளவளா விடுவோம்.
கள்ளிலாக் குறையையும் களிப்பினில் மறப்போம்.

பெருவயிறன் நட்புக் கேற்ற நல்லோர் எனில் நீர்
உட்கார்ந் திடுக, உறவினி யாவீர் !

குறைமூக்கன் அண்மையிற் காரைக் குடிவழி அவசியம்
வந்திருப்பீரே — அந்தவூர்த் தலைவர்
சந்தனத் தேவரைக் கண்டதுண்டோ நீர் ?

கலியன் காலையில் அவரைச் சாலையிற் கண்டோம்.
நின்றுரை யாடிட நேரம் இருக்கலை.
அன்றொருநாள் அவர் அகத்திற் றங்கினேம்
அப்போ துங்களைப் பற்றியும் பேசினர் !

(குறைமூக்கனைப் பார்த்துத் தலையசைக்கிறன்)

பெருவயிறன் ஒப்புவாயோ இனி ?

செங்கண்ணன் துப்பறிவான் இவன் !

குறைமூக்கன் சற்றே பொறுங்கள் ! முற்றும் அறிவோம்

கலியன் சற்றுமுன் யாரோ பாடிடக் கேட்டேன்
கூரையைத் துளைத்துப் பீறிடும் கீதம்
உரைத்தவர் யாரோ கலைத்திறம் உள்ளவர் ?

குறைமூக்கன் இசையறி வதிகம் இலையுமக் கையா !

கலியன் மெய்யே ! எனக்கதில் விருப்பம் இருப்பினும்
பண்ணொடு பாடிப் பழகலை அதிகம்.

பெருவயிறன் எங்கே ஒருபாட்டிசைத்திடு கேட்போம்.

கலியன் எத்தனை வேண்டினும் இசைப்பேன் கேளும்.

செங்கண்ணன் புத்தம் புதிய பாட்டா யிருக்கட்டும்.

கலியன் பாடுகிறன்

லல்லா லல்லா லாலலல்லா
செல்லுப் பூச்சியின் கதை கேளீர் !

1. முன்னொரு காலந் தோளூரின்
மன்னவன் ஒருவன் வாழ்ந்தானும்! (லல்லா)
சின்னஞ் சிறிய உயிர்களையே
தேடிப் பிடித்தவன் வளர்ப்பானும் !

2. ஒருநாள் தெருவாழ் சிறுபூச்சி
ஊர்ந்திடக் கண்டதை எடுத்து வந்தான்
ஒருவகைத் துள்ளுப்பூச்சை யெஃறே
உரைத்தார் பலரும் இழிவாக ,

3 அருமைக் குழந்தையைப் போல் அதனை
அன்புடன் அரசனும் வளர்த்தானும் ;
பருவம் வந்ததும் பாச்சைதனைப்
பிரதம மந்திரி ஆக்கினனும் !!

குறைமூக்கன் அரசனுக்கேற்ற அமைச்சன் ! ஆஹா !!

செங்கண்ணன் அந்நாட்டவரின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் !!

எல்லாரும் லல்லா லல்லா லால லல்லா !!!!

கலியன் 4 அந்தப் பூச்சியை அழகு செய்ய
அணிகள் பல பல பூட்டினனும் !
விந்தைப் பட்டால் விதவிதமாய்
வேண்டிய ஆடைகள் தைந்தானும் !

5 அந்தஸ் ததிகம் ஆவதற்காய்
அதற்கொரு ஜாகீர் அளித்தானும் !
குந்தளப் பொன்னல் முடி செய்தான்
கொடுத்தான் முத்திரை போட்டதற்கே !

6. துள்ளுப் பூச்சித் தலையமைச்சன்
திறமுடன் காரியம் பார்த்தானும் !
துள்ளித் துள்ளிச் சாக்கடையில்
சுற்றித் திரிந்த தன் இனத்தை யெலாம்

7. மெள்ளப் பதவியில் ஒவ்வொன்றாய்
நியமித்தரசை நிரப்பியதாம் !
துள்ளுப் பூச்சியின் ஆட்சியினால்
சீரழிந் திட்டது தேசமெலாம்

8. வரவரச் சனங்களைக் கடித்ததனால்
வருந்தினர் குடிகளும் வாய்மூடி
அரசன தாணைக் கடங்கியவர்
அமைதியாய் இருந்தார் சிலகாலம்.

9. கரப்புகள் கடித்தால் துடைக்காதீர் !
களிப்புடன் சகிப்பீர் எனக்காக
சிரமப் படுத்தும் பூச்சிகளைச்
செருக்காதீர் என்றான் அரசன்.

10. தம்மைத் தடுப்பார் இலையென்றே
தருக்கிப் பூச்சிகள் மதிகெட்டு
அம்மா தேவியின் அறையிற் போய்
அரசியின் பகலையும் கடித்தனவாம்.

11. நம்மைக் கடித்தால் நாமதனைச்
சும்மா விடுவோமோ சொல்லீர் !
இப்பெறு முன்னே ஓரடியால்
இயமன் பதிக்கனுப அனுப்பிவைப்போம் !

குறைமூக்கன் நம்மைக் கடித்தால் நாமதனைச்
சும்மா விடுவோமோ சொல்லீர் ?

கலியன் 12. அதிகோபங் கொண்டாள் அரசி
அக்கணம் ஆட்களை ஏவிவிட்டுச்
சதிசெய் பூச்சியின் சாதியையே
சமூதியில் அழித்திடச் செய்தாளாம் !!!

கறைப்பல்லன் நம்மைக் கடித்தால் நாமதனைச்
சும்மா விடுவோமோ சொல்லீர் ?

செங்கண்ணன் இதுபோல் அழிந்திடும் எல்லாப் பூச்சியும் !

குறைமூக்கன் கதுமெனப் பிடித்துக் கசக்கிக் கொல்லணும் !

பெருவயிறன் இது போதெனக்கொரு சொப்புப் போடணும் !

குறைமூக்கன் கள்ளு மிடாவில் இல்லையோ சொட்டும்
செங்கண்ணன் கிட்டாதாயின் வெட்டென மற !
பெருவயிறன் முட்டாள் அன்றோ மூதுரை சொல்வான் ?
குறைமூக்கன் இல்லாக் கள்ளுனக் கெப்படி வந்திடும் ?
கலியன் கள் இலை யென்றேன் கவலைப்படுகிறீர் ?
கண் இமைப்பதற்குள் கள் வரச் செய்வேன்
இஷ்டம்போல் எல்லோரும் குடிக்கலாம் ?
செங்கண்ணன் அப்படிச் செய்தால் அனைவரும் உன்னைத்
தப்பிலித் தலைவனென் றேற்றுக்கொள்வோம் !
வரவழைப்பது முதல்தரமா யிருக்கணும் !
குறைமூக்கன் நிறையவும் இருக்கணும், நிச்சயம் எனக்கே
குறைந்தது இரண்டு குடங்கள் வேண்டும் !!
கலியன் அவரவர் வேண்டும் அளவைச் சொல்லுக !
செங்கண்ணன் எனக்கும் இரண்டு குடங்கள் வேண்டும்
கறைப்பல்லன் இரண்டும் இரண்டும் வேண்டும் எனக்கு !
பெருவயிறன் நாலும் இரண்டும் சேர்ந்தெனக்குச் சரி !
கலியன் மேலும் வேண்டிடில் கேளும் தோழரே ?
குறை மூக்கன் பொய்யோ உன் சொல் ? வேடிக்கை வேண்டாம்,
செங்கண்ணன் ஐயா ! ஏளனம் செய்யாதீர் எமை !
கறைப்பல்லன் ஆசை காட்டிப்பின் மோசம் செய்தால்
வாசலில் வைத்துன் மீசையைச் சிரைப்பேன் !]

கலியன் ஆத்திரம் வேண்டாம் அன்பரே ! இங்குள
பாத்திரம் எல்லாம் காலிதானு வெனப்
பார்த்துச் சொல்லும், ஆர்த்திடலாம் பின் !

கறைபல்லன் கடையிலுள்ள எல்லா மிடாக்களையும்
குடங்களையும் பார்த்துவிட்டு

எதிலுந் துளியிலை, எல்லாங் காலி !

கலியன் அதிசயங் காண்பீர் ! அங்குள பானைகள்
அனைத்தையும் என்முன் வரிசையில் வைப்பீர் !

நால்வரும் எழுந்துபோய் மீடாக்கள், குடங்கள்,
கலயங்கள், சோப்புகள் இவை எல்லாவற்றையும் எடுத்து
வந்து கலியான் முன் வைக்கின்றனர்.

கலியான் அவைகளைத் தன் கைகளால் நடவி, இடது
கைச் சுட்டு விரலால் அவற்றின்மீது ஏதோ எழுதுகிறன்
பலநிறக் கோலங்கள் பானைகள்மீது காணப்படுகின்றன.
கலியன் அப்பானைகளைச் சுற்றி வந்து முன் நின்று தன்
அங்கங்களைப் பலவாறு அசைத்தும், ஆட்டியும்
பின்வரும் மந்திரம் சொல்கிறன்—

*நிலமிசையிருந்தே நீள் விசும்பிற் செலத்*
*தலையை நிமிர்த்தெழும் பனையே வருக !*
*அன்னைபோல் மாரு அன்புடன் அளிக்கும்*
*தென்னையே ! நீயும் திருவுடன் வருக !*
*இருவரும் பானையில் புதுமது வடித்துத்*
*தருவீர் ! தோழரின் தாகம் தணிப்பீர் !*
*இயற்கைத்தேவி ! உன் எண்ணருஞ் சக்தியை*
*மனத்துட்கொண்டு வருந்தி யழைக்கிறேன் !*
*வா ! வா !! தாயே !!! வந்தெனைக்காவாய் !*

(குடியரைப் பார்த்து) *தோழரே ! பானையைப் போயினிப் பாரும் !*
*எல்லாப் பானையும் நிறைந்தனவோ சொலும் ?*

குறை மூக்கன் *சால்களில் நிறையப்பால் போலும் கள் ?*

கறைப்பல்லன் *கள் இதுபோல் நான் கண்டதே யில்லை !!*

செங்கண்ணன் *இல்லையென்றினி யார் சொல்வார் இங்கே !!!*

பெருவயிறன் *சொல்லியபடியே செய்தான் நல்லான்*
*சுரர்போல் இனி நாம் துணிந்து குடிப்போம் !!!*

கலியான் *குரல்வளை மட்டும் குடிக்கத் தடையிலை !*
*எனினும் இதை நீர் எண்ணிக் கொள்வீர் !*
*குப்புறப் பானையைக் கொட்டிப் பிடியேல் !*
*அப்படிச் செய்தால் ஆபத் தேற்படும்,*
*அப்புறம் என்மேல் தப்பிலை சொன்னேன் !!*

(குடியர் நால்வரும் மிடாக்களிலிருந்து கள்ளைக் கலயங்கலயமாய் எடுத்துக் குடிக்கின்றனர், ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வெறிகொண்டு வாயில் வந்தபடி பேசிக் கொள்கின்றனர்)

கலியன் வாஸ்துவிடம் *மெய் மறந் தின்பம் எய்தினர் பாராய் !*

வாஸ்து *போதும் ! பார்த்தது போவோம் வாராய் !!*

கலியன் *பொறு ! பொறு ! சற்றே, பொல்லாக் குடிதரும் சிறுமையின் சிகரம் தெரிவோம் விரைவில் !*

(எல்லோரும் மீண்டும் மீண்டும் குடிக்கின்றனர், பெருவயிறன் வெறியேறி மயக்கில் கலயத்தைத் தலைக்கு நேராய் உயர்த்திக் குப்புறப் பிடிக்கிறான்—உடனே அதிலிருந்து ஒரு நாகம் கீழே விழுந்து படம் எடுத்துச் சீறி எழுகிறது)

பெருவயிறன் *ஐயோ ! பாம்பு !! ஐந்தலை நாகம் !*

(அலறிக்கொண்டு ஓடுகிறான்)

கலியன் *பணியே ! பாம்பே ! பாசக் கயிறே !!*

கலியன் பாம்பைப் பார்த்து *பணியே ! பாம்பே ! பாசக்கயிறே ! தணிவாய் உந்தன் தள்ளாக் கோபம் !*

(பாம்பு மாயமாய் மறைந்து விடுகிறது)

குடியரைப் பார்த்து *நரகிற் சேர்க்கும் கயிறிது கண்டீர் !*

பெருவயிறன் *என்னடா இந்திர ஜாலமோ செய்கிறாய் ? எங்களை யாரென அறியாய் இன்னும்*

செங்கண்ணன் *அடிக்கிற அடியால் அறிவான் இனிமேல்*

கறைப்பல்லன் *போக்கிலி ! முதுகைப் பிளப்போம் வாரும் !!*

குறைமூக்கன் *யோக்கியங் கெட்டதைத் தூக்கிக் கொல்வோம் !*

கலியன் *மிடாக் குடியரே ! மூடும் வாய்களை !!*

பெருவயிறன் *அடாது செய்துவிட்டு அவமதிப் பாயோ ?*

செங்கண்ணன் *விடாது பிடி ! பிடி ! விட்டால் கிடைக்கான்*

கறைப்பல்லன் *என்ன துணிச்சல் ! இந்தா இதைக்கொள்*

(ஒரு கலயத்தை எடுத்து அடிக்கப் போகிறுன் அதிலிருந்து ஒரு பாம்பு சீறி எழுகிறது)

ஓ ! ஓ ! நாகம் !! உண்மையிற் பாம்பே !

குறைமூக்கன் ஏதோ சூதிதில் ! இவனைக் கொல்வோம் !

(கத்தியை உருவிக் கையில் பிடிக்கிறுன்)

செங்கண்ணன் குத்திக்கொல்வது முற்றிலும் நியாயமே !!

எல்லோரும் கத்திகளை உருவிக்கொண்டு கலியனைத் தாக்க வருகின்றனர்)

கலியன் (சில சைகைகளைச் செய்து) மாயா தேவி ! மாற்றிடு காட்சியை
ஏய்ப்பாய் இவர்களின் இந்திரி யங்களை !
இங்கும் அங்கும் எங்கும் வந்திடு !!!

குடியர் தங்கள் செயல் மறந்து அப்படியே தம்பித்து நிற்கின்றனர்—ஒருவரையொருவர் உற்றுப் பார்க்கின்றனர்)

பெருவயிறன் எங்கிருக்கிறேன் நான் ? ஏ ! என் கண்ணே !
இன்பக் குயிலே என்னிடம் வாராய் !!

குறை மூக்கன் கட்டிக் கரும்பே ! கண்டே ! தேனே !!
எட்டிப்பிடித்துனைக் கட்டித் தழுவுவேன் !

செங்கண்ணன் அத்தையின் மகளே ! ஆசைக் கிளியே !!
அத்தான் எனக்கொரு முத்தங் கொடுத்திடு !

கறைப்பல்லன் பூ பரத்தடியிற் பொற்சிலை நிற்குமோ ?
ஆமவள் பெண்ணே ! அவள் கரம் பிடிப்பேன் !

(கறைப்பல்லன் தன் அருகில் நின்ற குறைமூக்கன் கையைப் பிடிக்கிறுன்—மற்றவர்களும் ஒருவர் கையை மற்றவர் பிடித்துக்கொள்ளுகின்றனர்—முத்தம் இடுகின்றனர்)

கலியன் (முன்போல் சைகை காட்டி) தேவி ! கண்களின் திரையை எடுத்திடு !

(இவ்விதம் சொல்லிவிட்டு வாஸ்துவுடன் கள்ளுக் கடையிலிருந்து மறைந்து விடுகிறுன்)

(குடியர்கள் நால்வரும் தங்கள் பிடியை விட்டுத் தனித்தனியே விலகி நிற்கின்றனர்)

பெருவயிறன் என்னடா சங்கதி ?

கறைப்பல்லன் எனக்கொன்றும் தெரியலே,

குறைமூக்கன் உன் கைகளையா பிடித்திருந்தேன் நான்

கறைப்பல்லன் என் கைமேல்தான் இருந்தது உன் வாள்.

பெருவயிறன் விஷயம் தெரிந்தவன் விவரமாய்ச் சொல்லேன் ?

செங்கண்ணன் விஷமப் பயலின் வேடிக்கைபோலும் !

கறைப்பல்லன் எங்கே அந்தக் கிங்கரன் ? காணோம் !!

பெருவயிறன் இங்கிருந்தெப்படிச் சென்றான் வெளியே

செங்கண்ணன் கள் மிடா ஏறிக் ககனம் பறந்ததைக்
கண்ணால் நானே கண்டேன் உண்மை !

குறை மூக்கன் பானையில் இன்னும் பானம் உளதோ !

கறைப்பல்லன் பானையிலிருந்தே பாம்பும் வந்தது !

பெருவயிறன் தேனினும் இனித்ததத் திருடன் தந்த கள் !

செங்கண்ணன் யாவும் பொய்யே ! மாயா ஜாலம்

குறைமூக்கன் எதுவும் நடைபெறக் கூடும் இந்நாள் !

கறைப்பல்லன் எதையும் மெய்யெனக் கொள்வதற்கில்லை !!

## சூனியக் கிழவியின் குடிசையில்



அடுப்பின்மேல் ஒரு கொப்பரையில் துர்நாற்றம் வீசும் குழம்பு கொதித்துக் கொண்டிருக்கிறது. அதிலிருந்து எழும் ஆவியில் பற்பல விகார உருவங்கள் தோன்றிக் காட்சி அளித்து மறைகின்றன. அடுப்பின் முன்னால் தேவாங்கு மந்தியொன்று அடுப்பைக் கவனித்துக் கொண்டும், கொதிக்கும் குழம்பு பொங்கி வழியாதவாறு துடுப்பால் அதைத் துழாவிக்கொண்டும் உட்கார்ந்திருக்கிறது.

அருகில் தேவாங்குக் கடுவனும், குட்டிகளும் உட்கார்ந்திருக்கின்றன. கடுவன் தன் உடம்பில் பேன் பார்த்துக் கொள்கிறது. குட்டிகள் விளையாடிக்கொண்டிருக்கின்றன.

குடிசையின் சுவர்களிலும், சுவர் ஓரத்திலுள்ள பெட்டிகளிலும் அநேக விநோதப் பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. கூரையிலிருந்து பல கோரப் பொருள்கள் தொங்கிக்கொண்டிருக்கின்றன.

(வாஸ்துவும் கலியனும் குடிசையின் வாசலில் வந்து நிற்கின்றனர்)

**வாஸ்து** *மாயா வித்தைகள் யாவையும் வெறுக்கிறேன்*
*பாமரர் போற்றும் மூடக் கொள்கைகள்.*
*அறிவுக் கொவ்வா அநுசிதமான புல்*
*நெறியைப்பற்றி நிகழும் செயலிவை !*
*மந்திரம், சாலம், மாரணம், வசியம்*
*ஏவல், பில்லி, சூனியம் முதலிய*
*மாயா வித்தைகள் எவையும் வேண்டேன்.*
*புன்புலால் நாறுமிப் பொல்லாக் குடிலோ*
*சென்ற என் இளமையைத் திருப்பத் தந்திடும் ?*
*தொண்டுக் கிழவியின் சொற்களை நம்பவோ ?*
*அன்றியக் கிழவியின் ஆபாசங்களால்*
*எண்பது வயது இனி ஐம்பதாய் விடுமோ ?*
*வீண் இம்முயற்சி ! வேறெவ் வழியும்*
*இல்லையெனில் இல்லையாம் இனியெனக்குறுதி.*
*இயற்கையில் வாலிபம் எய்திடப் பெரியோர்*
*முயற்சித் தயிந்த முறை யெதும் இல்லையோ ?*

கலியன் இப்போ தன்பநீ ! செப்பிய வெல்லாம்
ஒப்புக்கொள்வேன் — உண்மையில் எவரும்
இயற்கை முறையில் இளமையை மீண்டும்
எளிதில் பெறலாம் — எனினும் இதனைத்
தெளிய விளக்கும் தீபிகை வேறு.
அற்புத முறையது, கற்பவர் மிகச்சிலர்.

வாஸ்து இற்றெனக் கூறாய் !

கலியன் இயர்புவன் கேளாய்
பொன்னைப் பொடி செய் துண்பது போன்ற
மருந்தும் மாயமும் மருத்துவன் துணையும்
வேண்டுவ தில்லை. ஈண்டு இருந் தூட்னே
கானகஞ் சேர்ந்திடு — காய்கனி கிழங்கைப்
போனக மாய்க்கொள்! பூமி திருத்திக்
காணி நிலத்தைப் பேணிப் பயிர்செய்,
எளிய வாழ்க்கையை உரிமையாய்க் கொண்டுன்
குறுகிய எல்லையுட் கருத்தை யிறுத்தி
விலங்குக ளிடையோர் விலங்கென வாழ்ந்திடு.
எண்பதில் ஐம்பதில் இளமையைப் பெறுவதற்(கு)
இதைவிடச் சிறந்த வழியெதும் இல்லை.

வாஸ்து இவ்வழி சிறிதும் ஒவ்வா தெனக்கு
மண்ணைக் கிளரும் வாழ்வொரு வாழ்வா ?
பண்ணையில் உழைத்துப் பழக்கமும் இல்லை.
எப்படி யாயினும் எனக்கிது வேண்டாம்.

கலியன் அப்படியாயின் அழைப்போம் கிழவியை.

வாஸ்து தவ்வைக் கிழவியைத் தவிர்த்து எவராலும்
இவ்வைத் தியஞ் செய இயலாதோ சொல் !
எதற்கும் துணிந்திடும் உனக்கும் அரிதோ ?

கலியன் வேலையைப் போக்கும் வேலை ! இதற்குள்
சோலைகள் ஆயிரம் தோற்றுவித்திடலாம்.
போதமும் கல்வியும் போதா மற்றிதற்(கு)
அறுதி யறியாப் பொறுமையும் அவசியம்.

பரபரப் பின்றிப் பலவாண் டுகளிதைப்
பாகம் செய்துயர் பதம்பெற வேண்டும்.
காலம் சேரக் காரமும் ஏறும்.
மேலும் மருந்திற் சேரும் சரக்குகள்
எளிதில் எல்லார்க்கும் கிடைப்பவை அன்றும்.
அன்றிவட் குப்பேய் அறிவித் திடினும்
இன்றிதைப் பேயால் செய முடியாது.

(குடிசைக்குள்ளிருந்த தேவாங்குகளைச் சுட்டி)

சோடிக் குரங்கின் சுந்தரம் பாராய்!
சேடி இம்மந்தி! சேவகன் அங்கே!!

(குரங்குகளை விளித்து)

எங்கு சென்றனளோ உங்கள் நற்றலைவி?

குரங்குகள் . களியாட் டயர வெளியே சென்றனள்.
மாலையில் தினம் உலாவப் போவது வழக்கம்
பூனையின் உருக்கொடு போயினள் இன்று.

கலியன் திரும்பி எப்போது வருவது வழக்கம்

குரங்குகள் வயிற்றை நாம் நிரப்பும் வரையவள் வாரான்!

கலி வாஸ்துவிடம் இவைகளைப்பற்றி நீ யென்ன நினைக்கிறாய்?

வாஸ்து இவைபோல் நவையுள தெய்வமும் கண்டிலேன்
முகத்தில் விழிக்கவும் முடியலை எனக்கு.

கலியன் இத்தகைப் பேச்சே எனக்குப் பிரியம்.

(குரங்குகளை விளித்து)

மித்தையின் வித்தே! வெறுக்கொள் விகாரமே!!
கோந்தியே அடுப்பில் கொதிப்பதென் கூறாய்?

குரங்கு ஏழைகட் கேற்ற கூழைக் காய்ச்சுவோம்!

கலியன் விருந்துணப் பலபேர் வருவாரோ இவண்

(கடுவன் கலியனிடம் வந்து கால்களை நக்கி வாலையாட்டி நேசங் காட்டிக் கெஞ்சுகிறது)

கடுவன் விரைவில் எனையொரு பிரபு வாக்கிடுவாய்
கணந்தனில் நிறையப்பணம் வரும்வகை சொல்

பகடையை உருட்டிப் பணம் வரச் செய்திடு.
முதற்பரிசெனக்குக் கிடைத்திடச் செய்வாய் ?
பணம் மிகுந் திருப்பின் பலவும் வந்துறும்.
குணமும் குலமும் கூலமும் எளிதிற்
பெறுவேன் பொருள்மிகப் பெறுவே னாகில்

கலியன் பாராய் குரங்கின் பணப்பைத் தியத்தை !

(பெரிய பந்துபோன்ற உலக உருண்டையைக் குட்டிக் குரங்குகள் உருட்டி விளையாடுகின்றன. பந்தை முன்னால் உருட்டி விடுகின்றன. பந்து உருள்வதைக் கண்டு பாடுகின்றன)

உருளுது பார் ! உருளுது பார் !!
உலகந்தினமும் உருளுது பார் !!
உயர எழும், கீழே விழும்,
ஓயாதெப்போதும் உருளும்.

2. களிமண்ணால் ஆனதுவாம்,
கண்ணாடியைப்போல் உடைந்திடுமே !
ஒளியெல்லாம் வெளிமயக்காம்
உள்ளொன்றும் இதில் உறுதியில்லை !!

3. உடையும்வரை உலக மென்பார் !
உடைந்தால் ஓட்டைச் சட்டி யென்பார்
விளையாடி மகிழ்ந்திடுவோம்,
வேண்டாவிடில் உடன் அழித்திடுவோம்.

4. இங்கிருப்பாய் என் மகனே
என்றும் இன்பம்பெறு மகனே !!
அவ்வுலகைப் பாராதே
அழிந்திடுவாய் நீ—அங்கு சென்றால்

கலியன் இங்கெதற்காயுள்ள திந்தச் சல்லடை ?

கடுவன் உங்களின் திருட்டுக் குணத்தை யறிந்திட

(சல்லடையை யெடுத்து மந்தியிடம் கொடுத்து அதன் வழியாய் மந்தியைப் பார்க்கச் செய்கிறது)

கள்ளனோ அல்லனோ உள்ளதைச் சொல்லடி !

கலியன் அடுப்புப்பக்கம் போய் — என்ன விருக்கிற இந்தப்பானையில் ?

குரங்கு — ஒன்றுந் தெரியா ஊமனே ! இன்னும்
பானையைச் சட்டியைப் பார்த்ததே இலையோ ?

கலியன் — ஈனக் குரங்கே ! எண்ணிப் பேசு !!
மானம் பேணி மரியாதை யாய் நட!

(கடுவன் மனைமேலிருந்த துடைப்பக்கட்டையை அப்பால் எடுத்தெறிந்துவிட்டு கலியனை உட்காரும்படி வேண்டிக்கொள்கிறது)

மனைமீ தன்புடன் அணைவீர் ஐயா !!!

(இதுபோதெல்லாம் வாஸ்து அங்கிருந்தநிலைக் கண்ணுடியின் முன்னின்று வியப்புடன் கண்ணுடியையே விடாது பார்த்துக்கொண்டிருக்கிருன். கண்ணுடிக்குப் பக்கத்தில் நின்றும், சிறிது பின் சென்றும், அப்புறம் இப்புறம் திரும்பாது கண்ணுடியையே பார்த்த வண்ணம் இருக்கிருன்.)

வாஸ்து — கண்ணுடி யினுட் காண்பதென் ? ஆ ! ஆ !!
மண்ணுலகோரிடை மாதிவள்போல் ஒரு
பெண் இதுவரை நான் பார்த்ததே இல்லை
எண்ணவும் படா இவள் வனப்பிற்கிணை
விண்ணுலகத்துள் பெண்களும் பெற்றிடார்
கண்ணைக் கவருங் கட்டழகென்னைக்
காந்தம்போல் அவள் காலடிக் கிழுக்கும் !
முகிலிடை முளைத்ததோர் காந்தட் சுமக்கும்
முளரியைப்போலக் குழலிடை ஒருகை
தலையைத் தாங்கத் தரைமீ தொருபுறம்
சாய்ந்த நிலையிற் சயனத் திருக்கும்
சுந்தரிபால் எனைச் சேர்த்திடுவார் எவர் ?
இருந்த நிலையில் இராமல் சற்றே
அருகிற் சென்றால் மறைகிற துருவம்.
மாந்தளிர் மேனியை மறைப்பது போன்று
மெல்லிய சல்லா மெய்த்திறம் விளக்கும்.

வெங்கரியின் இரு கொம்பெனத் திரண்டு
வளருந் தனங்கள் வலுச்சண்டைக்கறை
கூவியழைக்கும், கூர்வேல் காட்டி
வெருட்டும் விழிகள், வியத்தகு மனிதரின்
மனத்தைக் கவரும் மாண்புள பொருள்களுட்
பெண்ணுருவம்போல் பிணைத்திட் டல்லது
எண்ணிற் பிறிதிலே, இத்துணை வன்மையும்
எப்படி வந்ததிப்பொற் கொடியாட்கு !!
இவ்வள வெழிலிவட் கெவரளித்தனரோ ?

கலியன் பிறந்த இடமும் பிறந்த பின் வளர்ந்திடக்
கறந்த இடமும் கருத்தைக் கவர்தல்
வியப்பன் றிவற்றை வெறுத்தல் வியப்பாம் !
படவர வல்குற் பாவையைப் பிரமன்
படைக்கு முன் பற்பல அற்புதப் பொருள்களைப்
படைத்துப் பழகிக் கைத்திறம் பெற்றான்.
மேனகை முதலாம் வானுலகப் பெண்
வனப்பெலாங் கூட்டி வடித்தான் உருவை.
சந்திரன் வடிவமும் தண்மையும் கண்டபின்
சுந்தரி முகத்தைச் செய்தான் துணிந்து.
கொண்டலின் கருமையும் பரப்பும் பார்த்துக்
கொண்டிவட் கேற்ற கூந்தலைக் கொடுத்தான்.
தேய்ந்த பிறைக்கிணை செய்தான் நுதலை
வெஞ்சிலைக் கெதிராய் வஞ்சியின் புருவமும்
வேலுக்கிணை யிவள் விழியையும் படைத்தான்.
வள்ளையும் குமுதமும் எள்ளின் பூவையும்
பார்த்திவள் காதும் வாயும் மூக்கும்
வகுத்தனன். வனப்பெலாம் வாய்த்திடு மிவளைப்
படைத்ததும் பார்த்துப் பற்றிட நினைத்தான்.
எனில் நீ காமுறல் எச்சன் றியல்பே.
சலித்திடும் வரையவள் சாயலைப் பார்த்திடு,
ஆயினும் இவள்போல் அழகி ஒருத்தியை
உயிருடன் கூட்டித் தருவேன் உனக்கு

நல்லூழ் கூட்ட நல்லாள் ஒருத்தியை
இத்தகை அழகியை, இயல்புள மனைவியாய்ப்
பெறுபவன் நிச்சயம் பெறும் பேரின்பம்.

(வாஸ்து கண்ணாடியிற் காணும் உருவையே பார்த்துக்கொண்டிருக்கிறான். கலியன் மணைமீது நீட்டிப் படுத்தபடி கையில் துடைப்பத்தை வைத்து விளையாடிக்கொண்டு சொல்லுகின்றான்)

கலியன் அரியணை மீதமர் அரசனும் யானும்
சரிசமம் என்பதில் தடையினி உளதோ ?
அரசன் நானே ! அரியணை இதுவாம் !!
கரங்கொள் துடைப்பக் கட்டையே செங்கோல் !
மணிமுடியொன்றே மற்றினி வேண்டும்.

(குரங்குகள் கூடிப் பலவிதமாக ஆடிக்கொண்டு மகுடம் ஒன்றைத் தூக்கிக்கொண்டு வருகின்றன)

குரங்குகள் அருமையாய்ப் பெற்ற மணிமுடி இதற்குக்
குருதியும் வேர்வையும் குழைத்துப் பூசுக.

(குரங்குகள் மகுடத்தைத் தூக்கிக்கொண்டு வரும்போது அஜாக்கிரதையாக கைநழுவி விடுகின்றன. மகுடம் கீழே விழுந்து இரண்டாக உடைகிறது)

குரங்குகள் விதியின் கட்டளை — வேறிலை கூறிட !
விதிசெலும் பாதையைத் தெரிந்துரை செய்வோம்.

வாஸ்து கண்ணாடியின் முன் நின்று கெடுக சிந்தை — உறுதுயர் சகியேன் !

கலியன் (மகுடத்தை உடைத்த குரங்குகளைச் சுட்டி)
எந்தன் சிந்தையும் வெந்து புழுங்கும்.

குரங்குகள் நல்லவை நெஞ்சிற் சேரும் போது
நாவினும் நல்ல வார்த்தையே வந்திடும் !
உள்ளதை உள்ளவாறுரைத்திடுவோம் நாம் !
சத்திய நெறியிற் றப்பாதெம்முரை !!

வாஸ்து *நெஞ்சிறாட் பெருந்தீ நிலைத்திடும் எனநான்*
*அஞ்சுகின் றேன் — இனிக் கொஞ்சமும் இங்கே*
*தங்குதற் கொவ்வேன் — சனுதியிற் புறப்படு.*

கலியன் (மணையில் படுத்தபடியே)
*உணர்ச்சி வசப்பட் டெழுகும் புலவரும்*
*உண்மையை உரைப்பர் ஒரொரு காலில்.*

(மந்தி அடுப்பைக் கவனியாமல் இருந்துவிடக் கொப்பரை யில் காய்ந்த குழம்பு கொதித்துப் பொங்கி வழிகிறது. உடனே அதிலிருந்து நெருப்பு கொழுந்து விட்டெழுந்து புகை போக்கியின் வழியாக உயரப்போகிறது. மறுகணம் புகை போக்கியிலிருந்து சூனியக் கிழவி அதி கோபத்துடன் வாயில் வந்தபடி திட்டிக்கொண்டு வருகிறாள்)

சூனியக்கிழவி *அடடா ! படுபாவிகளே !! கெடுவீர் !*
*சுடவா நினைத்தீர் ! — சூனியக் கிழவியை ?*
*நன்றினயக் கொன்ற பன்றியின் மக்களே !*
*நெருப்பைப் பாரா திருப்பிரோ நீவி ?*

(வாஸ்துவும் கலியனும் குடிசையில் இருப்பதைப் பார்த்து)

*யாரிவர் இங்கே ?*
*இவர்க்கெது வேண்டும் ?*
*ஊரும் பேரும்*
*உரை செய்யாமல்*
*கள்ளத்தனமாய்*
*உள்ளே வந்தவர்*
*கருத்துரையாவிடில்*
*வருத்தம் செய்வேன் !*

(துடுப்பைக் கொப்பரையில் விட்டுத் துளாவி அதிலிருந்து நெருப்பை யெடுத்துக் குரங்குகள்மீது வீசுகிறாள். குரங்குகள் அஞ்சிக் கீச்சிடுகின்றன)

(கலியன் மனை விட்டெழுந்து தன் கையிலிருந்த
துடைப்பத்தை சுழற்றி அங்கிருந்த கண்ணாடிகளையும்
பானைகளையும் உடைக்கிருன்)

**கலியன்** சட சட வென்று
சட்டிகள் உடையும்
பட பட வென்று
பானைகள் உடையும்
கட கட வென்று
கண்ணாடி உடையும்
தடபுடலாகச் சமைத்ததை நொடியில்
தகர்த்திடல் எனக்குச் சிறு விளையாட்டாம்!

(சூனியக்கிழவியை உற்றுப் பார்த்து)

உந்தன் கணக்குப் படியே வந்தேன்.

(கிழவி ஆச்சரியமும் அடங்காக் கோபமும் கொண்டு ஓர் அடி
பின் சென்று ஒதுங்கி நிற்கிருள்)

சின்னந் தாழ்ந்து சீர் கெட்டவளே!
இன்னார் என்றெனை அறியாயோ நீ?
உன் தனித் தலைவனை உணராய் எனல் இனி
உன்னையும் இந்தக் குரங்குக் குடியையும்
ஓர் அடியால் உயிர் போக்கிடுவேன் பார்!
யாரெனைத் தடுப்பவர்! பாராயோ என்
மார்பிற் சிவந்த அங்கி யிருப்பதை?
சிரசில் தரித்த சேவலின் இறகைத்
தரிசித் தாவதுன் தலைவனை அறிவாய்?
மாறு வேடத்திலோ வந்திருக் கின்றேன்
பேரைக் கூறு விடில் தீராதோ?

**சூனியக் கிழவி** வணக்கம் பெரியோய்! மன்னித் திடுக!!
மாபெருந் தலைவரின் சூப்பைக் காணும்
காக்கையும் காணு தேக்கப் பட்டேன்

**கலியன்** தவ்வாய்! உனைச் சந்தித்துப் பல
நாளாயிற் றதனல் நீ மறந்தாய்!
கேளாய் உலகிற் செழுமிய பண்பா(டு)

எல்லாரையும்போல் என்னையும் பிணித்தது
வடதிசைப் பிறந்த மாயா வாயசம்
உடலற் றொழிந்தின் றாகத் துறையும்
நொண்டிக் காலுடன் நொதுமல ரிடைப்புகின்
கிண்டல் செய்தெனைக் கேவலப் படுத்துவர்
எனினும் கால்கள் இல்லா திருந்திட
பொய்க்கால் கொண்டு புவனம் திரிவேன்.

கிழவி (சந்தோஷமிகுதியால் ஆடிக்கொண்டு)
தனிப்பெருந் தலைவர் என் சனியனைக் கண்டு
களித்தேன் இன்பக் கடலுட் குளித்தேன்!

கலியன் சனியனென் றென்னை இனியழைக் காதே!

கிழவி ஏனோ? சனியனென்றால் வரும் கேடென்?

கலியன் சனியனை இந்நாள் சகலரும் வெறுப்பதால்
சனியனும் புராணக் கதைகளில் ஒளிந்தது!
எனினும் மாந்தர் எய்திடார் நன்மை!
ஒரு சனி ஒழிந்திட உலகெலாம் சனியன்
குணங்கொடு பலபேர் உலாவத் தொடங்கினர்.
கலியனென் றென்னைக் கனமுடன் அழைப்பாய்,
கலியரின் நடையுடை கற்றேன் காண்பாய்!
பழைய குப்பையைக் கிளராதே — கைத்
தண்டின் முத்திரை கண்டிடுவாய் நீ!!

(கிழவியைப் பார்த்து அருவருக்கத் தக்க சைகை காண்பிக்கின்றான்)

கிழவி சந்தோ ஆ! ஆ! பண்டைக் கருப்பனே இன்னும்!
ஷங் கொண்டு பேய்க்குணம் சற்றும் போகலை உனக்கு!

கலியன் நேயா! இதை நீ நினைவில் கொள்வாய்.
வொஷ்நாவிடம் அலங்கப் பெண்களை அடக்கும் வழியிது!

கிழவி நண்பரே! நீங்கள் நாடும் பொருள் எது?

கலியன் உண்டதும் தவிர உணர்ச்சியை எழுப்பிச்
சண்டமா ருதம்போல் தங்கா தெங்கும்

அலைத்திடும் இளமையை அளித்திடு மருந்தாம்
காம ரசத்தில் வேணுமோர் கிண்ணி
நஞ்சினும் கூரிய சஞ்சீவி தருவாய் !?!

கிழவி — தருவேன் — சிறிதும் தடையிலை ! வேண்டிய
மருந்தும் கைவசம் இருக்கிற திவ்விடம்.
சற்றுமுன் பதிற் சிறிதுட் கொண்டேன் நான்
'மூக்கைத் துளைக்கும் நாற்ற மிப்போதிலை.
நாக்கைச் சுடும் சுவை நனி மிகுந்துளது.

(தனித்துக் கலியனிடம்) — எனினும் போதிய ஏற்பா டின்றி
உணில் இவன் சாவான் ! ஒரு நாளி கைக்குள்,
அடுப்பிற் கொதிக்கும் கொப்பரை யுட் சேர்
அற்புதச் சரக்குகள் சிற்சில கேளீர் !

— 0 —

உள்ளீஇட்டு உமருந்து வகை ஐ
உரைத்தி இடுவேன் கேளமையா — ஓ கே.

1. கள்ளிப் பாஅல் மூணு குடம்
காஞ்சி ரங்காய் மூந்நூறு
உள்ளிப் பூ உடொரு கூடை
ஊமத்தங்காய் முக் கூடை — ஓ கே.

2. வெண் குன்றி மணி வேரும்
மேலா நெல்லி இலைச் சாறும்
வேங்கைப்பால் வெள்ளெருக்கன்
வேரும் பூவும் சேர்த்திடித்து — ஓ கே.

3 மருவாதார் தமைக் கூட்டும்
மருதா அணி இலை பறித்துக்
கருவேழ அ மதமெடுத்துக்
காக்கை நாக்கைப் போட்டரைத்துக் — கேளே!

4. தேரை விழி நூறுடனே
தேவா அங்கின் பத்தெடுத்துச்
சாரை நிணம் வாய்க்கரிசி
ஊறவைத்துப் போட்டிடித்துக் — கேளே !!

வாஸ்து போதும் பிதற்றல் ! — பொக்கைவாய் மூடு.
கலியன் மாதே ! இவர் என் மாண்புள நண்பர் !
உன்கை மருந்துள் உயர்ந்ததைக் கொடுத்திடு
சக்கரம் எழுதிச் சாத்திரம் சொல்லிச்
சீக்கிரம் மருந்தை ஊற்றிக் கொடுத்திடு !

(சூனியக் கிழவி பலவிதமாக ஆடி அசைத்து தரையின்மேல் ஒரு வட்டம் வரைகிருள். அதில் பல அக்கரம் எழுதுகிருள். விசித்திரமான பொருள்கள் சிலவற்றைக் கொண்டு வந்து வட்டத்தில் வைக்கிருள். அடுப்பின் மீதுள்ள கொப்பரை பாட ஆரம்பிக்கிறது. கண்ணுடிக் குப்பிகள் தாளம் போடுகின்றன, குரங்குகளின் கைகளில் தீவட்டிகளைக் கொடுத்து அவற்றை வட்டத்தினுள் உட்கார வைக்கிருள். அவை களின் தலைமேல் ஒரு மணையை வைத்து அதன்மீது ஒரு புத்தகத்தை வைக்கிருள். வாஸ்துவை வட்டத்திற்குள் வரும்படி சைகை காட்டுகிருள்)

வாஸ்து என் இக்கூத்து ? என் ஆம் இவற்ருல் ?
கலியனிடம்— பித்தரின் செயல் இதை முற்றும் வெறுக்கிறேன்.
கலியன் மூடச் சடங்குகள் ! முணு முணு மந்திரம்
வேடமென்ருல் நீ கோடல் வேண்டாம்
உண்மையில் இவையெலாம் உனக்கவள் கொடுக்கும்
மருந்து பலித்திட விரும்பிச் செய்பவை !

(வாஸ்துவை வட்டத்தில் நிற்கச் செய்கிருள். கிழவி புத்தகத்தைப் பார்த்து மிக உரத்த குரலில் அதி விநயத்துடன் மந்திரம் சொல்கிருள்)

1 ஆமப்பா ! ஒன்று பத்தாகும் ! ஆகும் !
அதிலுனக்குச் சந்தேகம் சற்றும் வேண்டாம்
சோமப்பா கலைகள் எனச்சுடர் விட் டோங்கித்
தொல்லையருள் கிழிய முழுச் சோதி யாகும்,
போமப்பா ஒன்றிலே ஒன்று போனல்
புது ஒன்று பூரணத்தில் முளைக்கக் காண்பாய்
காமப்பால் காசினியை வளர்க்கும் ஊழிக்
காலத்திற் கப்பாலும் அப்பால் எட்டும்.

2. எட்டாத ஒன்றில்லை ஒன்றைக் கொண்டால்
இரண்டொன்று மூன்றாகும் நாலும் ஆகும்
முட்டாத மூன்றிலே ஒன்றைக் கண்டால்
மூவாத அஞ்சின் வகை முற்றும் தோன்றும்
அட்டியிலே அஞ்சுவரின் ஆறுந் தோன்றும்
அடுத்தபடி ஏழுடனே எட்டொன் றாகும்
எட்டோடே இரண்டைச் சேர்த் தெண்ணிப் பாரு
ஏகமாய் எங்கும் அது நிறையக் காண்பாய் !!!

வாஸ்து பித்துப் பிடித்துப் பிதற்றுகிறான் இவன் !

கலியன் இத்துடன் நில்லாள் ! இதைப்போல் இன்னும்
எத்தனை சூத்திரம் இருக்கும இப்புவனுள்
முற்றுமிச் சுவடியைக் கற்றேன் ஓர்கால்.
ஏடே டாக எடுத்துப் பலநாள்
புரட்டிப் பார்த்தும் பொருள் விளங் கிடவில்லை.
இதுபோல் இருக்கும் எல்லாச் செய்யுளும்.
மதியை மயக்கும் மருட்பாக் களைக்கண்டு
அதிசயங் கொள்வர் அறிஞரும் மூடரும்.
ஐயம் திரிபுக் கஞ்சிப் பண்டிதன்
அற்புதம் என்பான் ! அதன் பொருள் அறியா
மூடனும் அதனைக் கூடம் என்றிடுவான்
பொருள் தெரியாமலே இருவரும் வியப்பர் !!!
ஏமாறும் தொழில் என்றும் இருந்திடும்
அன்றுபோல் இன்றும் ஒன்றுக்கு மூன்றாய்
மூந்துறச் செல்வது மெய்யல, பொய்யே !!
உரைப்பினும் பேதைக்குணர்வு தோன்றா தெனில்
யாரே அவருடன் வாதாடிடுவர் !!
எழுதுவ எல்லாம் எழுத்தும் ஆகா !
எழுத்தின் தொகுப்பெலாம் பொருளொடும் புணரா !
கிளிகள் எழுப்பும் ஒலிகளுக்கெல்லாம்
ஏதோ ஒரு பொருள் இருக்குமென் றெண்ணிக்
கேட்பவர் வீணே கேதப் படுவர்.

கிழவி புத்தகத்திலிருந்து மேலும் படித்துக்கொண்டே இருக்கிறுள். இடையிடையே உடல் பலவிதமாக அசைத்தும், அவயங்களைப் பலவாறு ஆட்டியும் விநோதமாக நடிக்கிறுள்.

1. ஞாலத் தார் மன வாக்கிற் கெட்டாதது,
காலம் மூன்றும் கடந்து பின் நிற்பது
சீல மோடுயர் செல்வந் தருவது
வாலை ஞானம் வழங்கு மெய்ப்பூரணம்.

2. காலை மாலை கருத்துடன் ஆரண
நூலை ஓதினும் நேர்படுமோ அது ?
வாலை யாள் பகராசி மனம் வைத்தால்
ஏழை முன்றும் எதிர்ப்படும் பூரணம்.

வாஸ்து — ஏனிவள் இப்படிக் கத்தித் தொலைக்கிறுள் ?
நானிதைக் கேட்கச் சகியேன் ! ஆயிரம்
மூடர்கள் கூடிப் பாடுவ தொக்கும்
கூச்சல் என் மூளையைக் குழப்பி வதைக்கும்.

கலியன் (கிழவியிடம் போய்) — ஒப்பிலா நங்காய் ! செப்புதல் கேண்மோ !!
போதும், மந்திரம் ஓதுவ தொழித்திவர்
கோரும் மருந்தைக் கொடுத்திடு சீக்கிரம்,
வழிய வழிய வார்த்திடு கிண்ணியில்,
பழைய நண்பர் ! பயப்பட வேண்டாம்.

(கிழவி மேலும் சில சடங்குகள் செய்து ஒரு கிண்ணியில் திரவத்தை ஊற்றிக் கொடுக்கிறுள். வாஸ்து அதை வெறுப்புடன் வாங்கிக் குடிப்பதற்கு எடுக்கும்போது கிண்ணியிலிருந்து சிறிய தீப்பொறி எழுகிறது)

கலியன் — விழுங்குதி விரைவில் ! தயங்கிட வேண்டாம்,
இளமை பெற்றுடல் உறுதியுற்றிடும் பார் !
பேயொடு பிரியா நேயம் கொண்டுள
நீயும் தீயெனில் நிலை கலங்குவையோ !

(கிழவி வட்டத்தை அழிக்கிறுள். வாஸ்து வெளியில் வருகிறுன்)

கலியன் — புறப்படு வோய் வா ! உறக்கம் இனி இலை !
கிழவி — மருந்து நன்ருய்ப் பலித்திட வேண்டும்

கலியன் — விரும்பி யதைக் கேள், யாதா யினும் சரி
தருவேன் அடுத்த சித்திரைப் பூரணை
அன்றெனை அவசியம் கண்டு கேட்பாய் நீ !!!

கிழவி — பாட்டொன்றுண்டதைப் பாடினுல் சிறந்த
வாஸ்துவிடம்—பலன் கைமேலாம், படித்துக் கொள்வாய் !

கலியன் — வா ! என்பின்னே !! வழிகாட் டிடுவேன் !!!
உடம்பில் மருந்தும் ஊறிப் பிடிக்க
நடந்திடு வேகமாய் ; நன்ருய் வேர்த்திடு ;
சும்மா இருப்பதே சுகம் எனக்கொள் இனி
அனங்கன் விடு கணைக்காளாய் விரைவில்
மனங் களித் திடுவாய், மறப்பாய் மற்றவை.

வாஸ்து — சற்றே பொறுத்திடு, மற்ரேர் முறை யக்
கண்ணுடியில் உள்ள பெண்ணைப் பார்த்திட
ஆசைகொண்டேன், அவள் அழகை யென்
சொல்வேன் !!!

கலியன் — வேண்டாம் , அது வெறும் நிழலே !! விரைவில் !!!
காண்பாய் பெண் இனக்கனி னெலாந் திரண்ட
காரிகை ஒருத்தியை நேரில் உயிருடன்.

கலியன் தனிமையில் — அதிசீக்கிரமே ஔடதங்காட்டும்,
எதிரே வருபவள் எவளாயினுஞ் சரி !
ரதியென இவனும் மதி மருண்டிடுவான்.

— 0 —

## மரகதம் தெரு வழியே போகிருள்.

வாஸ்து — கனிமொழி வாயினுய் ! காண்பவர் கலங்கிடத்
தனி வழி போவதேன் ? தமியனு னுன்னுடன்
துணைவரக் கருதினேன், தோழி ! நீயுன்னகம்
அணைதரும் வரையுநின் அழகினைப் பருகியே ;
சித்திரத் தெழுதொணுத் தேவி ! நான் கோரிடும்
உத்தரம் கூறில்வாய் முத்துதிர்ந்திடுமோ ?
ஊமை நீ யல்லையால் கோபமோ கூறுவாய் ?

மரகதம் — போமய்யா உம்வழி, பொய்யுரை புகல்வதேன்,
அழகியென் றெந்தனைப் புகழுநின் கண்களின்
அழகறி திறம்வெகு அழகழகு, ஆசையாற்
பேசுவதறியீர் ! பேதையேன் னொருவோர்
ஏசுவர், என்பினே அன்ப ! நீ அணைதரில்.
என்மனையும் வெகு அண்மையிலேயுள,
தென் பொருட்டாயினித் துன்புறேலன்பரே !.

[ என்றிது கூறிச் சென்றனள் தேவி,
கன்றிய மனத்துக் காளையும் சென்றவள்
மறையுந் தனையுந் திசை பார்த் திரங்கி
அறையும் இதுவே அவள் நலம் பேணி ]

வாஸ்து தனிமையில் — என்னே இவள் எழில் ! என்னே இவள் துடுக் !
கென்னே இவள் தன் இறுமாப் பிருந்தவா
றிளமையோ டியைந்த இவள்தன் வனப்பிற்
குவமை யார் கூறுவர் ? உம்பர்க்கு மெய்தாப்
பவளச் செவ்வாய், கமலச் செங்கண்,
குவளைக் காது, குயிலென்னுங் குரல்,
அமுதமெனும் சொல், குமிழெனும் நாசி
வில்லார் புருவம், கல்லா ரிளமுலை
பொன்னிறம், மின்னிடை, அவள்மென் நன்னடை
கண்ணிற் கினியள், கருத்துக் கினியள்,
பண்ணிசை பயிலும் பனிமொழி வாயாள்,
கண்ணுறுந்தோறுங் கண்டுபின் னெஞ்சத்
தெண்ணுறுந்தோறும் இன்பம் பயக்குமித்
தையலு யகியாம் தையலைக் கண்டதும்
மையல் கொள் ளாதார் வையகத் தாருளர் ?
காட்சியளித்தென் கருத்தையழித்தும்
பேச்சினால் மனம் பேதுறச் செய்தும்
நோயினைச் செய்தே போயின ளவள் பின்,
தாய் தொடர் சேயெனப் போயினதென் மனம்.
என் மனத் தகலா திவளொரு, மற்றவள்
தன் மனத் தென்னொருத் தங்குமோ ? வறியேன் !

காதல் கொண் டாவதென் ? கண்மணியும் பதில்
ஆதரவோ டெனைக் காதலிக் காவிடில் ?
கண்டது மரும்பிக் கடிதினில் மலர்ந்திடும்
ஒண்டொடி தந்தவிந் நோய்க்கவளே மருந்
தாதலின் அவளையான் அடைந்தா லன்றிக்
காதற் றீயால் சாதல் உறுதி !
பொறுத்தி நெஞ்சே ! போய் நாமுற்றிடு
வருத்த முரைத்தவள் கருத்தறியும் வரை ;
கல்லுங் கரையுங் கரைப்பார் திறமெனுஞ்
சொல்லு முளதால் நில்லா இன்னே
செல்வே னவளிடம், சென்றவ ளோடுஞ்
சொல்லா டிடுவேன் வெல்லும் வகையே,
எனப்பல கூறித் தானே தேறித்
தேனார் மொழியைத் தேடிப் போவான்.

## கலியன் வருகிறான்.

வாஸ்து பவமொரு வடிவாய் அவனியில் வந்தோய்,
வருக வருக ! தருணம் இதுவே
இவளையான் இன்றே அடைதற் கான
வழிவகை சொல்வாய், இழிகுணப் பேயே,
கலியன் எவளோ ? எவ்வா ? றெங்ஙனம் அறியேன் ?
வாஸ்து இவ்வழி, யிப்போ, தேகினள் காணாய் ?
கலியன் காணே னல்லேன், கண்டனன் கன்னியை
வீணாய் இவட்காய் வெதும்பல் வேண்டாம்.
அம்பிகை பாதம் அடி பணிந் தேத்தித்
தெப்பாய்த் தன்மனை திரும்பிப் போவாள் ;
வழிபடுந் தெய்வம் தொழுதிடுவாள் தினம் ;
இழிதொழில் எதுவும் இதுவரை புரியாள் ;
பழியொடு பாவம் இதுவெனத் தெரியாள் ;
இம்மியு மனத்தகத் திழுக்கிலா இவ்விடம்
என் ஜபம் எதுவும் ஏறா தன்றியும்
பிஞ்சினைக் கொண்டோ பெறுவாய் பழச்சுவை ?

வாஸ்து — ஈரே முாண்டின் எழிலெலாந் திரண்ட
வாரேர் முலேயாள் பாராய் இவளைப்
பின்செனப் பிதற்றும் வஞ்சகம் அறிவேன்.
கண்டதுங் காதல் கொண்டிடத் தூண்டும்
பெண்தனைப் பிஞ்செனப் பேசிட லாமோ ?
நன்று நின்கூற்று ! நகைப்புக் கிடமே !

கலியன் — சுந்தரப் பெண்ணெலாம் சொந்தமென் றிடுவான்
இந்திரன் எனவோ எண்ணினை நினையும்
ஏவன செய்தல் தேவர்க்கே தகும் !
பூவுலகோர் பழி பூணார் என்றும்
வாய்மையும் கன்னியின் தூய்மையும் உந்தன்
மாய்கையால் மயக்கிட மதித்தாய் கொல்லோ ?
தரணியில் மலர்ந்திடு திருமிகு பூவெலாம்
உரிமையாக் கொள்ளும் சிறுமதி தவிராய்.

வாஸ்து — நீதியின் நிறைவே ! நேர்மையின் விளக்கே
போதும் உன்றன் போதம் நிறுத்து
காதும் சலித்தது. கட்டுப் பாடெலாம்
தீதெனக் கூறும் காதலர்க்கென் செயுர் ?
பொருளிலாப்பலமொழி புகல்வதாலென்பயன் ?
திருப்பவும் திரும்பவும் புகன்றிடவோ நான் ?
சுருங்கக் கூறில், விரும்பினேன் அவளை,
இன்றேயெந்தனுக்கு இசைவித் திடுவாய் ,
இன்றேல் நமக்குள நேசமு மின்றும்.

கலியன் — பின்னால் வரும்பழி யெண்ணிப் பாராய் !
என்னை லியன்றதைச் செய்வேன் ஆயினும்
கருதிய காலம் வரும்வரை பொறுத்துத்
தருணை மறந்தே முறையிடல் தகுதி.
ஆதலால் ஓரிரு வாரத் தவணை
யாதல் நீயெனக் கீதல் வேண்டும்.

வாஸ்து — நாலிரு நாழிகை தானும் வேண்டாம்.
நானே சென்று நயப்பேன் என்குறை
கள்ளங் கபடொன் றறியாச் சிறுமியின்

உள்ளங் கவர்தற் குறுதுணை வேண்டுமோ ?
சூதும் வாதும் சூழ்ச்சியும் உந்தன்
மாயமும் வேண்டாம் பயக்குறு பேயே !

கலியன் காயலை நேயா ! கருத்தது வாகில்
போய் நீ யுற்றிடு நோயறி விப்பேன்
ஆயினு மிவ்வா றவசரப் படுவதேன் ?
விரும்பிய பொருளைப் பெறும்வரை யப்பொருள்
தரும் பிரியம்போல் தருமோ பெற்றபின்?
நத்தித் திரிந்தபோ துற்றவின்பத்தினை
ஒத்திடுமோ அதைப் பெற்றபின் உறுவது ?

வாஸ்து தாண்டுதல் ஒன்றும் வேண்டேனினியே
வேண்டுவதொன்றே ! அதுவும் அவளே !

கலியன் அறைவது கேளாய் ! ஆத்திரங் கொள்ளேல்,
விரைவினில் அவளைப் பெறுவது கடினம்
தொந்தரை யாலவள் வந்திடா ளென்றும் ;
தந்திரமாகவே வென்றிடல் வேண்டும்.
அவள் மனைக் குன்னை யழைத்துச் செல்வேன்,
அவளோ டுதன் பின் அறிமுகஞ் செய்வேன்.

வாஸ்து ஆம், அதுவே சரி ! நாமிப் போதே
போவோம் வாராய், புறப்படு ஜல்தி !

கலியன் பொறு ! பொறு ! சற்று வெறிகொள வேண்டாம் ;
கருவியும் காலமும் பொருந்திடிலன்றோ
கருதிய கருமம் கைவரும் எளிதாய் ?
இன்றுமாலை இருள்சேர் காலை
சென்றிடு வோமவள் சீரகந் தேடி.

வாஸ்து நன்று ! நன்று ! நாயகிதன்னைக்
கண்டிட லாமோ ? கண்டெடு மவள் சொல்
உண்டிடலாமோ ? உரைப்பாய் நேயா !

கலியன் இயலா தின்றவள் இல்லில் இருக்காள்.
அயல்மனை யொருத்தி அவளுக் கினியாள்
அவளொடு மங்கே தங்கி யிருப்பாள்.

அது போதவள் தன் அறையுட் சென்று,
இது அவள் இருக்கை ! இது அவள் படுக்கை !
எனக் குரித்தாவ தெப்போ தென்று,
மனப்பால் குடித்து மகிழ்வா யின்று.

வொஸ்து — போகலாமிப்போ ?

கலியன் — ஆகலே நேரம்.

வாஸ்து — தையலுக்கேற்ற கையுறை கொணராய்

கலியன் — பரிச்சயமாகு முன் பரிசின்மேல் நினேவோ?
(தனித்து) குறித்தது கொள்வேன். இனித் தடையில்லே ;
பொன்னெடு ரத்தினப் புதையல்க ளத்தனே
இருப்பது நினேப்புள தெண்ணுவ னென்றை ?

## மரகதம் வீடு.

(மரகதம் தலையை வாரி முடித்துக்கொண்டு)

மரகதம் — வழிமறித் தென்னுடன் மொழிபெற விரும்பிய
(தனிமையில்) எழில்மிகு புருடர் யாரா யிருக்கலாம் ?
ஊரும் பேரும் உரைப்பார் யாரோ ?
பெருங்குடிப் பிறப்பும் விருப்பு நற்குணமும்
ஒருங்கே தெரிக்கும் முகந்தனிற் பொலிவு ;
இன்னா ரிவ ரென்றெனக் குரைப்பார்க்குப்
பொன்னே வேண்டினும் பொருளெனப் பாரேன்.

(வெளியே போகிருள்)

— O —

கலியன் — சந்தடி யின்றி வந்திடு மெதுவாய்

வாஸ்து — சென்றிடு வெளியே ! தனித்திவண் சற்றுத்
தங்கிட நினேத்தேன். தாமதஞ் செய்யேல் !
ஒளியெனில் ஒளியும் அன்று ;
இருளெனில் இருளும் அன்று ;
பேரொளி சுடரிசை போ யொழித்திட்டது !
காரிருள் முற்றுங் கவிந்திடு முன்வரும்
மயில்கிருண் பாலேயின் மங்கிய ஒளியே !
நயந்தனன் உன்னே நலம் பலதருவாய்.

பொங்கும் மங்களம் எங்குந் தங்கிடும்
சாந்தமும் தனிமையும் ஈந்திடு மிவ்விடம்
நத்து நம்பிக்கையால் உற்றிடும் ஆசையாம்
நறலினை மாந்தி வெறிகொளு முளந்தனிற்
காதலே நீ செயும் நோயும் இனித்திடும் !
வறுமையில் நிரம்பிய பெருமையுங் கண்டேன்.
தனிமை தந்திடும் இனிமையுங் கண்டேன்
இக்குடில் என்றும் இருந்திடச் சலியேன்.

(கட்டிலைப் பார்த்து)

என்னையும் ஏற்பாய் ! உன்னனை தனிலே
முன்னம் பலபேர், முனிவிலுங் கனவிலும்
உன்னனை யிருந்து தம் உறுதுயர் மாற்றினர் ;
என்னையும் அதுபோல் ஏற்பாய் இன்று.
இறந்த காலத் தெத்தனை தலைமுறைச்
சிறுவரிவ் வாதனஞ் சுற்றி நின்றிருப்பார் !
குறுநடை பயின்று சிறுகை ஏந்தித்
தத்தத்தா வெனத் தாதையைப் பற்றிட
முத்தந்தா வென மொழிந்திடு மவற்கு
நல்காதோடி நகைமுகங் காட்டிச்
சிறு விளையாட்டுப் பல புரிந்திருப்பாள்
சிறுமியா யிருந்திடு போதென் காதலி.
பொங்கற் பண்டிகைப் போது தன் பாட்டனை
எங்கே யெனக்கினும் என்று கேட்டிருப்பாள்.
இவணிப் போது நீயில்லை யென்றாலும்
நலமுங் குணமும் திகழச் செய்ததே
உலவு மிவ்விட முன்னவி யென்றுணர்வேன்
அன்னைதன் சொற் கேட்டன்புடன் வீட்டுப்
பணியெலாம் மிக்கப் பணிவுடன் இயற்றுமின்
பணிவு கண்டெவரும் பரவசப் படுவார்.
நலமே புரியுமென் குலதேவதை நீ !
உறைதரு மிக்குடில் இமையவ ரிருப்பிடம் !
ஆ ! இவ்வுறையுட் போமுன் உடல்புள

காங்கித மூறுவதேன் ? அறிவேன் அதனை
அருகின் புல்நுனிப் பனியெனுஞ் சிறுதுளி
பெருகி நல் உருவாய்ப் பிறங்கச் செய்யும்
இயற்கைத் தேவி நின் எண்ணருஞ் சக்தி
விளங்கிடக் குழந்தை பிறந்ததிவ் விடமோ !
தொட்டிலில் குழவியாய்த் துயின்றதிவ் விடமோ !
துயிலும் போதாய் மயிலெனக் கவினெலாம்
தூய்மையின் இசைவித் தாய்கொலோ இவட்கு !
ஆம்நா னித்தினம் ஏனிங் குற்றேன்
எத்தைத் தேடி நான் இருக்கிறே னிங்கே ?
என்செய நினைந்தேன் ? ஏனிச் சோர்வு ?
துன்புறு மனத்தினேன், முன்போ லிலை நான்
மந்திர மோ எனை மயக்கிய திப்போ ?
இந்திர ஜாலமோ எதுவும் அறியேன்.
சற்றுமுன் காமப் பித்தொரு கணமும்
சகிக்கேன் என்றனள், சடுதியிற் பற்பல
காதற் கனவுகள் கண்டுமெய் மறந்தேன்
அலைகடற் றுரும்பென நிலையிலா தென்றும்
அலைந்திட லறிவுள ஆண்களுக் கழகோ ?
சுழற்காற் பஞ்சென உழலுமென் னெஞ்சு !
சிறுமியிப் போது திரும்பி வந் தென்னைக்
கண்ணுறில் எந்தன் கௌரவ மென்னும் ?
பலரும் பழித்திடும் நலமிலாக் காமத்
திழிவினை யெண்ணி யேங்குவ னன்றே ?
நாணம் விடுத்து நங்கை முன் நிற்கவோ ?
வெட்கி யவளடி வீழ்ந்திடல் தகுமே !

கலியன் உடனே வருவாய் மடமான் வருமுன் ;
வாவா, வெளியே வந்தனள் வாசலில் ;!

வாஸ்து போ ! போ !, இவ்விடம் பெயரேன் இனிமேல்

கலியன் கன்னிக் காமென் றெண்ணிச் சிலநகை
கொணர்ந்தனன் அவற்றைக் கொள்வா யிப்போ
பொன்னும் மணியும் நிறைந்தவிப் பேழையைக்

கட்டிலின் கீழ் வைத் திட்டுநீ வருவாய்
நிச்சய மிவற்றை நோக்கிடில் அவள்மிக
மகிழ்ந்திடு வாள்மதி மயங்கிடு வாள்மெய்.

(தனித் துரைத்தல்) பொருளிலாப் பொருள்சில போட்டுவைத் தேனதிற்
பொருளிலா மற்றொரு பொருள்தனைப் பெறவே.
அதுவும் குழந்தை! இதுவ்விளை யாடல்!

வாஸ்து அறியேன், நீ சொன் னதுபோற் செய்வேன்!

கலியன் இன்னமுங் கேட்கப் பின்னையுஞ் சொலவோ?
பொருள்தனை நீயே பெற்றிட நினைவா?
பொன்தான் விரும்பிய பொருளெனில் இனிமேல்
பெண்ணென் றென்னுடன் பேசா தே நீ.
காசெனில் இத்தனை ஆசை கொண் டவனெனக்
கனவிலும் உன்னைக் கருதில னிதுவரை
எனக்க தனைற்சலிப் பெள்ளள வும்மிலை.
இத்துடன் என்பொருப் பற்றதென் றறிவாய்.

(பேழையைக் கட்டிலின் கீழ் வைக்கிறான்)

பித்தனைப்போலேன் நிற்கிறாய் இன்னும்
ஓடிவா உடனே ஒரிரு நாளிற்
கூடிட லாம் நீ நாடிய படியே.

(மரகதம் விளக்குடன் வருகிறாள்)

உள்ளே இவ்வள வுப்புக யேனோ?

(ஜன்னலைத் திறக்கிறாள்)

வெளியி லிப்படி வேர்த்திட விலையே!
என்று மில்லா நடுக்கமும் மயக்கமும்
இன்றுண் டாவ தேனோ வறியேன்;
அன்னையு மேனோ இன்னும் வரவிலை;
என்போற் பேடி யிருக்கார் எங்கும்!
சும்மா நெஞ்சம் துடிதுடித் தாலதற்
கம்மா வையழைத் தழுகினேத் தேனோ!

(பாடுகிறாள்).

— 00 —

# காதற் கிண்ணி

(ஆனந்தக் களிப்பு)

1. முன்னங் கருவூரை யாண்ட — ஒரு
மன்ன னிருந்தா னவன்மையல் கொண்ட

2 பெண்ணைப் பெரிதும் நேசித்தான் — இந்த
மண்ணை விட்டுப் போகும் மட்டும் பூசித்தான்.

3. காதலி தன்னை யென்னாளும் — மற
வாதிருக்கும்படி மரிக்கும் முன் அவளும்

4. பொன்னாற் செய்திட்டவோர் கிண்ணி — தனை
மன்னற் களித்து மரித்தனள் கன்னி

5. காதலி தந்த பொற்கிண்ணி — தனக்
காதரவாகு மதுவே யென்றெண்ணி

6. கண்ணின் மணியெனக் காத்தான் — அரைக்
கணமேனும் பிரிந்திட மனமொவ்வ மாட்டான்

7. எப்போதும் பொற்கிண்ணி தன்னில் — அன்றி
உட்கொள்ளான் ஒரு துளி மதுவாதல் உண்டி

8. இப்படி நாட் பலசெல்ல — முடி
வெய்துங் கடைநாளும் வந்தது மெல்ல

9 அந்த நாள் மைந்தரைக் கூவித் — தன
தாஸ்தி முழுவதையும் அவரிடம் கூறி

10. நாடு நகரங்கள் யாவும் — நான்
தேடி வைத்திட்ட பொன் ஆடுமாடு மாவும்

11 எல்லாம் உமக்களித்திட்டேன் — இதில்
ஏதும் எனக்கென வைத்திட வொட்டேன்

12. ஒன்றும் ஒளித்திலேனின்று — உயிர்
போன்றும் வரை யிந்தப் பொற்கிண்ணியொன்றே

13 எந்தன் தனிப்பொருள் கொள்வேன் — இதை
யார்க்கும் கொடுத்திடேன் எனச்சொல்லி மன்னன்

14. கடற்கரைக் கோட்டைக்குச் சென்றான் — அங்கே
நடக்கட்டும் பலமான விருந்திப்போ தென்றான்

15 உற்றார் உறவினர் நண்பர் — மன்னன்
ஊழியக்காரரும் உடனிருந் துண்டார்

16. வேண்டினர் வேண்டிய துண்டார் — மனம்
வெறிகொளக் கலிதீர மதுவையுட் கொண்டார்

17. ஓயாது மன்னனும் கிண்ணி — தனில்
ஊற்றியூற்றிக் குடித்தான் பெண்ணையெண்ணி

18. விருந்தின் முடிவிற் பொற்கிண்ணி — யதை
வீசிக் கடலில் எறிந்திட்ட பின்னே

19. இருந்த விடத்திற் கண்மூடி — மன்னன்
இன்புற்றிருந்தானே அவளன்பை நாடி !

(மரகதம் ஆடைகளை வைப்பதற்காகப் பெட்டியைத் திறக்கிறாள் ! அதனுள் சிறுபேழை யிருப்பதைப் பார்க்கிறாள்)

மரகதம் எப்படி வந்ததிப் பெட்டியுட் பேழை ?
நிச்சயம் பெட்டியைப் பூட்டி யிருந்தேன் !
என்னே அதிசயம் ! என்னிருக் கும்மிதில் ?
ஓ, ஓ ! அறிவேன், அன்னைபால் எவரோ
கடன்பெற விதனை யடகு வைத் திருக்கலாம்.
இங்கே தொங்கிடும் இந்தச் சாவி
பேழையின் பூட்டுக் கேற்றது போலும் !
திறந்தா லென்ன ? திறந்தது பூட்டும்
ஆ ! ஆ !! என்ன ! ஆச்சரி யம் ! இது
மின்னொளி காலும் விகசித ரத்தினப்
பொன்னணி யிவைபோல் மன்னரும் பார்த்திலர் !
என்னைப் போன்ற ஏழைகள் இவற்றைக்
கனவிலும் எண்ணிக் காணொணா தென்றும்.
ஒளிவிடு மிந்த மணியிடை பவளத்
தாழ்வட மொன்றே தருந்தனி யழகு !

சத்திய தவருப் பத்தினிப் பெண்களும்
புத்திடைய யிழப்பரிங் நித்திலக் கோவைமேல் !;
எழில்மிகு மிச்சடை நாகம் என்தலைக்
கணிந்திடில் எவ்வள வழகாயிருக்கும்.

(ஆபரணங்களை அணிந்து கண்ணாடி முன் நின்று பார்க்கிருள்)

கதிர்ஒளி காலும் வயிர மிழைத்தவிக்
காதணி யொன்றே போதும் கவின்தர ;
அழகினை யொருவர்க் களிப்பதும் எதுவோ ?
இளமை யளித்திடும் எழில்எனில் எவரே
எளிதில் அதனை எய்திடார் ? அன்றியும்
வறியவர் பெற்றிடு வனப்பும் இளமையும்
அடிமைநாட் டுதித்த கவிஞரைப் போல
மதிப்பா ரற்று மறைந்தொழிந் திடுமே !
ஏழையின் வனப்பிற் கிரக்கப் படுவார்
போலப் பேசுவர் ; புகழ்ந்திடா ரென்றும்.
கன்னங் கரிய மேனியும் கவினுறும்
பொன்னும் மணியும் பூண்டிடில் மிகுத்து ;
நவ்வும் கையும் கவ்விடி னன்றே
“ நங்கை ” யென்றிடும் நற்பதம் பெறலாம்.
“ நகை ”யிலா நங்கையின் நலஞ்சிறந் திடுமோ !
மண், பெண், பொன்னென மயக்குமுப் பொருளினும்
பொன்போல் கொடிதிலை ! பொன்னுண் டாயின்
மண்ணும், பெண்ணும் நண்ணிடும் நாய்போல் ;
எல்லாம் பொன்வயம், இவ்வுல கத்தில்
பொன்னிலா வேழைகள் என்னுளார் ஆவர் !
அந்தோ ! அவர்பா டார்படு வார்கள்!

## (ஊரையடுத்த திட்டு)

(வாஸ்து ஆழ்ந்த சிந்தனையுடன் உலாவுகிருன்
கலியன் அங்கு வருகிருன்)

**கலியன்** எரிமூண் டிடுக ! இடிவீழ்ந் திடுக !
மீளா நரகிற் காளா யழிந்திவ்
வையக மனைத்தும் உய்யா தொழிக !

வாஸ்து வா வா கலியா ! வந்ததென் னுனக்கு ?
ஓவாப் பிணிவந் துற்றதோ ? உந்தன்
மங்கிய முகம்போல் எங்குமே கண்டிலேன் !

கலியன் கலிதனக் கேயெனை யடகுவைத் திடுவேன்
கலியனும் நானே யாகா விட்டால் ;

வாஸ்து பித்தனைப் போலேன் பிதற்றிடு கின்றாய் ?

கலியன் மரகதத் திற்கென வைத்து நாம் வந்த
நகைக ளனைத்தையும் அடைந்ததார் அறிவாய் ?
பொல்லாக் குருக்கள் ஒருவன் அந்தோ !
எல்லா வற்றையும் எடுத்துமே சென்றான் !
அன்னைவந் தவற்றைப் பார்த்தாள், பார்த்ததும்
என்னவோ பயங்கொண் டிட்டாள், இவற்றால்,
நன்மையோர் சிறிதும் நண்ணிடா தென்றாள் ;
அல்லன நல்லன அறிந்திடு வாள்போல்
ஒவ்வொரு நகையையும் தனித்தனி யெடுத்து
மூகர்ந்து பார்த்து முடிவில் இவற்றால்
நலமிலையென்றே மனந்துணிந் திட்டாள்.
நல்வழி யன்றிச் செய்பொருள் ஒன்றும்
நல்கா தின்ப மென்றுமே குழந்தாய் !
செம்மையி னிகந்து சேர்பொரு ளே யவர்க்
கிம்மையும் மறுமையும் பகையாம் அறிவாய் !
இகபர மிரண்டினும் உயிர்க்குறு பகையாய்த்
தொடர்ந்து துன்பம் விளைக்கு மப்பொருள்
ஆகலின் இதனை அப்பிகை தனக்கு நி—
வேதனப் பொருளாய் ஓதிவைத் திடுவோம்.
அன்னையும் நம்மீ தன்புகொண் டிடுவாள்.
என்று தன் மகனுக் கிதம் பல கூறினள்.

வாஸ்து கன்றிய மனத்துக் கள்ளி யென் நினைத்தாள் ?

கலியன் தானமாய்த் தானே வந்ததித் தனந்தான் ;
யானிதைக் கோரி யாரையும் கேட்டிலேன்.
நந்தமைத் தேடி வந்த இத் திருவினைத்

தத்துவம் பேசித் தள்ளுவ தோமதி ?
இத்தகை யரும்பொருள் எந்தனுக் களித்தவர்
நிச்சயம் பத்தியின் உச்சிகண் டிருப்பார் !
இவ்விதம் மரகதம் என்னதான் சொல்லியும்
ஒவ்வாள் தாய்மனம் உடன்பட வில்லை.
அப்பா லன்னையின் சொற்படி குருக்களும்
வந்தான், நகைகளின் வகைகளைக் கண்டான்.
சொந்தமாய் அவற்றைக் கொண்டிட நினைந்து
அம்மையார் கொண்டுள அபிப்பி ராயமே
செம்மைசேர் நெறியாய், புன்மைதீர் வழியாம்.
நிலையிலாப் பொருள்தனை நிலையென மருண்டு
அலைதரும் மனத்தெழும் ஆசையை விலக்கினோர்
ஆண்டவன் அருள்தனை அடைவது நிச்சயம்.
மாசுறு பொருளெலாம் ஈசற் கேதகும் ;
தீவினை யால்வரும் திரவியந் தன்னைச்
சீரணித் திடுவதற் காருளர் சிவனலால் !
ஓதினன் இப்படித் தோதகக் குருக்களும்.

வாஸ்து அரசனும் ஆண்டியும் உரைப்ப ரிப்படியே ;
பிறரும் அதனைப் பின்பற் றிடுவார்

கலியன் குப்பை கூளங்களை அப்புறப் படுத்தல்போல்
ஒப்பிலா மணிகளை உயர்ந்தபொன் னணிகளை,
அழகிளங் கன்னிதன் மனங்கவர் நகைகளைப்
பைதனில் நிறப்பிக் கைதவன் சென்றான் ;
ஊதியமேதும் உற்றிடான் போலக்
கூறிடான் நன்றி ! நாரியர் தமக்கு
நண்ணிடும் நன்மைகள் எண்ணில மறுமையில் !
என்றவன் சென்றனன் ; நன்றென அன்னையும்
தோதகக் குருவின் போதகத் தால்மிக
ஆதரம் பெற்று அமைதியுற் றிருந்தனள்.

வாஸ்து மரகதம் மனத்துள் நினைந்ததென் அறிவாய் ?

கலியன் உட்மையை யேநினைந் துடைந்திடு வாள்மனம்
ஒன்றுந் தோன்று துணர்வற் றிருக்கிறாள்.

நகைகளுக் கேங்கி நலிகிருள் ஆயினும்
அவற்றை அவளுக் கன்புடன் அளித்த
அவனை நினைந்தவள் அடைதுயர் பெரிது !

வாஸ்து
என்னருங் காதலி இன்னலுற் றிருப்பதை
எண்ணிடில் எனக்கும் நண்ணிடும் துன்பம் ;
முன்னிலுஞ் சிறந்த பொன்னணி யிப்போ
கன்னிகைக் களிக்க கொண்டு வந்திடுவாய்.

கலியன்
என்னவோ எல்லாம் எளிதாய் நினைக்கிருய் !

வாஸ்து
சொன்னவா றுடனே செய்வாய், அன்றியும்
அயலகத் தாளையும் அறிமுகம் செய்துகொள்
மந்த மதியனே மறவேல் நகைகளை !

கலியன்
சிந்தையிற் கொண்டேன் எந்தன் துரையே.

(வாஸ்து வெளியே போகிருன்)

பெண் வெறி கொண்ட இப் பேதை யென்
செய்திடான் ?
விண்ணின் மதியையும் வெங்கதி ரோனையும்
தாரகை யனைத்தையும் பூரகத் திழுத்துக்
காதலிக் கவற்றைக் காட்டிடக் ககனப்
பாதையில் ரேசகத் தூதுவான் போலும் !

(கலியன் போதல்)

## அயலாள் வீடு.

(மாலதி தனிமையில்)

மாலதி
கடமையிற் றவறிக் கைவிடுத் தென்னைத்
தனிமையில் விட்டுச் சென்று னெனினும்
கடவுளே ! யெந்தன் கணவனைக் காத்திடு !
கூறு மற் சந் யாசம் கொண்டிட
ஏது மாருக நடந்திட வில்லையே !
ஈச னறிவான் நேசமுற் றிருந்ததை !
எங்குற் றனனே ? இருப்பனே ? அன்றி

(அழுகிருள்)

இறந்தொழிந் தனனே ? எப்படித் தெரிவது ?

(மரகதம் வருகிருள்)

மரகதம் மாலதி யம்மா ?

மாலதி மரகதம் ! வா ! வா !!
என்ன விசேடம் எனக்குரை த்திடு நீ ?

மரகதம் அன்றுவைத் திருந்த அதே இடத்தில்
இன்றுமோர் பேழை இருந்திடக் கண்டேன்.
கண்டது முதலாய்க் கொண்டுளேன் நடுக்கம்.
இதன்கருத் தொன்றும் எனக்குத் தெரியலே.
பேழையும் முன்னதிற் பெரிதும் சிறந்தது.
நகைகளோ ! இவைபோல் நானிலத் தில்லே !

மாலதி சொல்லா தேயுன் அன்னைக் கிதுவும்
பொல்லாக் குருக்கள் பொக்கணத் திற்புகும் !

மரகதம் பார் ! பார் ! மாலதி ! பளிச்சென் றொளிவிடும்.

மாலதி பார்த்தேன் ! நீ வெகு பாக்கிய சாலி !

(ஆபரணங்களை அணிவிக்கிருள்)

மரகதம் ஆயினும் இவற்றை அணிந்து வெளியிற்
போயிட முடியுமோ ! பொருளைப் பெற்றபின்
பலரும் அதனைப் பார்த்து மகிழ்ந்திட
அனுபவிக் காவிடில் அதனுற் பயனென் ?
அடிக்கடி வந்திவ் வறையில் தனியே
நகைகளை யணிந்துகண் ணுடிமுன் நடந்து
அழகுபார்த் திடுவோம் அப்பால் மெதுவாய்
அட்டிகை வளையல் முத்துச் சரங்கள்
ஒட்டியா ணம்இவை ஒவ்வொன் ருகச்
சமயம் பார்த்துத் தரித்திடலாம் உன்
தாயார் பார்த்திவை யேதுனக் கென்ருல்
மாயம் உரைத்து மறைப்போம் மகளே.

மரகதம் அணிகளை இவ்வர் றளித்தவர் யாரோ ?
ஏதோ சூதிதில் இருக்கலா மென்றே
ஐயுறு மென்மனத் தச்சமும் கொண்டேன்.

(வெளிக் கதவை யாரோ தட்டுகிருர்கள்)

ஐயோ ! இதுவென் ? அன்னைவந் தனளோ ?

(கதவுச் சந்தில் பார்த்துக்கொண்டு)

மாலதி — அறிமுக மில்லாப் புதியவர் ஒருவர்

(கதவைத் திறந்து)

வருக ஐயா ! வாரும் உள்ளே.

(கலியன் உள்ளே வருகிருன்)

கலியன் — மன்னிப் பீர்சீ மாட்டி களே நீர்
அன்னிய ஞமெனை. அஞ்சலி செய்கிறேன்.

(ஆபரணங்களுடன் நின்ற மரகதத்திற்கு மரியாதை செய்துவிட்டு)

மங்கை நல்லாள் மாலதி யாளைத்
தேடி நான் வந்தேன் சேதியொன் றுண்டு.

மாலதி — மாலதி நானே ; கூறுவீர் சேதி.

கலியன் — அறிந்தேன் உன்னை ஆதலின் இப்போ(து)

(மாலதியிடம் தனியாக) — அகல்வேன், அரசியோ டளவளா விடுநீ
மாலையில் மீண்டும் வந்துனைக் காண்பேன்.

மாலதி (உரக்க) — அம்மா குழந்தாய் ! அரசியென் றிவருனை
அனுமா னித்திடல் அதிசய மன்ருே ?

மரகதம் — அடியேன் ஏழைக் குடியானப் பெண் ;
அவர்தம் அன்பு அளவிடற் கரிதே ;
பகட்டும் நகைகள் அனைத்தும் இரவல் !

கலியன் — அணிகளால் மட்டும் ஆனதன் றவள் எழில்
தோற்றமும் நோக்கும் சாற்றிடும் பெருமை ;
உடனிருந் துரைதர அனுமதி யுண்டென்(று)
அளவிலா மகிழ்ச்சி யடைந்தன னறிந்தே.

மாலதி — செய்தியைச் சொல்லும் சீக்கிரம் ஐயா !

கலியன் — அந்தோ, அவதியை அறைகுவன் மாதே
இறந்தன் கணவன் எனக்குரை செய்தான்.

மாலதி — இறந்தார் கணவன் என்று சொன்னீர் ?
ஐயோ ! அன்பே, அடியேன் வாழேன்.

மரகதம் — மாலதி யம்மா மனங்கலங் காதீர் !

கலியன் — கேட்பீர் துன்பக் கேட்டை முழுதும்.

மரகதம் — காதல் போயிற் சாதல் நேரும்
ஆதலின் எவரையும் காதலிக் காதுளேன்.
தலைவரைப் பிரிந்துயிர் தரியேன் ஒருகணம்.

கலியன் — இன்பமும் துன்பமும் இரவும் பகலென
ஒன்றை யொன்று தொடர்ந்தே வந்திடும்.

மாலதி — மேலும் முடிவைக் கூறுய் விரைவில்.

கலியன் — பாண்டிய நாட்டுப் பழம்பதி மதுரையில்
வைகைக் கரையில் வைகும் அவனுடல் ;
ஈமச் சடங்குகள் யாவும் முடித்தனர்,
சேமமாய்ச் சடலம் சேர்த்தனர் மண்ணில் ;

மாலதி — வேறு விவரம் ஏதும் இலையோ ?
அன்பின் அறிகுறி யாக அளித்தது
பொன்னே பொருளோ ஒன்றும் இலையோ ?
ஊர்தொறும் பிச்சைக் குழன்று திரியும்
பேர்வழி யுந்தன் பெண்டு பிள்ளைகளுக்
காமென் றெண்ணி அரும்பசி காத்துச்
சேமித் திடுவான் சிறிதே யாயினும்.

கலியன் — மாதே ! மெய்சொல வாயும் கூசும்,
தீதே புரிந்தவம் திரிந்திட் டதையும்
போனநாட் செய்த புன்மை யனைத்தும்
ஈன வாழ்க்கையும் எண்ணி யெண்ணி
உண்மையில் வருத்தம் உற்று னாயினும்
பொருளை வறிதே செலவுசெய் தானலன்.

மரகதம் — அந்தோ மாந்தர் அவதிப் படவிதி
வந்ததற் காக வருந்துவர் பலரும்.
இறந்த அவர்தன் இன்னுயிர் சாந்தி
பெறவரு ளும்படி போற்றுவன் இறையை.

கலியன் இத்தகை யன்புள உத்தமி நீயுனக்
கிசைந்த கணவனை இன்றே பெறல்தகும்.

மரகதம் அத்திரு நாளெனக் காகலே யினியும்.

கலியன் ஆகமப் படிமணம் ஆகா தெனினும்
ஆசை நாயகனை அடையலா மன்றோ ?
ஆதரம் பெருகிய காதலி யுன்னை
அணைந்திடு மின்பம் அதனினு மினிதென
நினையே னிந்திர நாட்டுள போகமும்.

மரகதம் இவ்வித வழக்கம் இந்நாட் டிலேயே.

கலியன் வழக்கமோ அலவோ நடப்ப தப்படியே.

மாலதி அதுபோ கட்டும் சேதியை விளம்பும்.

கலியன் மரணப் படுக்கையின் அருகில் இருந்தேன்,
உயிர்விடும் போதவன் உரைத்த திதுவே :
செய்தொழில் விட்டுச் சீரிய மனைவியைக்
கைவிட் டகன்ற கைதவன் நானே.
கொடுமையின் நினைவே கூற்றெனக் காகும்.
மரிக்குமுன் எனையவள் மன்னித் தாளெனும்
உரையது கேட்க விழையுமென் மனது.

மாலதி (அழுது கொண்டு) மன்னித் தேன் மறுநாளே அவரை

கலியன் ஆயினும், தப்பிதம் அவள்மேல் என்பதை
அறிவார் கடவுள் !

மாலதி அதுசுத் தப்பொய்
சாகும்போதும் சத்தியம் பேசான்.

கலியன் பாவியின் முகத்தைப் பார்த்திடும் போதவன்
கூறுவ தனைத்தும் மாறென நினைத்தேன்.
மேலும் சொன்னான் காலும் கையும்
ஓயும் வரையில் ஓடி ஓடிநான்
உழைத்தேன் அவட்காய் ஒருபய னின்றி.
உண்ணவும் ஒட்டா தோட்டினள் என்னை.

மாலதி — என்ன துணிச்சல் இப்படிப் பேச
அன்பை மறந்தான். அல்லும் பகலும்
அலைச்சற் பட்டேன். அதையும் மறந்தான்.

கலியன் — இல்லை உன்னிடம் இரக்கமே கொண்டான்.
கொல்லத் திருந்து சிங்களம் போகும்
கப்பலிற் சென்ற காலத் தெல்லாம்
மனைவியும் மக்களும் வாழ்ந்திட வேண்டித்
தினமும் இறைவனைத் தியானித் திருந்தோம்.
வழியில் சீனக் கப்பல் ஒன்றெதிர்
வரலும் அதனை வழிமறித் துள்ள
பொருள்களைப் பறித்துப் பிரித்துக் கொண்டோம்.
எனக்குள பங்கை எடுத்துக் கொணர்ந்தேன்.

மாலதி — பங்குப் பொருள்களை எங்குவைத் திட்டான் ?

கலியன் — காற்றிசை வீசும் காற்றுடன் போனது
யார்க்கது தெரியும் ? யானறி யேனதை !
கொற்கைத் துறையில் இறங்கி யங்கவர்
சுற்றித் திரிந்தான் சிலநாள் அங்கே ;
அறிமுக மின்றி அலைதரு மிவனை
அரிவை யொருத்தி, அழகுள் ளவள்தான்,
காதலித் திடலும் கதியவள் என்றே
சாகும் வரையில் தங்கினன் அவளிடம்.

மாலதி — யோக்கியங் கெட்ட போக்கிலி ! சொந்தப்
பெண்டு பிள்ளைகள் பிழைத்திட எண்ணான் ;
வேசியின் வீட்டில் காசைத் தொலைத்தான்.

கலியன் — துள்ளித் திரிந்துபின் சுமந்தான், பொதியும்
இன்னலுற் றிறுதியில் இறந்தொழிந் தான், இனி
உள்ளதை உன்னி உரைப்பேன் ஒருரை ;
ஊர்வழக் கப்படி ஓராண் டளவும்
கைம்மை காத்திடக் கருதிடு, ஆயினும்
மெய்ம்மையில் இதுமுதல் வேறொரு புருடனைத்
தேடிப் பெற்றிடச் சிந்தையிற் கொண்டிடு.

| | |
|---|---|
| மாலதி | ஆயினும் அவன்போல் ஆண்மகன் எனக்கினி<br>வாய்த்திட மாட்டான். வஞ்சகமின்றியென்<br>காலடி பற்றிக் காத்துக் கிடப்பான்.<br>கள்ளினும் சூதினும் கருத்தழிந் திடுவான்<br>அன்னிய மாதெனில் என்னினும் ஆசை<br>அதிகரித் தலைவான் ; அதுஅவன் இயல்பு. |
| கலியன் | கட்டுப் பாடெலாம் கடந்து நடந்திடச்<br>சுதந்தரம் உனக்கும் சொந்தமுண் டென்பதை<br>அறிந்திருந் தாயெனில் அழகா யிருக்கும்.<br>நிபந்தனை யிவற்றை நீயேற் பாயெனில்<br>சுபசோ பனத்தைச் சீக்கிரம் முடிப்போம். |
| மாலதி | கேளிக் கைக்குநல் லாளடி, கணவான் ! |
| கலியன்<br>(தனக்குள்) | சனுதியில் போகணும் ! தாமதித் தாலிவள்<br>கனியவைத் திடுவாள் கலியையும் மணந்திட. |
| (மரகதத்தைப்<br>பார்த்து) | உன்மனக் காதல் எந்நிலையில் உளது ? |
| மரகதம் | என்சொனீர் ஐயா ? ஏற்கா திவ்வுரை ! |
| கலியன்<br>(தனக்குள்) | சூதறி யாத பேதைக் கன்னி ;<br>ஆயிழை யீரே போய்வரு வேன் நான். |
| மரகதம் | செய்வீர் அப்படி ! |
| மாலதி | ஏனிவ் வவசரம்<br>முறைப்படி முற்றும் முடித்திடக் கருதினேன்.<br>விதவை என்றென்னை விளம்பரப் படுத்தப்<br>போதுமோ உம்முரை கூறுவீர் ஐயா ! |
| கலியன் | இன்ன இடத்தில் இவ்வா றிறந்தான்<br>உன்றன் கணவனென் றுறுதியா யிருவர்<br>சாட்சியங் கூறில் பேச்சிலை யதன்மேல்.<br>திருமிகு நண்பர் எனக்குளர் ஒருவர்<br>அருகில் வசிக்கிறார், அழைத்து வருவேன்.<br>நீதிபதிமுன் நிச்சயம் சாட்சியம்<br>கூறிடக் கூசார் மாதுனக் காக, |

மாலதி — அவரை இவ்விடம் விரைவில் அழைப்பீர்

கலியன் — இவ்விள மாதும் இருப்பா ளன்றோ ?
நண்பர் மிகவும் நல்லவர் அன்றியும்
பெண்களின் பெருமையைப் பெரிதும் அறிந்தவர்.

மரகதம் — நல்லார் எனினும் ; நில்லேன் அவர்முன்.
நாணும் என்னுளம், நான்மிகச் சிறியவள்.

கலியன் — முடிதரி மன்னவர் ஆயினும் அவர்முன்
அதிபெற நிற்கும் தகுதிஉள் ளவள் நீ !

மாலதி — மாலையில் இருவரும் வந்திதற் கருகுள
சோலையில் எங்களைச் சந்தித் திடுவீர்.

## ஒரு வீதியில்

(வாஸ்துவும் கலியனும் சந்தித்துப் பேசுகின்றனர்)

வாஸ்து — காரியம் எப்படி ? கை வரல் எப்போ ?
சங்கதி என்ன ? சுலுதியில் முடியுமா ?

கலியன் — மங்கையின் நினைவே ! மற்றெதுங் கொள்ளாய் !
மாலையில் நாம் போய் மாலதி வீட்டுச்
சோலையில் அவளை சந்தித் திடலாம் ;
சரசமாய்ப் பேசிச் சரிப்படுத் துவதுன்
சாமார்த் தியமே ! சமயமும் இதுவே,
கூட்டி வைத்திடக் கூறிடாள் மாலதி !

வாஸ்து — நல்லது நண்பா !

கலியன் — நம்பா லவளொரு
வரம் பெற வேண்டுவள் ; மறுத்திட லாமோ ?

வாஸ்து — கைம்மா றின்றியெக் காரிய முமிலை !

கலியன் — மாலதி கணவன் மதுரையில் மரித்ததைச்
சாலவும் அறிவோம், சத்தியம் என்றுரை
சாற்றிடல் நமக்குச் சாத்தியம் தானே !

வாஸ்து — யாவையு மறிந்திடும் ஞானியன் றோ நீ !
போவோம் மதுரை, புறப்படு, நான் தயார் ;

கலியன் சூதறி யாப்பரி சுத்தாத் மாவே !
யாது மறியோ மாயினும் இருவர்
உறுதியாய்க் கூறுவ தொன்றே போதும்.
வாஸ்து இவ்வழி யின்றிவே றெதுவும் இலையெனில்
ஒவ்வேன் பொய்சொல, உடன்படேன் உண்மை.
கலியன் ஓய் ! பெரி யோரே ! உண்மை கண்டவரே !
பொய்யுரை இதுவரை புகன்றதே இலையோ ?
நெஞ்சைத் தொட்டு நினைத்துச் சொல்லும் !
அஞ்ஞாதத்தக் கடவுளைப் பற்றியும் ,
உலகைப் பற்றியும், உலகில் உளவாம்
பலபொருள் பற்றியும், பற்றுக் குறைக்குயர்
வானத் தொளிரும் மதிமுதற் கதிரவன்
ஆன உடுக்கணம் அனைவகளைப் பற்றியும்;
மனிதன் உடலுயிர் மர்மம் பற்றியும்
மேற் சோன் காட்டி மெய்யிது வென்று,
விளக்கிச் சொன்ன வெற்றுரை யெல்லாம்
உண்மையென் றெவரே உறுதியாய்க் கொள்வார் ?
ஆழ்ந்திவை பற்றி நாம் ஆராய்வோ மெனில்
சூழ்ந்திடு மிருளிற் றெளிவிலை ! இந்த
மாலதி கணவன் மரித்திடு விஷயம்
போல இதிலும் பொய் புகுந் துளதறி !
வாஸ்து பொய்யன் றிச்சொற் புரட்டியு மானுய்!
கலியன் ஆழ்ந்து கருதலர்க் கவ்விதம் ஆமே !
காதலர் பொய்யுரை கணக்கி லடங்கா !
நாளையுன் மரகதம் காது குளிர்தரக்
காதலர் மொழியில் கன்னியை மயக்க நீ
ஓதிடு சொற்களில் உண்மையெவ்வளவோ !
வாஸ்து உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசேன்.
கலியன் நல்லதுன் காதலி நம்பும் வகையில்
என்றும் மாறாக் காதல் இயம்பிப்
பொன்றும் வரையில் போற்றுவ னென்று
சத்திய மாகச் சாற்றிடும் சொற்கள்
உள்ளும் புறமும் ஒத்திருப் பவையோ ?

வாஸ்து — பொறு! பொறு! மனத்துட் பொங்கிய உணர்ச்சி
எங்கும் நிறைந்து இதயத் தெழுந்து
சிந்தையை அடக்கிச் செலுத்திடும் போழ்தில்
அந்த உணர்ச்சியை அறைந்திடத் தக்கது
எந்த மொழியென் றெங்கணுந் தேடி
உலகத் துயர்ந்த உத்தம மொழிகளில்
காதல் காதல் — காதல் இன்றேல்
சாதல் உறுதி — என்பேன் இதனில்
சொற்புரட் டில்லை — சூதும் இல்லை!

கலியன் — என்ன நீ சொலினும் என் சொலிற் றவறிலை.

வாஸ்து — குறிப்பாய் இவ்வுரை கொள்வாய் நண்பா!
நேர்வழி யேசெலத் தீர்மா னித்தவன்
ஆர்வமோ டதனை அறைந்திடு வன்மையால்
இறுதியில் நிச்சயம் உறுதிபெற் றிடுவான்.
வார்த்தையை வளர்த்தேன்! வா வா இம்முறை
நீயே கெலித்ததாய் நினைத்துக் கொளலாம்!

## தோட்டம்

மரகதமும் வாஸ்துவும் கை கோர்த்துலாவுகின்றனர்.
மாலதியும் கலியனும்
மற்றொரு பக்கம் உலாவுகின்றனர்.

மரகதம் — உயர்குடிப் பிறப்பும் துயர்தீர் கல்வியும்
பெற்றிடாப் பேதையைப் பெரிதுவந் தேற்கும்
நற்குண முங்கள் நல்லியல் பென்பதை
நான்நனி யறிவேன். என் உப சாரம்?
பொருளிலா என்றன் புன்மொழி தானும்
தருமோ உங்கள் செவியினுக் கின்பம்?

வாஸ்து — அன்பு கூர் உன் சொல் அமிழ்தினும் மேலெனக்(கு)
உன் விழி நோக்குயர் ஞானத் ததிகம்!

(கையை முத்தமிடுகிறான்)

காடுமுர டானவிக் கைக்கோ முத்தம்;
கணக்கிலா வேலையாற் காய்த்ததென் கைகள்.

ஓய்விலாதென்னை உழைக்கச் செய்வதில்
தாய் வெகு சமர்த்தி, தயவிலாள் சற்றும் ;
நீர்என் கைகளை நீவிடத் தகுமோ !

(இருவரும் போகின்றனர்)

மாலதி — ஓயா துழல்வதோ உங்கள் தலைவிதி ?

கலியன் — தொழிலும் கடமையும் துரத்தி யடிக்கும் !
பற்பல இடங்களை விட்டுப் பிரிவதில்
எத்தனை சங்கடம் ! ஏக்கம் ! எனினும்
மற்றொரு நாள் தா பதித்திடில் துன்பமே.

மாலதி — வாலிப முறுக்கில் வரயிலா வாழ்க்கையாற்
பாதக மில்லை யெனின், பாடி யாடிப்
பருவங் கடந்து கிழவனும் போதில்
அருகில் ஒருத்தி அன்புட னிருந்து
பணிசெய யாரே கனிவிழை யாதார் ?

கலியன் — உண்மை நீ சொல்ல லுறுத்து மென் நெஞ்சில்.

மாலதி — ஆயின் என்னுரை அகத்திற் கொள்வீர் !

(போகின்றனர்)

மரகதம் — இயல்பாய் உமக்குள இனியநற் குணத்தால்
புதிய நண்பர்கள் போன விடங்களில்
எளிதில் உங்களுக் கேற்படும் எண்ணிலர்.
சிறந்த முறையிற் பழகுவர் நீங்களும்
மறந்திடு வீர் என் மறை முக நினைவை
கண்மறை வாயின் மனமும் மறந்திடும் !

வாஸ்து — ஆருயி ரே ! எனை யவ்விதம் நினையேல்
அறிவெனப் படுவ தநேகமாய் ஒருவரின்
அகங்கா ரத்துறும் அந்தகா ரம்தான் !

மரகதம் — எவ்விதம் ? அறியேன்.

வாஸ்து — எளிமையும் புனிதமும்
சேர்ந்திடும் உங்கள் சிறப்பும் பெருமையுந்
தெரிவதெந் நாளோ ? விரி நிலத் தியற்கை
விரும்பி யளித்திடும் விழுமிய பொருள்களில்,
பணிவும் சாந்தமும் கனி சிறந் தனவே !

உள்ளும் புறமும் ஒத்தொரு பனையமாய் :

மரகதம் ஒரு கண மாதல் எனை நினைந்தி டுமின் !
இரவும் பகலும் எண்ணுவேன் உம்மை.

வாஸ்து வனிதை நீ மிகுதியும் தனித்திருப் பாய் கொல் ?

மரகதம் எங்கள் குடும்பம் சிறிய தாயினும்
அங்குள வேலைகள் அனைத்தும் ஆவது
அடியவ ளால் தான் ! பணியாள் இல்லை ?
கூட்டிப் பெருக்கிக் குப்பை யகற்றல்
வீட்டைப் பெருக்கி விளக்கமாய் வைத்தல்,
சமைத்துப் போட்டுத் தக்கன செய்தல்,
தோய்த்துக் குளித்துச் சுத்தம் பேணல் ;
ஆய்க்கோ எதிலும் அதிகச் சுத்தம் ;
ஓய்விலை எனக்கு ஒவ்வொரு நாளும்.
காலையி லிருந்து மாலை வரைக்கும்
வேலை யிருக்கும், எனினும் நாங்கள்
ஏழைக ளல்லர், எங்கள் தந்தையார்
இறக்கும் போதிவ் வீடும் தோட்டமும்
வேண்டும் பொருளும் விட்டுச் சென்றனர்.
முன்போ லிப்போ வேலைக ளில்லை !
இப்பொழு தெனக்கு வேலை குறைவே ?
அண்ணன் சேனையில் அமர்ந்திருக் கின்றான்.
தங்கை யொருத்தி தனியிளங் குழவியை
இழந்தனள் ; அண்மையி லிருக்கும் போதக்
குழந்தையை வளர்ப்பதில் உறுஞ்சில தொல்லை.
தொல்லை யனைத்தையும் தொல்லையென் றெண்ணேன் !
எல்லையில் பிரேமை, எனக்குண் டதன்மேல்
இன்னமும் செய்வேன். இனியதக் குழந்தை !

வாஸ்து ஜகன்மா தாவின் தயையுள துன்னிடம்
உன்போ லன்புளர் உலகத் தாருளர் ?

மரகதம் தந்தை இறந்ததன் பின்பது பிறந்தது,
பிறந்ததும் அன்னை பெரு நோய் கொண்டு
படுக்கையிற் கிடந்தாள் பல நாள் வரைக்கும் ;
புட்டிப் பால் கொடு போற்றிச் சிசுவைத்

தாயென வளர்த்தேன், சேயும் எனையே
தாயெனக் கொண்டு நேயமிக் கிருந்தது.
தோளிலும் மார்பிலும் தூக்கிச் சுமந்து
மடியில் இருத்தி மகிழ்ந்தேன் பல நாள்.

வாஸ்து — தாயதுன் அன்பே ! தாயதுன் இன்பமும் !

மரகதம் — ஆயினும் எவ்வள வலைச்சற் பட்டேன் !
இரவில் அருகே எணையைக் கட்டி
அழும்போ தெல்லாம் எழுந்துதா லாட்டித்
தூக்கம் ஒழித்துத் தூங்கச் செய்தேன் !
பகலில் விட்டுப் பணியெலாம் பார்த்தேன்.
ஒரு நாள் போலப் பலநா ளிப்படி
உழைத்தே னாயினும் உழைத்தலுந் துன்னும்
உணவுக் கொரு ருசி, ஓய்வும் இனிக்கும்.

(போகிறார்கள்)

மாலதி — காளையர் எல்லாம் கல் மனம் படைத்தால்
ஏழைப் பெண்களால் என்செய முடியும் ?

கலியன் — உன்போன் றாரெனக் குறுத்துவர் நல்வழி;

மாலதி — இதுவரை யாண்டும் எவரையும் நீங்கள்
நேசிக் கலையோ ? கூசா துரைப்பீர்.

கலியன் — சொந்த மனைவியை யன்றிப் பிறரைச்
சிந்தையாற் றொடுவதும் தீதெனும் பெரியோர்.

மாலதி — காமத் தால்மனங் கலங்கின திலையோ

கலியன் — காமக் கலங்கள் கணக்கில அறிவேன்.

மாலதி — அவைகளில் ஒன்றும் சுவையுள திலையோ ?
மனத்தைப் பிணித்து மயக்கிடா தெதுவும் ?

கலியன் — பெண்ணே டேனம் பண்ணேல் என்பர் !

மாலதி — ஏளனம் இலையே !

கலியன் — நான் அறி வினன் !
ஆயினும் உன் மனத் தன்மை அறிந்தேன்

(போகிறார்கள்)

வாஸ்து — காதற் கிளியே கண்டதும் என்னை
அடையா வெங்கண் டறிந்தனை யோ சொல் ?

மரகதம் நோக்கினுய் ? என் கண் நில் நோக் குற்றதை !

வாஸ்து அன்று நீ தேவியின் ஆலயத் திருந்து
வந்திடும் போதுன் வழிமறித் திட்ட
மந்த மதியனை மன்னித் தாய் கொல் !

மரகதம் அதுவரை அப்படி நடந்திலார் எவரும் ;
புதுமையா யிருந்தது புரியலை ஒன்றும் ;
இழிவாய்ப் பேச எவரும் துணியார் ;
ஒருக்கால், எந்தன் உடை நடை யதனில்
விருப்பந் தூண்டிடும் விதம் எது வாயினும்
இருக்கக் கண்டுஇவன் எளிதில் எவர்க்கும்
அகப்படு வாளென் றுசையுற் றிருக்கலாம் :
கதுமென ஒருவன் கட்டழிந் திட்டதற்
கென்னையே நொந்தேன், எனினுமப் போது
இன்றெனைக் கவர்ந்திடும் உங்கள்நற் குணங்கள்
ஒன்றுமே எனக்குத் தோன்றிட வில்லை.
கோபித் ததுபோ தாதென் றெனையே
கோபித் தேன் பிரமர்தம தாக

வாஸ்து இனிய என் காதலி !

மரகதம் சிறிதுநீர் பொறுப்பீர்.

(பூ ஒன்றைக் கொய்து அதன் இதழ்களை ஒவ்வொன்ருகப் பறிக்கிருள்)

வாஸ்து ென்னடோ செய்வாய் ?

மரகதம் அன்றிதோ ராட்டம்.

வாஸ்து அது எப் படியோ ?

மரகதம் நகுவீர் எனையே !

(இதழ்களைப் பிடுங்கிக் கொண்டு முணுமுணுக்கிருள்)

வாஸ்து மந்திர மோ உன் வாய்க்குள் சொல்வது.

(சிறிது சத்தமாக)

மரகதம் நேசிப் பார்அவர் — நேசியார் என்னை.

வாஸ்து அமிழ்தினும் இனிய மதிமுகக் கனியே !

மரகதம் — நேசிப்பார் அவர் — நேசியார் என்னை

(தொடர்ந்து இதழ்களைப் பிடுங்கிக் கடைசி இதழைப் பெரு மகிழ்ச்சியோடு பிடுங்கி)

நேசியார் என்னை — நேசிப் பார்அவர்.

வாஸ்து — மெய்யாய் உன்னை நேசித் திடுவார்
மெல்லிய பூவிதழ் சொல்லிய துண்மை
நேசிப் பார்அவர் என்பதன் தத்துவம்
யோசித் தறிவாய்! யோசித் தறிவாய்.

(இருகைகளையும் பற்றிப் பிடிக்கிருன்)

மரகதம் — கூசி நடுச்குது!

வாஸ்து — நடுங்கிட வேண்டாம், நாயகியே, உன்
கைகளை அழுத்திய கைப்பிடி யும் என்
கண்களின் நோக்குக் காதலுணர்ச்சியைக்
காட்டிடும் வாய்ச்சொலைக் காட்டிலும் தெளிவாய்
முழுதும் தன்வசம் இழந்திடும் உணர்ச்சியில்
பொங்கும் இன்பம் என்றும் நிரந்தரம்?
நிரந்தரம்! ஆம் அதன். அந்தரம் அவலமே!
அழிவிலை! அழிவிலை! அன்புக் கழிவிலை!
அழிவிலை நிச்சயம் அழிந்திட முடியுமோ!

(மரகதம் அவன் கையைச் சற்றழுத்திப் பின் பிடுங்கிக்கொண்டு ஓடுகிருள். வாஸ்து சிறிது யோசனை செய்து பின் தொடருகிருன்)

மாலதி — போனது பொழுதும்

கலியன் — போவோம் நாங்களும்.

மாலதி — இன்னமும் இருந்திடில் இட்டமே எனக்கும்
உலகப் பழிப்புக் கிடந்தரு மென்றே
இருந்திடும் என்றுமை வருந்திச் சொலவிலை.
ஊரார்க் குத்தொழில் வேறிலை போலும்!
அயலகத் தாருளர்? அங்கு போவார் வரு
வார்களார் என்பதைப் பார்த்திருப் பார் வழி
பழிசொல வஞ்சிடார்! பாவமக் குழந்தைகள்
இருவர் என் ஆயினர்?

கலியன் — *எகினர் அங்கே*
*துடிக்குள பட்டுப் பூச்சிகள் தாமே*
மாலதி — *அவள்மீ தாசை அடைந்துளான் போலும் !*
கலியன் — *அவன்மீ தவளும் அப்படி யேதான் !*
*உலகப் போக்கிது புதியது, மன்றே ?*

## தோட்டத்தில் சிறு வீடு

(மரகதம் வீட்டுள் நுழைந்து கதவின் மறைவில் நின்று உதட்டின்மேல் நுனி விரல் வைத்துச் சந்து வழி பார்த்து நிற்கிருள்)

மரகதம் — *இங்கவர் வருகிறார் ?*
வாஸ்து — *சிறுக்கியே, குறும்பு*
*செய்திட நினைத்தாய். சிக்கினாய் இப்போ.*
(முத்தமிடுகிருன்)

(மரகதம் வாஸ்துவைக் கட்டிக்கொண்டு பதில் முத்தம் தந்து)

மரகதம் — *மன்னு, உன் மேல் வைத்தேன் ஆசை*
(கலியன் வந்து கதவைத் தட்டுகிருன்)
வாஸ்து — *(கோபமாய்) யாரது?*
கலியன் — *நான்தான் !*
வாஸ்து — *போக்கிரி !*
கலியன் — *போவோம்.*
மாலதி — *இருட்டின தையா !*
வாஸ்து — *இவட்குத் துணை யார்!*
மரகதம் — *அண்மையில் என் மனை ! ஆய் உளாள் ! வந்தனம்.*
வாஸ்து — *பிரிந்திட வேண்டிற் போய் வா ! வந்தனம்.*
மாலதி — *நண்பரே ! செல்வீர்.*
மரகதம் — *நாளையே காண்போம்.*

(வாஸ்துவும் கலியனும் போகிருர்கள்)

*என்னே! இவர் தம் அறிவின் ஏற்றமும் பரப்பும்*
*எல்லா விஷயமும் இவர்மனத் தடங்கும் !*

இத்தகைப் பெரியவர்க் கென்னால் பதில் சொலப்
போமோ ! எதற்கும் ஆமாம் என்றேன்.
பேதையாம் என்னிடம் மேதை யென் கண்டார்
(போகிறான்)

## வனமும் குகையும்.

(வாஸ்து தனிமையில்) எங்கும் நிறைந்த ஏகப் பொருளே !
என்னை நீ அளித்தாய் என்றனக் கேற்ற
இடமிது வென்றிவ் வுலகம் படைத்தாய்.
வையத் தியற்கை வனப்பெலாங் காண
ஐம்புல னளித்தாய் அவற்றின் வகைதொகை
ஆய்ந்தறிந் திடு நால் அந்தக் கரணமும்
அவற்றின் மேலுள ஆன்மா வினையும்
அளித்தென் அகத்துளே அகலா திருந்தாய்.
அருளால் அனைத்தையும் ஒருங்கே காட்டி
ஆட்கொளு முந்தன் அன்பைப் பணிந்தேன்.
கானகந் தந்திடு காட்சியிற் களித்தேன்.
பஞ்சபூ தங்களின் கூத்தையும் பார்த்தேன்.
வானங் கறுத்து வளிமிகத் திரிந்து
பேரிடி மின்னல் பெருமழை பொழிய
மலையும் மரமும் நிலைதடு மாறி
நிமிர்ந்து நிற்பவை நிலத்திலே சாயப்
பெரும் புயல் வீசும் போதொரு குகையில்
போயிருந் துள்ளக் கோயிலின் ரகசியம்
ஆராய்ந் தென்னை அறிந்திட முயன்றேன்.
காலக் கணக்கன் கணக்கிறந் தொழிய
வழியிலா வான வெளிதனில் முழுமதி
சென்னிகே ராகிச் சீரொளி காட்ட
முன்னோர் தவத்தின் முதறி வாளர்,
போனார் கண்முன், போதமும் தியானமும்
அளித்திடு மின்பம் அறிந்தேன் யானும் !
என்றும் மனிதன் ஏக்கம் கொண்டிட
வதாகினுமொன் றிருந்திடும் நிச்சயம்
மதிக்கும் காரணம் வைத்தாய் என்றால்,

குவலயத்தேது ? குறையிலா நிறைவு ?
வானுறை தெய்வத் தோடுறையும் நிலை
தானுறக் காட்டும் ஞானமும் கல்வியும்
நீ யெனக் களித்தாய் : ஆயினும் இந்த
ஈனனைத் தோழனுய்ச் சேர்த்தனை இவனால்
மானமழிந்தேன், மதியும் கெட்டிடும்,
உயர் பண்பனைத்தையும் ஊதித் தொலைப்பான்
அழகிளம் பெண் மீ தாசையைத் தூண்டினன்,
நேசமும் முற்றிக் காதலாயிற்று
காதல் மாறி ஆசை மீதுற
இன்ப அநுபவம் எண்ணுகேன் இனிமேல் ?

(கலியன் வருகிருன்)

கலியனு் தனியே இருக்கச் சலியாய் இன்னும் ? !
இனிமையென் கண்டாய் ஏகாந்தத்தில் ?
அரிதே தவமும் வறிதுன் முயற்சி !

வாஸ்து தனிமையின் இன்பந் தனை நீ கெடுத்தாய்
பணிவேறிலேயோ ? பக்கம் ஏன் வந்தாய்

கலியன் கோபமாய் ஒன்றும் கூறிட வேண்டாம்
ஆகா தென்றால் வாரா தொழிவேன்.
நிறுக்கு நெஞ்சும் வெறுத்த பேச்சும்
கடுத்த முகமும் படைத்த ஒருவனை
விடுப்பதில் யார்க்கும் வருத்தமிராது ;
இரவும் பகலும் உழைப்பேன் உனக்காய்
உன்தன் விருப்பம் இதுவெனக் குறிப்பாய்
அறியேன் நீயும் அறியச் செய்யாய் !

வாஸ்து தற்போதிக் குரல், சரி சரி பொருந்தும்
தொந்தரவுக்கோ வந்தனம் வேண்டும் ?

கலியன் மனிதா ! நீயெனை மதித்தாயில்லை !
வாழ்க்கைப் பாதையை வனப்புறச் செய்து
வையக வாழ்வில் மையுறச் செய்யும்
என்னலன்றோ ? இவ்வுலகத்தவர்

இன்பமும் துன்பமும் ஈதென் றறிவர் !
சொர்ப்பன உலகிற் சுகம்பெற நினைந்து
கற்பனை செய்திடும் கட்டழித்துன்னை
இத்தரைமீதில் இருந்திடச் செய்தேன் :
காய மொராறுத்துக்காய் கனியுண்டு !
இருட்டுக் குகையில் குருட்டுக் கண்கொடு
ஆந்தையைப் போலப் பேந்த விழித்தாய்
கான்கத் தலைக்தென் கண்டாயப்பா ?
தத்துவ போதப் விட்டிலை என்னே !
முத்தியில் மோகம் உற்றுளாய் இன்னும்.

வாஸ்து கானகந் தந்திடும் ஆனந்தத்தினை
நீயறிந்தா லிவண் நீங்கிடாய் என்றும்

கலியன் பார்தனை வெறுக்கும் பரமானந்தம் !
யார்க்கது வேண்டும் ? யாவருமறியா
ஏதோ தெய்வமாக இரவும் பகலும்
இதை நினைத்தேங்கி இன்னற்படுவாய் ?
காலக் கதியையும் ககனத்திருப்பையும்
ஞாலப் படைப்பின் மூலத்தியற்கையும்
சகதிகளிரும் போதிந்த வுலகின்
வாழ்நலம் இழந்தாய் ! எனினும் சகச
ஞானந் தருமானந்தமும் தவிர்ப்பயோ ?

வாஸ்து சீ ! சீ ! போபோ ! செல்லாதுன்சொல் !

கலியன் உள்ளத்தெழுந்திடும் சகச உணர்ச்சியை
அழித்திடமாட்டீர் ஆயினும் அதனை
வெளியிற் பேச வெட்கப் படுவீர் !
நெடுநாள் இந்நிலை நின்றிடமாட்டாய் !
நின்றால் வருந்துயர் நெஞ்சை யுடைக்கும் ;
அன்றேல் பைத்தியம் ஆகி அலைவாய்
போதும் தத்துவ போதப் புரட்டு !
ஏதும் அறியாப் பேதையுமங்கே
ஏங்கித் துடிக்கிறாள் எந்நேரத்தும்

கரையுடைத்தோடும் காட்டாறென்னக்
காதல் நீரைக் கன்னியின் மனத்தில்
பாய்ச்சி விளைத்த பயிரை இப்பால்
தீய்த்து விடுமுன் திறம்வெகு நன்று!
தனிமையில் இங்கே தத்துவம் பேணும்
சிறுமதி விடுத்துச் சிறுமியைக் கண்டவள்
அருமை பாராட்டி அணைவீர் ஐயா!
கன்னியோ உன்னைக் கண்டநாள் முதலாய்க்
கனவிலும் நினைவிலும் உனை மறந்தறியாள்!
காதநோயுற்று வேதனைப் பட்டினிக்
காண்பனோ வென்று கண்ணீர் வடிப்பாள்!
வானத்தேகும் மேகம் பார்த்துத்
தூதுபோகச் சொல்வாள் ஒருகால்
ஆறுதல் சிறிது அடைவாள் ஆயினும்
ஆற்றொணாத் துயரே அவள் அடைந்திருக்கிறாள்!
ஏழைப் பெண் மீதிரக்கம் கொண்டவள்
மனத்துயர் மாற்றி மகிழச் செய்வாய்.

வாஸ்து கூடிக் கெடுக்கும் கொடு விஷப்பாம்பே
ஓடிப்போ நில்லாதே என்முன்
நல்லாள் பெயரைச் சொல்லாதே இனிப்
பூத்த நெருப்பை ஊதிவிடாதே.

கலியன் என்செய நினைந்தாய்? எங்கோ சென்றனர்?
என்றவள் நினைப்பதற் கிடந்தரு முன்செயல்

வாஸ்து அருகில் இன்னும் இருப்பதை அறிவாய்
ஆயினும் தூரத் தேகினும் அவளை
என்றும் மறவேன், எண்ணேன் பிறிதும்.

கலியன் நன்றுன் பேச்சு. நான் பலநாளும்
பூமது வுண்ணும் புள்ளினம் போன்று
உங்கள் இருவரின் ஒற்றுமை கண்டு
உண்மையிற் பொறாமை உளத்திற் கொண்டுளேன்!

வாஸ்து — மாலைப் பெருக்கும் மாயா விகாரமே !

கலியன் — உன் பேச்சு எனக்கு நகைப்பை விளைக்கும் !
ஆணையும் பெண்ணையும் அழகுறப் படைத்த
அரும்பெரும் சக்தியே ஆசையைப் பெருக்கி
அவர்களை ஒன்ருய் அணையச் செய்யும் ;
எனவே தாங்கள் இங்கிருந்தேகி
அன்புடைக் காதலி அவள்மனை சேர்வீர் !
அன்றி மசானம் அணுகீர் நிச்சயம் !

வாஸ்து — அவள்கரம் தொட்டு அணையும் இன்பத்திலும்
அரிதோ சொர்க்கத் தனுபவம் ! ஆயினும்
என் உறவாலவள் இன்பமடைந்திடுவென் ?
ஆருத் துயரம் நேரும் என்றே
எண்ணுமென்மனம் எப்போதும் மே ?
நானோ, இல்லிடமின்றி எங்கும் அலைந்து
எல்லோராலும் வெறுக்கப்பட்ட
பொல்லான் ஆவேன் ! புன்னெறி நாயேன் !
சாரும் குறியும் சாந்தியுமில்லேன்.
நல்லார் கண்டால் நடுங்கி ஒதுங்குவர் ;
அவளோ !
கள்ளமடையாக் கருத்தினள் இன்னும்
வெள்ளி மலையடிவாரத்துள்ள தன்
வீடேயன்றி வேறிட மறியாள்
தூய வாழ்க்கை ! தூய எண்ணம் !
வஞ்சகப் பொய்களின் வகையறியாதவள்
இத்தகு செல்வியின் இற்பிறப் போடவள்
இன்பமும் சாந்தியும் என்னுல் கெடவோ ?
ஈசனும் வேண்டா நீசனைக் கூடி
இவளும் நரகத் திடர்ப்பட வேண்டுமோ !
வேண்டில் அதைமிக விரைவில் வேண்டுவன்.
நடப்பதெப்படியும் நடந்துறுமாயின்
இடையுள நாளை இலையெனக் குறுக்கி
உடனே நிகழ்ந்திடத் துணைபுரி பேயே !

கலியன் பூத்த நெருப்புப் பொங்கி எழுந்தது !
பேயவள் நோயைப் போக்கிடு மடயா !
வழிவகை காணா முடியா மண்டையில்
முடிவுதான் நேரே முன்வந்து நிற்கும்.
துணிவுடன் தாக்கப் பணிவுறும் யாவும்;
பேயின் துணிச்சல் பெற்றுளாய் நீயும் ;
துணியாப் பேயை மதியார் சிறிதும்.

## மரகதம் வீடு.

(இராட்டினத்தைச் சுற்றிக்கொண்டு பாடுகிறாள்)

போனதே நிறை — பறி
போனதே நிறை,
பித்துப் பிடித்தவர்பின் போனதே நிறை,

1. சிந்தையு மென் சொந்த மிலை
அன்று முதலாய் — என்ன
தந்திரம் செய்தாரோ உடன்
சென்று சேரவே ! —போனதே நிறை

2. இந்திரியம் செய்யும் வேலை
இந்திர ஜாலமோ ! சுற்றி
எங்குமவர் போலுருவம்
என் கண் காட்டுமே —போனதே நிறை

3. காற்றில் வரும் ஓசைகளில்
கேட்டிடுவனே —அவர்
காதல் மொழி பேசுவதென்
காதுகளிலே —போனதே நிறை

4. போற்றிடு மிப்பூமி சுடு
காடு போலவே — இன்று
தோற்றுதெனக்கே யவரும்
இல்லாது போனால் — போனதே நிறை

5. வழியில் விழி வைத்திருப்பேன்
வீட்டிரும் போது — நான்
வெளியில் சென்றால் தேடுவதும்
எந்தன் நாதனே — போனதே நிறை

6. கூடி விளையாட உடல்
நாடுதே இப்போ — வந்து
கூடிச்சுகம் தருவாரோ ?
கோதை யென்னையே ! — போனதே நிறை

## மாலதி தோட்டம்.

(மரகதமும் வாஸ்துவும்)

மரகதம் கூறுவாய் உறுதி !

வாஸ்து கூடியமட்டிலும்.

மரகதம் நெஞ்சில் அன்பு நிறைந்தவர் என்பதை
அறிவேன் ஆயினும் ஆண்டவன் பக்தியில்
அதிக மில்லை யென் றஞ்சுகிறேன் நான்
மத விஷயத்தும் மன மறிந்திடுவேன்

வாஸ்து விட்டிடு குழந்தாய் ! வீண் அவ்விசாரம் !
உடல் பொருளாவி யெல்லாம் உனக்கே
உரிமையாய்க் கொடுத்தேன் உன்மீ தெனக்குள
ஆசைக் களவில்லை அதை நீயறிவாய் !
மதத்திற்காக வருந்தார் எவரும் !

மரகதம் அது போதாது ; அவசியம் மதத்தில்
நாமே பற்றுதல் உற்றிடவேண்டும்

வாஸ்து அவசியம் வேண்டுமோ ?

மரகதம் ஆ ! ஆ ! அதனை
உம்பனத்திசைவித் தேற்கச் செய்திடில்
என்போற் பாக்கியம் எவர்க்குக் கிடைக்கும்
அந்தோ ! வேத விதிகளை வெறுத்தீர் !

வாஸ்து மதிக்கிறேன் அவற்றை.

மரகதம் மனமில்லாமல் !

கோயிலுக் கே நீர் போனதைக் கண்டிலேன்
தெய்வம் உண்டெனும் திடமும் இல்லையோ ?

வாஸ்து கண்டெனும் சொல்லியே ? உண்டென உறுதியாய்
உரைத்திடு வாரெவர் ? குருக்களோ ஞானியும்
கூறுவர் பலப்பல ஏறுமா றாகக்
கேட்பவர் கூசிடப் பேசுவர் பதிலே !

மரகதம் ஆயின் கடவுள் இலையென் பீரோ ?

வாஸ்து கண்ணே, சொல்வதிற் காண்பாய் மெய்ப்பொருள்
திண்ணமாய் எவர்தான் செப்புவார் அவர் பெயர் ?
உண்டென உணர்ந்த பின் உரைப்பரோ ? வெளியில்
நெஞ்சத் துணர்வை நீள நினைப்பவர்
அஞ்சா திறைவனை இலையென் பாரோ ?
உன்னையும் என்னையும் உலக மனைத்தையும்
ஈன்றா ளாகி எந்தையு மானார்
உன்னுளும் என்னுளும்
தோன்றாத் துணையாய் துயர்தீர்த் திடுவார்
கண்ணுள் அனைவரும் காண்பரே தம்மை
விண்ணுள கோள்கள் நிலைதிரி யாது
சென்று ஆணை செலுத்தி உலகில்
மன்னுயிர் எல்லாம் தன்னருள் வெளியில்
தழைத்திட வைத்தனர் இயற்கையின் சக்தியை
கண்கூடாகக் கண்டில மாயினும்
எங்குணும் நிறைந்துள இதன்செய லனைத்தும்
அறிவோம் நாமே ; ஆதலால் இதனைத்
தெய்வம் கடவுள் என்றே கூறுக !
அன்பே ! அருளே ! ஆனந் தம்மே !
எப்பெயர் இட்டுநீ செப்பினும் சரியே
எனக்கொரு பெயரும் இதற்குத் தெரியாது
எல்லாம் ஒருவர் உள்ளத் துணர்வே !
ஒளியை மறைக்கும் புகையைப் போல
உணர்ச்சியை மறைக்கும் உரைக்கும் பெயர்கள்

மரகதம் உரைத்தன வெல்லாம் பொருத்த முள்ளதே
குருக்கள் கூற்றும் இருக்கும்இப் படியே
சொற்களில் மட்டும் சிற்சில பேதம்.

வாஸ்து ஆண்டவ னருளால் அமைந்திடு முலகில்
மாண்புறு மனிதன் மனத்தெழு முணர்ச்சிகள்
எங்கும் இதுபோல் இருந்திடும் எனினும்
அவரவர் மொழியில் அவரவர் உரைப்பார்.
அதுபோல் நானும் இசைத்தேன் என்மொழி.

மரகதம் உண்மையே முற்றும் உளதென் றாலும்
என்மனம் ஏதோ இதில்தவ றுளதென்
றெண்ணி யேங்கிடும்! நாத்திக ரோ நீர்?

வாஸ்து கண்மணி யே நீ கலங்கிட வேண்டாம்.

மரகதம் அந்தோ! உங்களுக் காகா தந்தப்
பேர்வழி நேசம்!

வாஸ்து ஏனோ சொல்வாய்.

மரகதம். உம்முடன் கூட உற்றிடும் அவனைக்
கண்ணுறும் போதே கலங்குமென் நெஞ்சம்
இதுவரை எதையும் இதுபோல் வெறுத்திலேன்!

வாஸ்து அவனைச் சிறிதும் அஞ்சேல் குழந்தாய்.

மரகதம் பாழ்முகப் பாவியைப் பார்க்கும் போதே
அச்சமும் வெறுப்பும் அகத்தில் எழுந்திடும்.
ஓயா தும்முகம் பார்த்துக் களிப்பேன்
என்னையும் அறியா தென்னுடல் நடுங்கும்
இவன்மிகக் கொடியவ னென்பதென் துணிபு.

வாஸ்து உலகம் பலவிதம்!
இவன்போ லியரும் இருப்பார் உலகில்

மரகதம் இவனுடன் கணமும் இருக்கச் சகியேன்
உள்ளே வந்தால் சுற்று முற்றும்
பார்க்கும் பார்வையில் பரிகா சம்மிகும்
விடமும் எரிச்சலும் வெளிப்படக் காணும்

இவனுக் குலகில் எதுவும் இனிதிலை
எவ்வுயி ரிடத்தும் இரக்கமும் இல்லை
என்பதைத் தெளிவாய் இவன்முகம் காட்டும்
உம்முடன் பழகி நான் உற்றடு மின்பமிப்
பாவியைக் கண்டதும் பஞ்சாய்ப் பறந்திடும்.

வாஸ்து கற்பனை செய்யுமுன் அச்சந் தவர்த்திடு.

மரகதம் கயவன் வந்திடும் காலடி கேட்டதும்
என்னையும் மீறி எழுந்திடும் வெறுப்பில்
உன்னையும் வெறுத்திட உடன்படும் என்மனம்
அவன்அரு கிருந்தால் ஆண்டவன் நினைவும்
அகன்றிடும் அது எனக் களித்திடும் வருத்தம்
உமக்கும் அவ்வித உணர்ச்சியேற் படுமே !

வாஸ்து இது மன வெறுப்பே !

மரகதம் இனி இலை நேரம்.

வாஸ்து ஒருமணி யாகிலும் உன்னுடன் தனியே
இருந்திடச் சமயம் எந்நாள் வாய்க்குமோ ?

மரகதம் தனியே துயின்றிடில் தாமத மின்றி யின்
றிரவே யுன்னை ஏற்பேன் என்னறை
கதவைத் தாளிட் டடையா திருப்பேன்
ஆனல் என்னுடன் ஆயும் துயில்வாள்
அன்னையின் தூக்கமோ அரைக்கண் தூக்கம் ?
அகப்படில் உயிரை அக்கணம் விடுவேன் ?

வாஸ்து அதற்கொரு சிறிதும் அஞ்சிட வேண்டாம்
இதிலிரு துளியவள் குடிக்கும் பாலுடன்
கொடுத்திடில் பெருந்துயில் கொள்வது நிச்சயம்.

மரகதம் உன்பொருட் டெதுவும் செய்திடத் துணிவேன்
ஆபத் தொன்றும் அவட்கா காதே ?

வாஸ்து ஆமெனில் நானதை அளித்திடு வேனே ?

மரகதம் அருமருந் தன்ன அன்பரே ! உம்மைக்
கண்டது முதலென் கருத்தழிந் திட்டேன்.

சொன்னதை மறுக்கத் துணிவிலை எதற்கும்
உடன்பாடாகி உற்றது செய்தேன் ;
என்செய இனிஉளதேனின் மயக்கம் !

(போகிருள்)

(கலியன் வருகிருன்)

கலியன் சென்றதோ குரங்கு ?

வாஸ்து ஒண்டி நீ கேட்டாய் ?

கலியன் நடந்தது முற்றும் நன்ருய் அறிவேன்
ஆன்ம விசாரணை அழகா யிருந்தது
காதல ருடைய கடவுட் கொள்கையும்
ஒழுக்கமும் பக்தியும் உள்ளவா றறியச்
சிறுமியர் எல்லாம் செய்வார் முயற்சி
பக்தியும் பணிவும் மிக்கவர் ஆயின்
தம்மையும் பணிந்திடச் சம்மதிப் பாரெனும்
ஆசையா லன்ருே அவ்விதம் செய்வர் !

வாஸ்து கன்மனம் படைத்த வன்மப் பிசாசே !
அன்பின் செயலை அறிவா யோ நீ ?
காதலன் இன்பமே கருத்திற் கொண்டிடும்
மாதவள் ஆதலின் மனங்கொள் காதலன்
தீநெறிப் பட்டுத் தீராத் துயருற
சகித்திடு வாளோ ?

கலியன் களித்திட நினைத்தாய்
காதலின் மீறிய காமுக னே நீ
பெண்வழி பற்றிப் பின் செலத் தயங்காய்

வாஸ்து தீ வாய்ப் பேயே ஆபா சம் விடு

கலியன் முகக்குறி கொண்டே முற்றிலும் ஒருவன்
குணமறி யும் கூர் மதியவட் குண்டு
என்னைக் காணின் எய்திடு முணர்ச்சி
இன்னதென் றறியா தேங்கு மாயினும்
கரந்துறை யும் என் கள்ள மகற்றி
உண்மைச் சொரூபம் உணர்த்தும் அவளின்

ஆறறி வினையும் மீறிய சக்தி
வல்லவன் என்பதை மறுக்காள் எனையே
பொல்லாப் பேயென வெறுப்பா ளாயினும்
சரி ! இன் றிரவே !

வாஸ்து — அதனால் உனக்கென் ?

கலியன் — களியாட் டெனக்கும் உளதென் றறிவாய்

(கிணற்றருகில்)

(மரகதமும் தோழி பாக்கியமும் குடங்களுடன்)

பாக்கியம் — லீலா சேதியை நீ யறி வாயோ ?

மரகதம் — வீடே உறைவேன் ஏதும் அறியேன்.

பாக்கியம் — மெய்தான். எனக்கு மீனுள் சொன்னுள்
தலைகால் தெரியா தலைந்தாள் தறுதலை
அழிந்தாள் இப்போ !

மரகதம் — அது எப்படியோ ?

பாக்கியம் — ஈருயிர்க் காரி என்பார் அவளை

மரகதம் — அந்தோ பேதை !

பாக்கியம் — அவட்குத் தகும் அது
எத்தனை நாட்கள் இவனுடன் தொடர்பு
எங்கா கினும் சரி, இருவரும் சேர்ந்தே
செல்வர், மனம்போல் திரிவர் இவர்தம்
ஆட்டமும் பாட்டமும் அடங்காச் சிரிப்பும்
கேட்டுக் கேடெனும் பேச்சையும் கேளார் !
தன்னுடல் அழகில் தருக்கினள் அவளும்
அழகில் மயங்கிய அவனும் விரும்பிப்
பழகிட வளித்தான் பற்பல பரிசுகள்
நாணிலி யவற்றை நன்றெனக் கொண்டாள்
ஆசை மொழிகள் ! அதன் பின் முத்தம்
அப்பால் இழந்தனள் ஒப்பிலா மணியை

மரகதம் — ஐயோ பாவம் !

பாக்கியம் — அனுதாபம் என் !
ஆய் சொற்கடங்கி அகத்திற் கிடந்து

இரவெலாம் ராட்டை நூற்போம் நாமே !
அப்போ தெல்லாம் அவள்தன் ஆசைக்
கினியவ ளோடு தனிமையிற் சென்று
திருட்டுத்தனமாய் இருட்டில் திரிந்து
கூடிப் பேசிக் கொண்டா ளின்பம் !
இன்றுமாப் பொழிந்தாள் இப்போ ! இனிமேல்
வெள்ளை யணிந்தவள் வெளியில் வரட்டும் !

மரகதம் நிச்சயம் அவளை மணந்திடு வான் அவன்.
அவனா மணப்பான் ? அறிவிலி யலன் அவன் !
எத்தனை பேரைக் கெடுத்திருப் பானோ ?
புதியவள் தேடிப் போனான் போலும் ?
இப்பொழு திங்கிலை !

மரகதம் இது பெரும் பாதகம்

பாக்கியம் அவனே வந்தினி மணப்பினும் சரியே !
தோரணம் உண்டு துறக்கப் பட்ட
லீலா ளுக்கிலை சீலத் திருமணம்
சூடின ரிட்ட பூவே யானாள் !
நாட்டினர் பழிக்கு நாணுவள் நாளும்.

(பாக்கியம் போகிறாள்)

(மரகதம் தன் வீட்டை நோக்கி மெதுவாகப் போகிறாள்)

முன்பொரு பேதை முறைதவ றாக
நடந்தன ளென்று நவிலக் கேட்பின்
எத்தனை கோபம் வந்திடும் எனக்கே
வைதிட அவளை வார்த்தைகள் இலவாம்
வசைபல சொல்லி வழுக்கிய பேதையின்
பிழையைப் பெரிதும் பெரிதாக் கிடுவேன் !
நெறிதவ றா என் நிறை போற் றிடுவேன் !
இப்போ தந்தோ என்கிலை யாதாம் ?
நிறையிழந் தற்றிடும் சிறுமை வெளிப்படும்
இழிசெயல் புரிந்திட எனிசைந் தேன் நான் ?
எனினும் இன்பமே, ஈசன் அறிவான் !

(போகிறாள்)

### நகர்ப்புறத்தில் கோட்டை வாயிலுக்கருகில் உள்ள கண்ணகி கோயிலில் மரகதம் புது மலரிட்டு அன்னையைப் போற்றிப் பணிகிருள்

(கிளிக்கண்ணி மெட்டு)

1. அன்பு கொண் டெவ்வுயிர்க்கும்
ஆதர வளித்திடுவாய்
என் முகம் பார்த்திரங்காய்—தாயே!
உன் மகள் யானலவோ?

2 தாயறி யாத சூலிச்
சகத்தினில் இல்லை யென்பார்
சேய் உறும் துன்பமெல்லாம் - தாயே!
நீ யறிவா யென் நெஞ்சம்

3. எங்கு சென்றாலும் என்னை
எரித்திடும் இத்துயரம்
பொங்கி யழுதிட் டாலும்—தாயே!
தங்கிடும் நெஞ்சில் நீத்தம்.

4 என்ன சொன் னாலும் மனம்
இன்னலுற்றே யழுங்கும்
தன்னந்தனியே யழுது—தாயே!
தவிக்கிறேன் நாள் முழுதும்.

5. அழுதழு தல்லற் பட்டேன்
அறையினில் இரா முழுதும்
அழுகை முடிந்திடா முன்—தாயே!
பொழுதும் விடிந்து விடும்.

6. ஆறுய்ப் பெருகிடும் நான்
அழுது வடிக்கும் கண்ணீர்
ஆற்றுவார் உன்னை யல்லால்—தாயே
ஆருளர் வேறெனக்கே?

7. பட முடியாது துயர்
பட்டது போதும் இந்த
உடலை நான் வேண்டேன் அம்மா—தாயே!
உயிரையும் கொள்வாய் நீயே!

(பூ மாலையை அணிவித்து வணங்கிச் செல்கிறாள்)

இரவு — மரகதம் வீட்டின் முன் தெருவில் மரகதம் அண்ணன் விஜயன் (ஒரு போர் வீரன்)

விஜயன் தோழர் பலபேர் கூடி யொன்றாய்
ஆடிப் பாடி அகங்களித் திருக்கும்
வேளையில் அவரவர் விரும்பிய பெண்களின்
சீலமும் கற்பின் திறமும் உரைத்தவர்
சீர் பாராட்டிச் செருக்குற் றிடுவர்.
அந்நாள் யானும் பெருமிதங் கொண்டு
மெதுவாய் எழுந்து அவசரமின்றி
இளநகை புரிந்து மீசையை நீவி
நண்பரே ! என்றன் தங்கையைப் போல் ஒரு
நற்குண நங்கை நானிலத் தாருளர் ?
என்றே கூறி எக்களித் திடுவேன்.
மங்கையர்க் கரசி யுன் தங்கை மரகதம்
என்றிடு வார் சிலர் ; ஏனையோர் பலரும்
மறுத்துப் பேச வாயிலா தடங்குவர்.
இந்நாள் அந்தோ ! என் கதி என்னே !
ஈனப் பயல்களும் ஏளனம் பேசத்
துணிந்தனர், அதனால் துயர்உறு வேன்நான்
கடன்பட் டார்மனங் கலங்கி வெளியில்
தலைகாட் டிடவும் தயங்குதல் போல,
பழிச்சொல் நெஞ்சைப் பிளந்திடும் போதும்,
எதிர்த்துப் பேசாது இருப்பேன் ஊமைபோல்
அவமதித் தோரை அடித்து வெருட்டி
ஒழிப்பே னாயினும் உண்மையே அவர் சொல் !

(வாஸ்துவும் கலியனும் வருகிறார்கள்).

யாரோ இருவர் இவ்வழி வருகிறார்
கள்ளரைப் போல மெல்ல நடந்து
இருவரில் ஒருவன் அவனா யிருப்பின்
உயிருடன் போகான் இவ்விடம் விட்டு.

வாஸ்து கோயில் வாசலில் கொடிமரத் துச் சியில்
திருவிளக் கொன்று ஒளிவிடு வதைப்பார்.

இருளை விலக்கும் ஒளியைச் சூழ்ந்த
இருளே அதனை மூடி மறைத்திடும்,
நாயம் சென்றால் தோன்று தொழியும்,
அதுபோல் என்றன் மனத்தை இப்போ
திருள்சூழ்ந் திட்டது, ஏனோ அறியேன்.

கலியன் பாலும் வெண்ணெயும் பாங்குடன் வைத்திடும்
பானையைத் தேடும் பூனையைப் போன்றே
ஆனேன் நானும், ஆயினும் நெஞ்சில்
தூயவன் என்றே துணிவாய்க் கூறுவேன்.
குறும்புத் தனத்தில் கொண்டேன் இச்சிறு
திருட்டும் புரட்டும் விளையாட் டாக
நாளை மறுதினம் வந்திடும் பண்டிகை
அன்றிர வேநாம் அறிவோம் முடிவை !

வாஸ்து மின்னுமப் பெட்டியில் என்னுளது ? அதனை
அளித்திட லாமோ அவளுக் கின்றே ?

கலியன் பெட்டியும் பொருளும் நிச்சயம் அவட்கே
விரைவில் கொடுத்திடச் செல்வாய் நீயும்
உள்ளே நிறையப் பொற்கா சுகளே !

வாஸ்து அணிவகை ஒன்றும் அதனுள் இலையோ ?
மோதிரம் காப்புக் கொலுசே தாகினும் ?

கலியன் கழுத்திற் கணியாம் தரள வடம்போல்
ஏதோ வொன்று இருக்கக் கண்டேன்.

வாஸ்து பரிசுக ளின்றிப் பார்த்திட விரும்பேன்
காதலி யைநான் காணும்போ தெலாம்.

கலியன் சும்மா வந்திடும் சுகத்தையும் விரும்பி
அநுபவித் திடுவதில் ஆட்சேபம் ஏன் ?
அந்தரத் திருந்து சுந்தரக் கோள்கள்
இந்திர ஜாலம் இயற்றிடும் நேரம் ;
மந்தமா ருதமும் மலர்மணம் வீசும்,
இந்த நேரத்துள் சுந்தரி மகிழ்ந்திட
இசைப்பேன் காதுக் கினியநற் கீதம்.

(யாழோடு சேர்ந்து பாடுகிறான்)

மாதே உந்தனுக்குத் — தலை
மீதேன் முக்காடு ? —மாதே !

1. எங்கு செல்வாயடி இங்கு தனித்து நீ
தங்கியிருப்பதின் சங்கதி என்ன சொல்? —மாதே !
2, வேளை விடியலை விண்மீன் ஒளிக்கலை
தாளைத் திறந்திடும் ஆளையே பார்க்கிறாய்? —மாதே !
3. கள்ளத் தனமாக மெள்ள நடக்கிறாய்
உள்ளத்தை யார் வந்து கொள்ளை கொண்டாரடி
—மாதே !
4. இன்னம் விவாகமே இல்லை போல் காணுதுன்
அன்னை கண்டாலென்ன சொல்லுவாள் உந்தனை
— மாதே !
5. தாலி கட்டாத முன் வாலிபன் விட்டிறான்
சோலி யுனக் கென்ன ? சேலியிதல்லவோ? —மாதே!
6. கன்னி கழியுமுன் மன்னவனாயினும்
சொன்னபடிக்கெலாம் சன்னத்தமாவானோ!—மாதே!
7. என்ன தான் ஆசைகள் சொன்னாலும் ஆண்பிள்ளை
பின்னாலே போனவள் கன்னியும் ஆவாளோ— மாதே
8 மையல் கொண்டே யொரு பையனுடன் செல்லத்
தையல் உனக்கிந்தத் தைரியம் வந்த தேன்? —மாதே!
9. கொண்டை யவிழ்த்திடும் கொங்கை தளர்த்திடும்
உந்தன் உடைகளில் சந்தனம் காணுது ! —மாதே !
10. மானமெல்லாம் பறி போனதுவோ ? மற்ற
ஈனத்தன முனக்கானதுவோ ? அடி—மாதே !
11. முட்ட நனைந்தவர்க் கீரமில்லை யெனில்
வெட்கத்தைவிட்ட பின் முக்காடெதற்கடி— மாதே !
12. தாண்டரு கற்பினைத் தாண்டி விட்டாயினி
ஆண்டவன் காத்திட வேண்டுமடியுனை —மாதே !

(விஜயன் முன் வந்து)

விஜயன் யாரைவஞ் சித்திட யாழும் பாட்டும் ?
மோரையைப் பார்த்துக் காரி யுமிழ்வேன்.

பாட்டை நிறுத்தாய் பஞ்சைப் பையலே !
யாழை யுடைத்துத் தூளாக் கிப்பின்
வாயை அடைத்திடு வெளிப் போதே !

கலியன் — உடைந்தது யாழும் — ஓ — ஓ யாழே !

விஜயன் — உடையுமுன் மண்டையும்—உண்மையிற் சொன்னேன்

கலியன் — நண்பா வாராய் ! என் பால் உடனே
வாளை உருவி வாஇப் படியில்
இவ்வடி தடுப்பேன் இதுபோ தேயவன்
நெஞ்சில் குத்து, அஞ்சிட வேண்டாம்.

விஜயன் — இந்தா இதைத் தடு !

கலியன் — என்முடி யாதோ ?

விஜயன் — இதையும் தடுப்பாய்.

கலியன் — எளிதே எனக்கிது.

விஜயன் — பேயே உன் துணை ஆயது போதும் !
கையில் எப்படிக் காயம் ஆனது ?

கலியன் — ஏற்றிக் குத்திடு இதுதான் சமயம்

விஜயன் — ஆ ? (குத்தப்பட்டு வீழ்கிறான்)

கலியன் — விழுந்தான் மடப்பயல் ! எழுந்திடான் இனிமேல்
இதைவிட் டுடனே கிளம்பிட வேண்டும்.
" கொலை " எனும் பேச்சின் ஒலிவரக் கேட்டேன்.
போலீ சாரிடம் போகா தொளிக்கும்
மார்க்கம் அறிவேன். மற்றுயிர் கொன்ற
பழியைப் போக்கும் வழியறி யேன்நான்,

மாலதி ஜன்னலில் — வெளியே ! வெளியே !

மரகதம் ஜன்னலில் — விரைவில் விளக்குடன்

மாலதி — குத்தும் வெட்டும் குழப்பமும் சண்டையும் !

ஜனங்கள் கூடிவிட்டனர் — யாரோ ஒருவன் கீழே கிடக்கிறான்

மாலதி வெளிவந்து — கொன்றவர் யாரோ ? சென்றா ரோ அவர் ?

மரகதம் வெளிவந்து — நிலத்தில் கிடப்பதார் ?

ஜனங்கள் — நின் தாய் மகனே

மரகதம் — ஆண்டவ னேநான் அழிந்தேன் இன்றே

விஜயன் — உயிர்விடு கின்றேன். உயிர்போ முன்பிங்(கு)
உற்றதைச் சுருக்கமாய் உரைப்பக் கேட்பீர்.
ஊளையிட் டலறும் கூளிப் பெண்காள் !
காளை என் கடைசிக் கட்டுரை கேளீர்
தங்காய் மரகதம் ! தனித்துக் கேட்பாய்,
இளமையும் எழிலும் இருக்கிற தின்றும்
மதியிழந் திந்தப் பழிசெயத் துணிந்தனை
விபசா ரிக்கேன் வெட்கம் இனிமேல்
பட்டப் பகலிலும் இட்டமா யிரு போ !

மரகதம் — அண்ணா ! ஒன்றும் அறியேன். தெய்வமே !

விஜயன் — தெய்வமென் றின்றன் தீவாய் உரையேல் !
நடந்ததெப் படிப்பும் நடந்து முடிந்தது.
அத்தன் போக்கில் அனைத்தும் செலுமே
திருட்டுத் தனமாய் ஒருத்தனோ டுறவு
அதன்பின் நாலைந் தாடவ ரோடும்
கூடிப் பழகிக் கூச்சம் விடுத்துப்
பத்துப் பெயருடன் போனபின் உலகப்
பழிப்புக் கஞ்சாப் பரத்தையு மாவாய்.
பழிக்குப் பயந்தெப் பாவமும் முதலில்
இரகசிய மாகவே பிறந்திடும் வளரும்,
இரவெனும் போர்வை யெத்தனை பாவச்
செயல்களை மறைத்துக் காத்திடும் உலகில் !
இருட்டிற் பிறந்த திருட்டுக் குழவியாம்
தீவினை பகலில் தெரிந்திடிற் பலரும்
சீயெனச் சீறிச் சிதைத்திடு வார்மெய் !
தீத்தொழில் முற்றித் திறமுற வளர்ந்திடில்
கரந்துறை விடுத்துப் புறம்போந் தஞ்சா
தெக்களித் திறுமாந் திருக்கும் பகலிலும்
வரவர வனப்பும் குறைந்து பார்ப்போர்

வெறுக்கொளும் விதமேஉருக்கொளு மாயினும்
நாணு துலவும் நாளும் துணிவுடன்
வெளிவந் துலாவ வெட்கமே கொள்ளாள்.
தங்காய் ! உன்னைத் தனிவழி காண்பவர்
எங்கா யினும் சரி, எவரே யாயினும்
ஏசி யிழித்துப் பேசி ஒதுக்குவர் !
நாளடை வில் நீ நாற்றப் பிணம்போல்
எனத் திற்கே யாளா யழிவாய்.
புதுமணப் பந்தரில் வதுவை யுனக்கிலை
பொற்றாலியி னிப் பூணு யென்றும்
பட்டுடுத் தொளிரும் பணிபல பூண்டுன்
இட்டமாய்த் தெரு வழி இனிச்செல எண்ணுய் ;
பார்ப்பவர்க் கொளித்துப் பதுங்கிப் பிச்சை
ஏற்பார் முதலாம் ஈனக் குப்பலில்
சேர்ந்தொரு மூலையிற் சீரழிந் திடுவாய்
ஈசன் உன்னையும் ஏற்பா னுயினும்
மாசற் றவளென மதியார் உலகோர்.

மாலதி	ஆவியை விடும்போ தாயினும் ஆண்டவன்
பாதம் நினைப்பாய் ! பழியேன் உரைப்பாய்?

விஜயன்	வெட்கங் கெட்ட விபசாரீ, யுனை
வெட்டிப் புதைப்பினும் வெம்பவம் சாரா(து)
ஈசனும் மகிழ்ந்தெனை மன்னித் திடுவான்.

மரகதம்	அண்ணு ! துயரம் ஆற்றேன் இனியே !

விஜயன்	வீணே கண்ணீர் விட்டழ வேண்டாம்
பழிக்கஞ் சாஉன் இழி வென் நெஞ்சைப்
பிளந்தது ; கற்பும் இழந்தனை என்ற
சொல்லிப் போதெனைக் கொல்லும் கூர்வேல்
மாசிலா வீர மரணத் துயிலாழ்ந்
தீசன் அடியிணைக் கேகுவன் யானே !!! (இறக்கிருன்)

## திருக் கோவில் மண்டபம்.

(பெண்கள் கூட்டத்தில் மரகதமும் அவள் பின்னால் தீ மனப்பேயும்)

தீ மனப்பேய் மாரகதம், நீ சில மாதங் களுக்குமுன்
இருந்த நிலைமையை எண்ணிப் பாராய் !
பழியொடு பாவம் அறியாப் புனிதப்
பருவக் கன்னியாய் வருவதும் அம்பிகை
சந்நிதி நின்றுளம் பின்ன முருநிளங்
குழந்தைபோற் றுதிகள் புகன்றிடு வதும்போய்
மரகதம், இன்றுன் மனம்எதை நினைக்கும் ?
குறுகுறு நெஞ்சில்எக் குற்றம் முன்னெழும் ?
தூக்க மருந்தால் துயரொளித் துயிரும்
நீக்கிய அன்னையை நினைந்தோ துதிப்பாய்.
அன்றியிப் போதுன் அடிவயிற் றுயிர்க்கும்
ஒன்றிய துடிப்பின் உறுதுயர் நினைந்தோ ?

மரகதம் என்னையும் மீறி யென்மனத் தெழுமிவ்
வெண்ணங் களிலிருந் தெப்படித் தப்புவேன் ?

தீ மனப்பேய் பயங்கரப் பீதி பற்றிடும் உன்மனம்
தினந்தினம் கேட்கும் மணியின் நாதமும்
தாரையின் ஊதலும் தாளத் தொலியும்
ஊழிக் காலத் திடியென நடுக்கும்
முப்புறம் அழித்த முன்னாள் தீயென
இதயத் தெழுந்து இந்நாள் வருத்தும்.

மரகதம் எங்கே னும்போய் இருந்திடு வேனினி
இங்கிருந் தால்மூச் சடைத்திடும் எனக்கே
இதயமும் இளகி நீராய் நெகிழ்ந்திடும்
இப் பெருந் தூண்கள் எனைநெருக் குவன
கோபுரம் தலைமேல் சுமப்பவள் போல
ஏதோ என்னை இறுத்தி யமுக்கும்.

தீ மனப்பேய் ஓடி ஒளித்திட வோ நினைத் திட்டாய்
பாவமும் பழியும் காவலில் அடங்கா

காற்றும் கதிரும் தூற்றிடும் எங்கும்
அந்தோ ! உன் கதி ஆருக் தயரே !

மரகதம் அம்மா ! எனைக் கார் !!!

(மயங்கி விழுகிருள்)

கலியனும் வாஸ்துவும் விஜயனைக் கொன்ற பிறகு, தலை மறைவாகத் திரிந்து சட்டத்திற்குந் தப்பி மேற்கில் உள்ள மலை நாட்டுக்கு ஓடுகின்றனர். சன நடமாட்டமில்லாத காட்டு வழிகளில் இரவு முழுதும் நடந்து மலை நாட்டை அடைகின்றனர். சித்திரைத் தேய்பிறை அட்டமி இரவில், மலை வாழ் மக்கள், குறவரும், கள்ளரும் மந்திர மலைச் சிகரமாகிய பூநாச்சி யின் உச்சியில் கூடி விழாக் கொண்டாடுகின்றனர். மாலையில் மலையடி வாரத்திற்கு வந்து சேர்ந்து மலைமீதேறுகின்றனர்.

(ஆறுமுகவடி வேலவனே—என்ற சிந்து மெட்டு.)

கலியன் முல்லை மயங்கிய கொல்லை தாண்டி மலை
எல்லை யடைந்து விட்டோம்—இந்தப்
பள்ளம் வரும் வழி பற்றிச் சென்றால் மலைக்
கள்ளர் குகை யடைவோம்.

2. சேரும் இடம் வெகு தூரம், என்னுல் மலை
ஏற முடி யாது — எதிர்
மேட்டைக் கடக்க வோர் ஆட்டுக் கடாவேனும்
வேண்டுவேன் இப்போது.

3. வாரு கோ லேனும் வழித் துணைக் கொன்றை நீ
கோருவதே இல்லையா ? — இன்னும்
கால் நடையாகவே மேலும் நடப்ப துன்
காரியமோ சொல்லையா ?

வாஸ்து காலில் பலமுள்ள காலத்தில் ஊர்தி யேன்
கைத்தடி போதாதா ? — வழி
காட்டும் பலவிதக் காட்சியைக் காணுமல்
ஓட்டத்தில் ஓடுவதா ?

2. வான மளாவி வளர் மரங்கள் செறி
கானகத் தூடேகி — மயில்
ஆடும்மேடை தவழ்ந்தோடி வரும்குளிர்
ஓடைகளில் மூழ்கி.

3 நானா முடித்துப் பின் மோனத்திருந் துயர்
ஞானம் பெற விழையும் — மனத்
தீன உணர்ச்சிகள் இல்லா தொழிந்திடச்
சீலப் பயிர் தழையும்.

கலியன் உயர்வே உள்ளுவ துன் மனத் தியற்கை
துயர்தரு நினைவே, தோன்றுமென் னுளத்தில்
வனத்துட் புகுமுன் வருமதன் வாடையும்
பனியும் இருளும் பயந்தரும் மனத்துள்.
கானம் போர்த்த கனை யிருள் கிழிக்கும்
திறமிலா தெழுமித் தேய் நிலவின் சிறு
உரனிலா ஒளி நமக் குறு துணை யாமோ ?
தேய் மதியோ வசப் பேயிருள் போக்கும்
எடுத் தடி வைப்பின் எதிர் உள மரம், கல்
ஏதா கினுமொன் றிடுத்திடு மென்றே
அடுத்தடி வைக்க அஞ்சும் கால்கள்
கள்ளிரு ளில்வழி காட்டிச் செல்லக்
கொள்ளிவாய்ப் பேயைக் கூப்பிடு வேன் துணை
ஆ ! அதோ !! எரிகிறது, அங்கொரு தீக்கால்
வா, வா, நண்பா, வழி விளக் கிடுவாய்
விரைய் அங்கேன் வெந்தழி கின்றாய் ?
சேணுயர் வெற்றின் சிகரம் சேர்ந்திட
விழைந்தனம் யாமே, விளக்குக வழி நீ.

தீக்கால் வறிதே ஒளிவிடும் வழக்கம் விடுத்துச்
சிறிதே னும் நேர் வழியில் சென்றிட
ஆர்வமிக் குடையேன் ஆயினும் ஒன்றைப்
பற்றி விடாது சுற்றிச் சுழன்று
வளைந்து வளைந்து வறிதே எரி விடும்
பழக்கம் இன்னும் மறக்க முடியலை !

கலியன் ஓ ! ஓ ! மனிதரைப் போல்நடந் திடவோ
நீயும் நினைத்தாய் ! சீ யென் சொற் கேள் ?
இன்றிர வொரு நாள் நேர் வழி நடந்திடு
இன்றேல் இக் கணம் கொன்றொழிப் பேன் உனை

தீக்கால் எதுவும் செயலாம், இது உன் எல்லை,
எனக்கெசமான் நீ, என்பதும் அறிவேன்
ஆயினும் ஓர் சொல் அறைகுவன் கேளாய் !
இன்றிரவிம் மலை எங்கும் சூழ்ந்துள
மந்திர வலியால் மயங்கிச் சுழலும்
விண் வீழ் கொள்ளியை விளக்காய்க் கொண்டு
தூமகேதுவே துணையாய் வரினும்
இன்றிர வில் நாம் திசை கெட் டலைந்து
திரிவது நிச்சயம், திகைப்பதில் வியப்பிலை.

**வாஸ்து, கலியன், தீக்கால் மூவரும் காட்டின் வழியே மந்திர மலையின் உச்சி நோக்கிச் செல்கின்றனர். ஒருவர் மாற்றி ஒருவர் பாடிக்கொண்டு போகின்றனர்.**

“சீர்வளர் பசுந் தோகை மயிலான்”—என்ற சிந்து மெட்டு.

வாஸ்து கார் இருளில் நேர் வழியைக் காட்டு—எம்மைக்
கடிதின் வரை முடியில் உள வெளி யதனிற் கூட்டு,
சோர்வு தரும் மடியதனை ஓட்டு — கொடிய
சொற்பன மெனத் தொடரும் வெற்பின் வினை
மாற்று (கார்)

கலியன் பார்க்கு மிட மெங்கு முயர் குன்றின் — முடிகள்
வேற்படையும் ஈட்டி யெனத் தோற்றிடு மேல் நின்று
தாக்குவன போல எழு கின்ற — சிலவை
தாழ்ந்து நிலம் ஆழ்ந்த தென வீழ்ந்திடுவ சிலவே.
(கார்)

வாஸ்து என்று முலவா துலவும் யாறு — இனிய
கந்த மலர் சிந்து துறை வந்து மண நாறும்
குன்று தரு தீங்கனியின் சாறு — கொண்டு
பொன்னருவி மின்னி வரும் இன்னிசைகள் பாடி
(கார்)

கலியன் இந்துள மசோகு மகிழ் வேங்கை — சுருளி
சந்தன மகிற்புரசு சிந்துரமுங் கோங்கும்
அந்தர முலாவி வரும் ஓங்கி — தந்திக்
கம்ப மென வெங்கு நிறைகின்ற வனந் தாண்டி (கார்)

வாஸ்து காட்டு வழி காட்டும் நனியச்சம் — களிறு
கரடி புலி யிரலை யிவை குரல் கேட்பின் அச்சம்
கூட்டி இறை புள்ளின மோரா லட்சம் — கூவக்
கூடி யொரு கோடி யெலி ஓடும் வழியெங்கும் (கார்)

கலியன் கரை யருகில் வேர்கள் செலும் காட்சி பிணையும்
அரவு பல விரவி வரு வதனை நிகர் மாட்சி
அரிவையர்கள் தரு காதல் ஆட்சி — அன்று
ஆடி மகிழ் கூடி யதை மீள நினைவூட்டும் (கார்)

வாஸ்து சொல்லும் தோழரே ! தொடர்ந்து நாம் மேலே
செல்லுகின் றோமா ? அன்றி அலமந்து
நின்ற இடத்தே நிற்கின் றோமா ?
பாறையும் தருவும் பரிகசிப் பனபோற்
சூறைக் காற்றில் கோரணி காட்டும்
எரி மீன் இடம் பெயர்ந் தெங்கும் திரியும்.

கலியன் உயர்ந்த இக் குன்றின் உச்சிவந் துற்றோம்
கையிற் பிடித்திடிப் பையைச் சிறிது
இரணிய விழவின் பெருமிதம் முற்றும்
இங்கிருந் தெளிதிற் கண்டிடு வோம்நாம்.

வாஸ்து விடியற் காலையில் கீழ்த்திசை வானம்
ஒளி விடல் போன்று பொலிவுறும் சாரல்
மடு விருந் தோங்கி வளரும் பேர் ஒளி
பொன்னைப் பொடித்துத் தூவிய தென்ன
மின்னிக் கால் விடும் விகசிதம் பாராய்.
இடையிற் றவழும் மேகத் திரளை
ஊடுரு விச்செலும் ஒளிக்கிர ணங்கள்
எதிரே காணும் மதிற் சுவர் பட்டப்
பகலிது வென்னத் தகதக வென்றிடும்.

கலியன் இரணியன் கொலுவிற் றிருக்குமின் றிரவில்
அரண்மனை முற்றும் அலங்கரித் திடுவார்
பார்த்திட நீ வெகு பாக்கியம் செய்தாய்
இரணியன் இன்னும் இறந்திட வில்லை.
பிணத்தைக் குவித்துப் பணத்தைப் பெருக்கி

அன்றுபோ லின்றும் ஆள்கிருன் புவியை
விளக்கை விரும்பும் விட்டில்கள் போல
விழாக்கொண் டாட விரைகிருர் பலரும்
விருந்துணப் போவார் வேகம் பாராய்!

வாஸ்து கடும்புயல் செய்யும் கொடுமை யென் சொல்வேன்
திடுமெனக் கிளம்பிய சுழல்கால் எந்தன்
கழுத்தை முறித்திடப் பார்த்தது கணமுன்

கலியன் கெட்டியாய்ப் பாறையைப் பற்றிக் கொள் பிடி
விட்டிடில் கீழே வீழ்வாய் மடுவில்
பனித்திரை யாலிருள் பன் மடங் கதிகமாம்
சூரு வளியின் கோரம் பாராய்
செச்சை மீ தெங்கும் பச்சை விதானம்
விரித்துப் பிடித்துயர் வியன் மர மனைத்தும்
முறிந்தொரு நொடியில் முடி சவிழ்ந் திடுமே,
சீர் செழு பழ மரம் வே ரொடு சாயும்
அடலுள நெடு மரம் பட படென் ருெடியும்
இலேயும், கிளேயும் அலேயும் காற்றில்
கூட்டிற் பார்ப்புறும் கொடுமையை ஆற்ருது
அஞ்சிறைப் பறவைகள் நெஞ்சம் குமுறிடும்
ஆந்தையும் கூகையும் அலறிக் கீச்சிடும்
குஞ்சொடு கூட்டையும் கூட்டொடு கொம்பையும்
பஞ்செனச் சுழற்றும் பாழுங் காற்று
கடு வளி அடவியைப் படு களமாக்கிக்
குணலேயிட் டேகும் கோரம் பாராய் !
எங்கிருந் தோ வரும் எஞ்ஞலி யிரவில்
மங்கிச் சேய்மையிற் கேட்ட திப்போது
அண்மையிற் கேட்டிடும், அபூர்வக் குரலிது !

## சூனியக்காரிகளின் கூட்டப் பாட்டு.

1. மந்திர வாதிகள் யாவரும் இன்பமாய்
வந்திடுவார் மலேக் கின்றிரவில்—பல
குன்று கணின்றுந் திரள் திரளாய்

2. கட்டைகள் முற்றிய வெட்டுக் காட்டில் வளர்
பச்சைக் கதிர் கொய்ய ஓடோடி—வரும்
மொட்டைத் தலைகள் பல கூடி

3. ஆட்டுக்கடாக்களில் நாட்ட முற்றே யொரு
காட்டுக் கறுப்பணன் காத்திருப்பான் — அந்தக்
கூட்டத்தில் எத்தனை கோத்திரம் பார்

சிறு குரல்கள் வறட்டுப் பன்றி மேல் கிழட்டுச் சண்டிகை
தனிமையில் பவனி வருவதைப் பாரீர்

வேறு குரல் சண்டிகைத் தாயும் பன்றியும் வாழ்க!
வருக! வருக! வழி விடும் இவர்க்கு
இவர் பின் எல்லாக் கிழவியும் வருவார்

ஒரு குரல் எவ் வழி வந்தாய்?

மற்றொரு குரல் செவ்வல்பதி வழி.
வரும் போதங் கொரு மரத்துப் பொந்தில்
ஆந்தையைப் பார்த்தேன் — அது எனைத் திரும்பக்
குருட்டுக் கண் கொடு உருட்டிப் பார்த்தது.

ஒரு குரல் பேயுடன் போவாய்? ஏனிவ் வவசரம்?

வேறு குரல் பின்னால் ஒருத்தி பிடித் தெனைத் தள்ளினாள்
பண்ணிய புண்ணைப் பார் அதன் கோரம்

### தூளியக்காரிகளின் கூட்டப் பாட்டு

1. கூட்டிப் பெருக்கும் துடைப்பக்கட்டை அதைக்
குத்தி யெடுக்கும் கலவைக் கோலாம்—இன்னும்
மெத்த இருக்குது போகும் வழி.

2 ஆட்டமும் பாட்டமும் இத்தனை யேன்?—அந்தக்
காட்டில் இறந்தது கைக்குழந்தை — அதை
ஊட்டி வளர்த்தவள் நெஞ்சுடைந்தாள்

### (மந்திரவாதிகளில் சிலர்)

1. வீட்டைத்தலை மேற் சுமந்து செல்லும் நத்தைப்
பூச்சியைப் போல நகர்ந்திடுவோம் நம(து)
ஆச்சிகள் செல்லும் வேகத்தையும் பார்

2. நாட்டமுற்றே நரகத்திற்கென்றால் நம்மைக்
காட்டிலும் சீக்கிரம் சேர்ந்திடுவார் — பெண்கள்
விட்டிலும் தானவர் வெற்றி கொள்வார்.

(மந்திரவாதிகளில் மற்ற பாதி)

1. அப்படி நாங்கள் நினைப்பதில்லை பெண்கள்
எப்படி வேண்டிலும் போகட்டுமே—தலை
குப்புறத் தானும் நடக்கட்டுமே

2. செப்புமோராயிரம் சீரடிகள் முன்னே
சென்றாலும் ஓரடியில் தாவி—அவர்
முன்னாலே சேர்ந்திடுவோம் மேவி.

மேலிருந்து குரல்கள் வாரும், வாரும், மேலே வாரும்
வழுக்குப் பாறைக் காரரே வாரும்

கீழிருந்து குரல்கள் மேலே வரவே விழைகின்றோம் நாம்
பழியும் பாவமும் கீழே கழித்தோம்

மந்திரவாதிகள் பாடுகின்றனர்

1. தேய்மதி மேகத் திரைக்குள் ஒளித்தது
தேசு குறைந்திடும் மீனினங்கள் — அலை
வீசும் காற்றும் நிலை நின்றிடுமே

2. ஓயா தழுன்றிடும் பாடகர்கள் மலை
மீதெங்கும் சுற்றிப் பறந்திடுவார் — உலை
ஊதும் சுடு சுரம் பாடுகிறார்.

கீழிருந்து ஒரு குரல் நில்லும், நில்லும், செல்லாதீர் மேல்

(மேலிருந்து) குரல் கீழிருந்தோ வரும் தீனக் குரலிது ?

(கீழிருந்து) குரல் என்னையும் கூட்டிச் செல்வீர் இன்று
இனத்துடன் வாழ விரும்புகின்றேன் நான்
முன்னூறாண்டுகள் முயன்றேன் வீணே !
இன்னும் முடி தனை யடைய முடியலை

(மேலிருந்து பாடகர் கூட்டம் பாடுகிறது)

1. குன்றின் மேலேறத் துடைப்பக்கட்டை க்வைக்
கோலும் கடாவும் துணையாமே — இவை
யாவும் எளிதிற் கிடையாவோ ?

2. இன்றிரவில் மலை ஏறி வராதவள்
ஒன்றுக்குமே உதவாள் இனிமேல் — மலை
என்றும் ஏற முடியாதவளால்.

3. குன்றுகள் ஒவ்வொன்றின் மேலும் பறந்த பின்
கீழ் இறங்கிப் படை கூட்டிடுவீர் — தரை
மீதும் உங்கள் விஞ்சை காட்டிடுவீர்.

மந்திரவாதிகள் கூட்டம் கூட்டமாய் மேலிருந்து
சம வெளியில் இறங்குகின்றனர்)

கலியன் மெய்யாய் இது ஒரு விந்தைக் கூட்டமே !
பேயொடு மாறு வேயம் கொண்டுள
மாயாவாதிகள் ஆயிரக் கணக்கில்
கூடினர் இருளில் குலவுதல் பாராய்.
ஒருவரை யொருவர் நெருக்கித் தள்ளுவர்
எழுவார் விழுவார், இறுகத் தழுவுவர்.
கும்மி யடித்துக் குதித்துப் பாடுவர்,
இப் பெருங் குப்பலுள் தப்பினால் மறுபடி
எதிர்ப்படல் அவ்வள வெளிதல ஐயா !
எங்கே இருக்கிறீர் ?

வாஸ்து சிறிது தூரத்திலிருந்து இங்கே பின்னால்,

கலியன் இதற்குள் இத்தனை பின்னால் போவதோ ?
நானே தலைவனாய் நடிப்பேன் இங்கும்,
என்னரும் தோழரே ! சன்னிதி விலகுவீர்
சஞ்சலப் பிரபுவைத் தரிசித் திடுவீர்
பேரா சிரியரே ! பிடித்திடும் கையை
நீராத் தலைவலி தரும் இவ் விரைச்சல்
விரைவில் செல்வோம் வெளியே ஒளிவிடும்
புதர் என் மனத்தைக் கவர்ந்த தப்போதே,
வாரும் போவோம், தூறும் பக்கமே !

வாஸ்து எதிரிடைச் சனியே ! எழு ! எழு ! போவோம்.
சித்திரைத் திருநாள் இத்திரு மலைக்கு நாம்

வந்திடத் துணிந்ததும், வந்த பின் இருவரும்
தனித்தோர் இடத்தில் தங்க நினைப்பதும்
எத்துணை நேர்த்தி ! யார்க்கிது வாய்க்கும் ?

கலியன் விதவித மாய்ஒளி விடும்தீப் பொறிகள்
அதனருகில்சிலர் அளவளா வுதல்பார் !
மிகச்சில ரிடையில் எவர்தனித் திருப்பார் ?

வாஸ்து மேலே இருந்திட விழைவேன் எனினும்
தீயும் புகையும் சூழ்ந்தன முன்பே
பேயுடன் பழகப் பிரியம் கொண்டவர்
எத்தனை லட்சம் இருப்பார் இங்கே ?
எத்தனை சிக்கல்கள் எடுபடும் இன்று !

கலியன் எத்தனை புதிதாய் ஏற்பட் டிடுமோ ?
புறத்தே உலகம் பரந்து கெடுக !
அகத்தே அமைதியுற் றடைவோம் இன்பம்.
பெரிய உலகின் விரிந்த எல்லையுள்
சிறிய உலகுகள் பலபல படைத்தல்
பண்டு தொட்டே வரும் பழக்கம் — இங்குள
பெண்டிரைப் பார் — இளம் பெண்கள் எல்லோரும்
ஆடை யிலாதம் மணமாய்த் திரிவர்
மூப்புடைப் பெண்களே மேனி மறைத்தனர்.
இவரிடைச் சற்று மரியா தையாக
என்பொருட் டேனும் நடப்பா யாக !
பொறுமையோ டிருந்தால் போகப் போக
அருமைக் காட்சிகள் அநேகம் பார்க்கலாம்.
வாத்தியம் ஒலித்திட வாரம் பித்தது
போவோம் உள்ளே, போய்உனைப் பலர்க்கும்
அறிமுகஞ் செய்து வைத்திடு வேன்நான்.
கூட்டம் பார் ! இதன் கோடியில் நிற்பவர்
கட் புலன் ஆகா ! அத்தனை நீளம் !
சோடி சோடியாய் நூற்றுக் கணக்கில்
கூடிப் பாடிக் குதித் தெக் களிக்கும்
இத்தகைக் குழுவை எங்கு நீ காண்பாய் ?

**வாஸ்து** இவரிடம் யார்எனத் தெரிவிப் பாய் உனை ?

**கலியன்** இவர்எனை நன்ருய் அறிவார். அன்றியும்
இன்றிர வென்சுய உருவுடன் திரிவேன்
பிளவுறும் அடி பார்த் துளவறிந் திடுவார்
வாடை யறிந்து வந்திடும் இதற்குள்
கூடை சுமக்கும் கூனல் நத்தை
அரிவையர் பலர்க்குனை அறிமுகப் படுத்தி
பிரியமாய் உன்னுடன் பழகச் செய்வேன்

(வழியில் வயோதிகர்கள் சிலர் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவர்களைப் பார்த்து)

களியாட் டங்களில் கலந்து கொள்ளாமல்
பிரிந்து தனிமையில் பெரியவ ரே நீர் !
பேதுற் றிருப்பதேன் ? யாது உம் கவலை ?
வீட்டிலெப் போதும் விசாரப் படல் சரி,
இங்கும் என் இப்படி மங்கிக் கிடப்பீர் ?

**கிழட்டுச் சேனாபதி** நாட்டிற் குழைத்தெவர் நலம்பெற் றிடுவார் ?
உயிரைக் கொடுத்து உழைத்திடினும் அதை
நினைத்திட மாட்டார், நேயமும் கொள்ளார்,
இளமையின் நலமுள கொழுநனைத் தேடும்
பெண்களைப் போல் பொது மக்களும் புதுப்புதுத்
தலைவரைத் தேடி அலைவார் அவர் பின்.

**மூப்புடை அமைச்சன்** கலி மிக முற்றிக் காலமுங் கெட்டது !
நெறியலா நெறியே நடப்பார் இந்நாள்
அறவழியே நாம் நடந்தோம் அந்நாள்
பண்டைக் காலம் பசும் பொற்காலம்
முந்தையோர் வழியே முற்றும் சரியென
எண்ணுபவன் நான், ஏலேன் புது வழி.

**புதுப் பணக்காரன்** மூடரும் இந்நாள் தேடுவர் பெரு நிதி
மடமையை அந்நாள் மதித்திட மாட்டார்.
அறவழி யின்றிப் பிறவழி யறியோம்
மாறிக் கொண்டே வரும் இவ்வுலகில்
எநிலை யெனதையும் நினைப்பதற் கில்லை !

முது புலவர் நல்லறி வூட்டும் நூல்களைக் கற்பவர்
இல்லையிந் நாளில் ! இலக்கண வரம்பிலா
ஏழைக் கவிதைகள் எழுதித் தள்ளுவர்
இதற்கே இவர் கொளும் செருக்கை யென் சொல்வது
இந் நாள் இளைஞர்க்கு இணை அவரே தான்.

(கலியன் திடீரெனக் குடு குடு கிழவனாக மாறி.......)

கலியன் மந்திர கிரிக்கினி வந்திடு வேனோ
இதுவே எந்தன் கடைசி யாத்திரை
ஊழிக் காலம்வந் துற்றது போலும்
என் விளக்கில் நெய் தீர்ந்திடும் அதனால்
எல்லோர் விளக்கும் எரியா தென்பேன்

(வழியில் கடை வைத்து விற்கும் ஒரு சூனியக்காரி, கலியன், வாஸ்து இருவரைப் பார்த்து)

சூனியக் கிழவி ஐயாமாரே ! அவசியம் வருவீர்
அற்புதச் சரக்குகள் பற்பல பாரும்
பார்த்திடில் விட்டுப் போகவேமாட்டீர்
விட்டால் மறுபடி கிட்டுமோ இவைகள் ?
ஒவ்வொரு பொருளும் உலகோர்க்குப் பெரும்
துன்பம் கொடுத்தபின் இங்கு வந்திருக்கும் ;
குருதியுட் குளியாக் குந்தம் இங்கில்லை,
நல்ல உடம்பை நலிவுசெய் திடும்வாள்
வஞ்சக மாய்த்தரும் நஞ்சைமுன் கொண்ட
கிண்ணிகள் இங்கே எண்ணிறந் தன உள
கன்னி யொருத்தியின் கருத்தை யழித்தவள்
கற்பைப் பணயமாய்ப் பெற்றிடும் இங்குள
பொற்புறு நகையொவ் வொன்றும், உண்மையில் ;
காதலர்ப் பிணைத்த கயிறறு கத்தி
ஒன்றோர் பின்னின் றூறுசெய் கைவாள்
இன்னும் இவை போல் இருக்கும் பலப்பல,

கலியன் இவையெலாம் இந்நாள் ஏலாச் சரக்குகள்
சென்றன முடிந்திடும், முடிந்தன சென்றிடும்
இன்றிவை யெல்லாம் செல்லாக் காசுகள்

புதியவை யேதாயினும் உளவோ சொல்,
புதுமைப் பொருளே போற்றுவம் நாங்கள்

வாஸ்து — இவர்களோ டின்னும் இருந்திட வேண்டுமோ ?
இதுவோ திருவிழா ? எனில் இனி வேண்டேன்.

கலியன் — மேலும் மேலும் மிகுத்திடும் கூட்டம்
முன் செல முயன்றால் பின் தளப் படுகிறோம்

வாஸ்து (ஒரு பெண்ணைச் சுட்டி) — யார் அவள் கூறாய் ?

கலியன் — பார் ! பார் ! குறிப்பாய்,
மாதிவள் தான்மன மோகினி யென்பவள்

வாஸ்து — மனமோ இனியா ? வனமோ இனியா ? ?

கலியன் — எதுவாயினும் சரி இரண்டும் பொருந்தும்
ஆதி மனிதனின் காதற் கிழத்தி
என்றும் குன்றா எழிலொடு காண்பவர்
நெஞ்சைக் குடித்து நஞ்சைத் தருபவள்
இவள்தன் சுரிகுழற் குவமையே துலகில்,
குழற்செறி விற்போய் புகுந்தவன் திரும்பி
வருவது கடினம், மயங்கிட வேண்டாம்.

வாஸ்து — அங்கோர் கிழவியும் குமரியும் கூடித்
தங்கினர், ஆடித் தளர்ந்தனர் போலும்,

கலியன் — ஓய்வோ தளர்வோ இன்றிலை யெவர்க்கும்
புதியதோ ராட்டம் தொடங்கினர் பின்னும்
நாமும் போய் இதிற் கலந்துகொள் வோம் வா !

(வாஸ்து குமரியுடன் கை கோத்து பாடி ஆடுகிறான்)

வாஸ்து — முன்னொரு நாள் இளம் பிள்ளை கண்டேன் — அதில்
முற்றிய காய்கள் இரண்டு கண்டேன்
தின்ன வேண்டும் என ஆசை கொண்டேன் — உடன்
தேடி யிரண்டையும் பற்றிக் கொண்டேன்.

ஆடும் குமரி — பழம் தின்ன வேண்டிடும் உன் ஆசை — இது
பண்டு தொட்டே யுள தெல்லோர்க்கும்

பழங்கள் வளர்ந்திடும் என்னிடமும் — அதைப்
பற்றக் கொடுப்பதும் என் ஆசை.

(அருகே கலியன் கிழவியுடன் ஆடிக்கொண்டு பாடுகிருன்)

**கலியன்** நாளும் கண்டேன் ஒரு வற்றல் மரம் — அதன்
நட்ட நடுவில் ஓர் பொத்தல் உண்டே
கோணற் கிழ மரம் என்ருலும் — அதைக்
கொண்டு மகிழ்ந்திடுவேன் நாளும்.

**கிழவி** ஆண்டகை உன்னை நான் கண்டு கொண்டேன் — இனி
அன்புடன் என்னை நீர் ஆண்டு கொள்வீர்
வேண்டு மின்பம் உடன் பெற்றிடுவோம் — அந்த
வெறியாட்டாளன் வருவதன் முன் !

**வெறி (சாமி) யாடி** கூட்டஞ் சேர்ந்து கொட்டமடிக்கும்
நாசக் கும்பலே ! வேசரிக் கூட்டமே
வெட்கமில்லாமல் எக்களித் திடுவீர் ?
பேய்க்குக் கால்இலே யென்ற என் சொல்லைப்
பொய்யாக் குவீரோ ! புவி மேல் மனிதரைப்
போலக் கால் தொட நிற்பீர் இருப்பீர்
ஓலமிட் டாடுவீர், ஒழித்திடு வேன் பார்

**குமரி (ஆடிக் கொண்டே** கிராதக னுக்கிவண் காரியம் யாதோ ?

**வாஸ்து** ஓ இவன் எங்கும் சுற்றித் திரிந்து
மாபெரு ஞானி போல் வாயுரை சொல்லி
எவ்வெவர் ஆட்டையும் பாட்டையும் இழித்து
யாவரும் தன்னையே வணங்கிட வேண்டுவான்.
வணங்கா தாரை வசை யுரைத் திடுவான்

**வெறியாடி** இன்னுமா இருக்கிறீர ! என்னே ஆணவம் !
சொன்னதைச் சற்றும் கேட்டிட மாட்டீர்
தலைகாட் டாமல் தொலைந்திடு வீர் நீர்
உலகத் திருளை ஓட்டிவிட்டோம் நாம்,
அலகிலாச் சோதியை நிலவிடச் செய்தோம்
ஆயினும் பேய்க்குலம் அடங்குவ தில்லை,
ஆ ! மறு படியும் ஆடத் துணிகிறீர் !
வீண் என் முயற்சி ! வீழ்ந்ததென் பெருமை !!

ஆடும் குமரி — இனியும் எங்களைத் துனி செய்ய வேண்டாம்

வெறியாடி — துன் மதிப் பேய்களே ! உண்மையைக் கேளும்
என் சொலைக் கேட்பவர் எவரும் இங்கிலர்
என்றால் உங்களை ஓட்டவும் முடியலை
என்னிடத் திருந்த சக்தியும் போயது
இனி உம்முகத்தில் விழித்திட மாட்டேன்

(மந்திரவாதிகள் தொடர்ந்து துளியாட்டயர்கின்றனர்......)
(வெறியாடுபவன் அவ்விடம் விட்டுப் போகின்றான்)

இன்றைக் கேதோ ஒன்றும் பலிக்கலை
எதிலும் தோல்வி, எனினும் என் வழி
மேலும் தொடர்ந்து நடப்பது வே சரி
இறுதியில் இவர்களை முற்றிலும் வெல்வேன்.

(வெறியாடி மறைகிறான்...)

கலியன் — பேய் இனிச் சேற்றுக் குப்பையில் படிந்து
ஆத்திரம் தீரச் சேற்றைப் பூசுவான்
அலவனும் அட்டையும் குலவிடும் இவனுடன்
அவைகளின் அரிப்பால் அமைதிபெற் றிடுவான்

(பெண்ணுடன் ஆடலை விட்டு நீங்கித் தனிமையில் நின்ற
வாஸ்துவைப் பார்த்து)

கலியன் — ஏன் விட் டாய் இளம் பெண்ணை இதற்குள்
வேண்டிய படி யெலாம் ஆடியும் பாடியும்
பரவசப் படுத்திய பாவையைச் சலுதியில்
நீங்கித் தனியே சோர்ப் பி யிருப்பதேன் ?

வாஸ்து — ஆ ! அப் பெண்ணின் வாய்க்குள் ளிருந்து
பாட்டுடன் குதித்து வந்ததோர் செவ்வெலி

கலியன் — பாதக மில்லை, செவ்வெலி தானே
இதற்கோ இன்பக் கேணியை வெறுத்தாய்
எக்களித் திடும்போ தெவரே அற்பக்
குற்றம் பார்த்துக் கோபித் திடுவார்?

வாஸ்து — அதன் பின் கண்டேன் அதிசய மொன்றை !

கலியன் — எதைக் கண்டாய், அதில் என்ன அதிசயம் ?

வாஸ்து
கலியா பார் ! அக் கடைசியில் ஒரு பெண்
தனியே நிற்கிறாள் தவித்துப் பார்க்கிறாள்
காலில் விலங்கோ, களைப்பின் மிகுதியோ ?
விழுந்திடு வாள் போல் எழுந்தாள் மேலே
தளர்ந்த நடையுடன் தள்ளா டிடுவாள்
என்னையே பார்க்குமப் பார்வையின் சோகம்
இரும்பையும் உருக்கும், யாரிவள் அறிவாய் ?
மரகதம் என்றே மதிக்கும் என்னுளம்-

கலியன்
அதைப்பா ராதே ! அதுவெறும் காட்சி
உண்மையாய் அங்கே ஒருவரும் இல்லை
உன்மனம் காட்டும் உருவெளித் தோற்றமே
மாயா ஜாலத் தால்மலை வாசிகள்
மதத்துச் சமைத்த மந்திரப் படிவம்
நன்றல இதனைப் பார்த்திடல் இன்று.
இமையா நாட்டத் திதன் முகம் புதிதாய்க்
காண்பவர் நெஞ்சம் கல்லாய்ச் சமைத்திடும்

வாஸ்து
உயிரிலா உடம்பின் ஒளியிலாக் கண்களே !
இறந்ததும் பிணத்தின் கண்களை மூட
எவரும் அருகே இருந்திலர் போலும்
கரவிலா தெல்லாம் காதலுக் களித் தென்
மனத்துட் குடி கொளும் மரகதமே அவள் !

கலியன்
மடப்பயல் நீயே ! மனத்துள் வரித்த
மங்கையின் உருவெலாம் மாய்கையிற் காட்டும்
மந்திரப் படிவம் என்பதை மறந்தாய்

வாஸ்து
என்னே இன்பம் ! என்னே துன்பம்
அன்பிற் கேங்கி அழைக்கு மவ் வேழைப்
பெண்ணின் தாபப் பார்வையி லிருந்தென்
கண்ணை யகற்றிட முடிகிற தில்லை.
ஆ ! அவ் வழகிய கழுத்திற் காணும்
மெல்லிய வரையெனும் வெட்டுவாய் ஒன்று
சிவந்து தெரியும் குருதியோ வடியும் !

கலியன் இதுபோ தெனக்கும் தெரிகிற தப்படி
தனயன் வெட்டிய தலையைக் கரங்களில்
தாங்கும் ரேணுகை, சமதக் கினி மனை
அவளைப் பற்றி நீ அறிந்ததே இலையோ ?
கற்பனைக் காட்சியே காண விழைந்தனை
அப்படி யாமெனில் அருகே நடைபெறும்
புது வகைக் கூத்தைப் போய்ப் பார்த் திடுவோம்
நம் முன் தெரிவதே நாடக மண்டபம்.

(நாடக மண்டபத்தின் வாசலில் நின்ற திரை தூக்கியைப் பார்த்து......)

[திரைதூக்கி] என்ன கதையோ இன்று நடப்பது ?
ஒவ்வொரு நாளும் புதுப்புது நாடகம்
ஏழு நாட் தொடர்ந்து நடப்பது வழக்கம்
இன்றே கடைசி, எனினும் இதுவரை
யாரும் நடிக்கா நவீனம், இதனை
எழுதிய புலவனும், நடிப்பவர் பலரும்
கலைக்குப் புதியவர் ; ஆயினும் நிறையக்
கலை யபிமானம் படைத்தவர் எனைப்போல்;
திரை தூக் கும்தொழில் எனக்களித் துள்ளார்.

கலியன் திருநெல் வேலிக் காரரோ நீவிர் ?
அருமையாய் இருக்கும் அவர்கள் நடிப்பு

கலியனும் வாஸ்துவும் நாடக மண்டபத்தினுட் சென்று அங்கு நிகழ்வதைக் கவனிக்கின்றனர்.

நாடக மேடையில் கூத்தரும், புலவரும் தோன்றி சம்பாஷிக்கின்றனர்.

கூத்தர் வாரும் புலவரே ! வணக்கம். உங்கள்
வருகை எமக்குத் தருக இன்பம்.

புலவர் நானா விதம் பயில் கூத்தரே ! என்ன
நாடகம் இன்று நடத்துதீர் ?
ஞானதிக்கம் பெற்ற பண்டிதர் — பலர்
நாடி யடைந்துளார் கண்டிட !

கூத்தர் தே மதுரக்கவி ராயரே ! இன்று
தேர்ந்து நடித்திடும் நாடகம்.
பாமரர் பண்டிதர் யாவரும் — நன்கு
பார்த்துப் பயன் பெற லாகுமே.

புலவர் அப்படியாயின் அந் நாடகம் — என்ன
செப்பிடும் ? யாரதைச் செய்தனர் ?

கூத்தர் ஒப்புயர் வில்லாத மாகவி — காளி
தாசரின் உன்னத நாடகம்
மற்றதன் மாண்பை ஜர்மன் கவி — கதே
வாக்கினிற் கூறுவன் கேண் மினோ ?

" இளமையின் புது மலர் வேண்டுமா ? — வய
தேறி முதிர் கனி வேண்டுமா ?
வளமை தரும் உயிர் மாண்புற — இன்ப
வாரியில் மூழ்கிட வேண்டுமா ?
மண்ணுலகத்தையும் விண்ணையும் — ஒரு
வார்த்தையில் காட்டிட வேண்டுமா ?
எனில்
எண்ணுக சாகுந்தலம் எனும் — சொல்லில்
யாவும் அடங்கிடும் என்பன் நான் "
இத்தகை மாண்புள நாடகம் — தன்னை
இன்று நடத்துவ தாயுளோம்.

புலவர் மெத்த மகிழ்ந்தனம் கூத்தரே — இனி
வீணாக நேரத்தைப் போக்காமல் — உங்கள்
வித்தை யனைத்தையும் காட்டுவீர் — எங்கள்
வித்தகன் வாசனும் பார்த்திட

## சகுந்தலை நாடகம்.

### காட்சி 1.

(மானைத் துரத்திக்கொண்டு ரதத்திலேறி துஷ்யந்தனும் சாரதியும் வருகின்றனர்)

சாரதி வாழி ! அரசே ! வில்லும் கையுமாக
மானை நோக்கி நிற்கின்ற தங்களைப் பார்க்கும்

போது, அந்தச் சிவபெருமானே பிநாக
பாணியாகக் காட்சி யளிப்பது போன்றிருக்கிறது.

துஷ்யந்தன் சாரதி, இந்த மான் நம்மை எவ்வளவு
தூரம் அலைய வைத்து விட்டது ! அதோ பார் !
இப்பொழுது அதுதன் .—
அழகிய கழுத்தை வளைத்துப் பின்னால்
ரதத்தைப் பார்ப்பதைப்பார் !
அம்பு விழு மென் றஞ்சித் துடிக்கும்
அதனுடல் மெலிவதைப் பார் !
வழியில் நெடுக வாயில் புல்லும்
நழுவக் குதித் தோடும்
வாயு வேகமாகச் செல்லும்
வானில் பறப்பது போல்
ஆஹா ! என்ன ஆச்சரியம் ! இவ்வளவு நெருங்கி
வந்தும் நிமிடத்தில் மறைந்து விட்டதே !

சாரதி அரசே ! இதுவரை நாம் வந்த வழி மேடும்
பள்ளமு மாக இருந்ததால், நான் கடிவாளத்தை
இழுத்துப் பிடித்திருந்தேன், அதனால் மான் சற்று
அப்பால் போய் விட்டது, இப்போது சமநிலம் வந்து
விட்டோம், இனி விரைவில் மானைப் பார்ப்போம்

துஷ்யந்தன் ஓஹோ ! அப்படியா ? ஆனால் இனிக்
கடிவாளத்தைத் தளர்த்திப் பிடி.

சாரதி அப்படியே செய்கிறேன், அரசே
கடிவாளம் சற்று தளர்ந்ததும் குதிரைகள்
போகிற வேகத்தைப் பாருங்கள், காதுகளை
நிமிர்த்தி முன் கால்களை உயர்த்தித் தாவிச்
செல்வதையும், கால் பட்டெழும் தூசி மேனியில்
படு முன் விரைந்து பறப்பதையும் பாருங்கள்.

துஷ்யந்தன் ஆ ! ஆ ! அதோ மான் தெரிகிறதே ! நம் குதிரைகள்.
[“எண்ணி யெண்ணிப் பார்க்கையில்” என்ற சந்தம்]
செல்லு மிந்த வேகத்தை நான்
என்ன வென்று சொல்லுவேன் !

கண்ணை மூடித் திறப்பதன் முன்
காத வழிச் செல்லுமே !!
அணுவாய்த் தெரிந்தவை அரைக்கணந் தனிலே
மலையாய்த் தெரிந்திடும், மறைந்திடும் உடனே
(செல்லு)
வளைந்தவை கணத்தில் நிமிர்ந்திடும் நேராய்
பலபடத் தெரிந்தவை இணைந்திடும் ஒன்றாய் (செல்லு)
அருகினில் இருப்பவை அகன்றிடும் தூர
அருகே விரைந்திடும் சேய்மையின் காட்சி (செல்லு)
நேரான யாவும் வேறாகக் காணுதே
மாறான யாவும் நேராகத் தோணுதே
போகு மிந்த வேகத்திலே
யாவும் தெளிவாயில்லையே ! ! (செல்லு)

(உட்புறமிருந்து ஒரு குரல்) அரசே, மான் இந்த ஆஸ்ரமத்தைச் சேர்ந்தது, இதைக் கொல்ல வேண்டாம், கொல்ல வேண்டாம்

சாரதி (உற்றுக்கேட்டு) மன்னரே ! அதோ ! எதிரில் இரு சாதுக்கள் வருகின்றனர். மானை உம் கணையிலிருந்து காக்கவே விரைகின்றனர்

துஷ்யந்தன் (அவசரமாக) ரதத்தை நிறுத்து

சாரதி ஆணைப்படியே, நிறுத்தினேன் அரசே !

(ரதம் நிற்கிறது)

(முனிவரும் சீடரும் முன் வருகின்றனர்)

முனிவர் (கையை உயர்த்தி) அரசே ! ஆஸ்ரமத்தைச் சேர்ந்த இந்த மானைக் கொல்ல வேண்டாம். புது மலரைச் சுடுகோலால் தீய்ப்பது போன்று மெல்லிய இதன் உடலில், கூரம்பைப் பாய்ச்சுவது அழகா ? மன்னவ ! குறி தவறாத உன் அம்புக்கு இச் சிறு மானோ இலக்கு ? அவதியுற்றோர்க்கும் தீனர்களுக்கும் அபயம் அளிப்பதற்கன்றோ அரசர்கள் ஆயுதம் தரிப்பது. ஆகையால்

அரசே

இச் சிறு மானுக்கு அபயங் கொடுத்துக் காப்பாற்று.
நாணேற்றிய கணையை தூணியில் சேர்த்து,

துஷ்யந்தன் — அப்படியே செய்கிறேன். முனிவரே.

முனிவர் — புரு குல பூபதியே ! உம் குலப்பெருமைக்கேற்ப
நல்ல காரியம் செய்தாய் இப்பூவுலகம் முழுதும் புரக்கும்
வல்லமை கொண்ட வீரன் ஒருவனைப் புதல்வனாகப் பெற்றுப்
புகழ் பெறுவாயாக.

துஷ்யந்தன் (வணங்கி) — தவமுனியே ! தங்கள் ஆசீர்வாதம்போல் நடக்கட்டும்

முனிவர் — அரசே நாங்கள் சமித்துச் சேகரிக்க செல்கிறோம்.
அருகில் மாலினி ஆற்றங் கரையில் கண்வ முனிவருடைய
ஆஸ்ரமம் இருக்கிறது. அதிதிகளைத் தகுதி யறிந்து உபசரிக்க
அங்கே கண்வருடைய மகள் சகுந்தலை இருக்கிறாள்
அங்கு போய்த் தங்கிச் செல்க.

துஷ்யந்தன் — கண்வ மகரிஷி இப்பொழுது எங்கிருக்கிறார் ?

முனிவர் — ஆஸ்ரமத்திற்கு வரும் அதிதிகளை வரவேற்று உபசரிக்கும்
படி தம் மகள் சகுந்தலையிடம் சொல்லி விட்டு இப்
பொழுது தான் அவர் சோம தீர்த்தம் செல்கிறார்.

துஷ்யந்தன் — நல்லது முனிவரே ! நான் அவளைக்கண்டு செல்கிறேன்.
கண்வர் வந்த பின் என்னுடைய பக்தியை அவள்
அவரிடம் சொல்வாளன்றோ ?

முனிவர் — சரி. நாங்கள் சென்று வருகிறோம் (மறைதல்)

துஷ்யந்தன் — சாரதி , குதிரைகளைத் தூண்டு. விரைவில்
ஆஸ்ரமத்தைக் கண்டு செல்வோம் மகா தபஸ்வி
யான கண்வரின் ஆஸ்ரம தரிசனம் நம்
வாழ்வைப் புனிதமாக்கட்டும்.

சாரதி — அரசே ! தங்கள் கட்டளைப்படி செய்கிறேன்.

(தேரை ஓட்டுகிறான்)

**வாஸ்து** போதும் கூத்துப் பார்த்துச் சலித்தது
போவோம் வெளியே.

**கலியன்** வெளிச்செல்லும் வழி இது.

**மந்தாரமான நாள்—வெளியிடத்தில் வாஸ்துவும் கலியனும்**

**வாஸ்து** துன்பத்திலும், இன்பத்தின் கை யறவிலும்
உழன்றாள் புவியனைத்தும் தேடித் திரிந்தாள்.
திரு மேனி மெலிந்து, அழகிழந்து அரற்றினாள்
இப்போது சிறையும் புக்காள் — மெல்லியல்
நல்லாளைக் கல் மனக் காதகி யெனக் கூறிச்
சிறையில் அடைத்தனர் — ஏதமில்லாப் பேதைப்
பெண்ணை எத்தனை வகையில் துன்புறுத்தினரோ !
அந்தோ ! இது இப்படியா முடிய வேண்டும் !
இழி தகைப் பேய் நீ இவ்வளவையும்
எனக்கு அறிவிக்காமல் இருந்தாயே !
என்னே ! உன் கொடுமை !
எதிரே நின்று கொடிய உன் கண்களை கோபத்தால்
உருட்டி உருட்டி விழிக்கிறாய். சகித்தற் கரிய
உன் சாயலைப் பார்த்து மனம் புழுங்க வேண்டு
மென்று என் முன் இடங்கொண்டு நிற்பாய்.
ஈவிரக்கமில்லாச் சமூகத்தின் தண்டனைக்கும்
கீழே புரியும் பாதகப் பேய்களின் கொடுமைக்கும்
ஆளாகிச் சிறையில் இருந்து, மீட்பார்
அற்று ஏங்கித் தவிக்கிறாள் அவள் !
நானோ ! சிற்றினஞ் சேர்ந்து, சுவையிலாச்
சிற்றின்பந் துய்க்கும் நலமிலாக் கடை
யனாய்க் கழிவேன். நீயோ ! அவள் படுந்
துன்பத்தை எனக்கு அறிவிக்காது
இது வரை மறைத்தாய்,
என்னை மயக்கினாய் ! அவளைக் கழிய விட்டாய் !

**கலியன்** இவ்வாறு அழிபவள் இவள் ஒருத்தி தானோ ?
இவட்கு முன் எத்தனை பேர் இது போல் அழிந்தனர்

வாஸ்து நாயே ! கொடிய ராக்ஷசப் பேயே !
ஈசனே! அதியந்தமில்லாச் சோதியே !
இந்தக் கொடிய பிசாசு என்னை விட்டுப்
போம்படி அருள் புரிவாய் முன் நாளில்
வாலைக் குழைத்து என் காலைச் சுற்றித்திரிந்
தது இந்நாய். இதுவே இவன் சொந்த வடிவம்
இக் கயவனை மீண்டும் நாயுருத் தாங்கும்
படி செய். நாயாய்க்கிடந்த போது
குற்றமற்றவர்களின்
காலடியிற் காத்துக் கிடந்து அவர்கள் தவறி விழும்
சமயம் பார்த்து
மார்பில் பாய்ந்து கழுத்தைக் கடிப்பான் !
இழிகுணப் பதர் மறுபடியும் தன்
உண்மை உருவம் பெற்றதும் முன் போல்
என் காலைச் சுற்றி வாலைக் குழைப்பான் !
அப்போது நான் நன்றாக உதைப்பேன் !
இவள் ஒருத்தியல்லவாம் ! இவட்கு முன்
எத்தனையோ பேராம் ! என்ன பயங்கரம் !
மனித ஜன்மம படைத்த ஒருவளால்
இவ்வளவு துன்பங்களையும்
அனுபவித்திருப்பின் அது போதுமே ! பெண் இனம்
செய்த பாவங்களைப் போக்குவதற்கு!!! அவள் ஒருத்தி
பட்டதே போதிய கழுவாய் என ஈசனும் ஒப்புமே !
இவள் ஒருத்தி படுந் துன்பமே
என் நெஞ்சைச் தீய்த்து உயிரையும் வாட்டுகிறது.
நீயோ ! ஆயிரக்கணக்கானவர்
இவ்வாறழிந்து அல்லற்படுவதை
உன் கண் மனத் தெண்ணிப் புன்னகை புரிகிறாய் !
கொடிதுன் நெஞ்சம், பிறிதிலை இது போல் !

கலியன் மானிடரான் உங்கள் அறிவு மயங்கியபோது
மீண்டும் நாம் என்ன செய்வது என்று ஒன்றும்
தோன்றாமற் திகைப்பீர் ! இது போல் பலதும்
பார்த்து எம்முடன் இணை பிரியாது எம் வழி வந்திட

முடியாத நீ எங்கள் கூட்டுறவை ஏன்
விரும்பி ஏற்றாய் ? விண்ணிற் பறக்க
எண்ணமே கொள்வீர் ! ஆனால் கண்கள்
கலங்கி மயக்கம் வந்திடில் சகியீர் ! எங்கள்
நட்பை விரும்பி ஏற்றது நீங்களா ? அன்றி
நாங்கள் வலுவில் வந்து உம்முடன்
புணர்ச்சி பழகினோமா ?

வாஸ்து
பைவாய்ப் பாம்பே ! உன் நஞ்சுடைய
நாவை அடக்கு. உன்னை முற்றிலும்
வெறுத்தேன் ! — — எல்லையில் இன்பமும்
வரம்பில்லாற்றலும் படைத்த எம் பெருமானே !
ஏழையின் மீதிரக்கங்கொண்டு அருள் சுரந்து அன்று
காட்சி யளித்த கருணைக் கடலே !!!
என் உள்ளமும் உணர்ச்சியும் நீ நன்கறிவாயே !
அவமே புரிந்து அழிவிற் களித்திடும்
இக்கசடனோ டென்னை ஏன் நீர் சேர்த்து வைத்தீர் ?

கலியன்
முடிந்ததோ ?

வாஸ்து
அவனைக் காப்பாற்று ! இன்றேல் கெடுவாய்.
ஊழிக்காலம் மட்டும் கொடிய சாபமே கொள்வாய்

கலியன்
விதியின் தலையை வெட்டிடலாமோ ?
வினையின் விளைவு வெறுத்திடில் போமோ ?
பழி வாங்கும் கை பயந்திடாதெனக்கு !
அவனைக் காப்பாற்றலாம் !! படு குழியில் தள்ளி
பாழ் நரகத்தில் வீழ்த்ததார் ? அவள்
கற்பை அழித்ததார் ? நீயா ? நானா ?

(வாஸ்து வெகுண்டு சுற்றுமுற்றும் பார்க்கிறான்)

கலியன்
இடியைக் கையில் பிடித்திடுவாயோ ?
ஏழை பனிதர்களாகிய உங்களால் அது முடியாது !
தன்னுடைய வழியில் குறுக்கிடுபவர்
சாதுவாயினும் சரி,
பேதையாயினும் சரி,
அதை நசுக்கிப் பிழிந்து நாசமாக்கிடுவார்
திட மனம் படைத்த கொடியவர் எல்லாம் !

வாஸ்து அவள் இருக்கும் இடத்திற்கு என்னைக்
கொண்டு போய்ச்
சேர்த்திடு. அவளைச் சிறையிலிருந்து
விடுவித்துக் காப்பாற்றியே தீர்வேன் !

கலியன் இதனால் உனக்கு ஏற்படக்கூடிய
ஆபத்துக்களை எண்ணிப்பார் !
உன் கையால் கொன்ற அவன்
இரத்தம் இன்னும் உலரவில்லை !
அந்த இடத்தில் அவனைப்பழி வாங்கும்
ஆவிகள் சூழ்ந்து உன் வரவை
எதிர் பார்த்திருக்கின்றன ! கொலைக் குற்றம்
உன் தலை மேல் உள்ளதை ஊரார்
அனைவரும் அறிவார் !!!

வாஸ்து இவ்விதம் நீ சொல்லத் தகுமோ ? உலகத்தின்
சூழ்ச்சியும் தாழ்ச்சியும் அழிவும் கொலையும்
உன் தலை மீதிருப்பதை
அறியார். பிசாசே ! அவ்விடம் என்னை இக்கணம்
கூட்டிச் செல் அவளை விடுவிப்பேன் !

கலியன் அவ்வாறே செய்வேன். என்னால் செய்யக்கூடியதைக்
கேள். மேலுலகத்திலும் இவ்வுலகத்திலும்
என் அதிகாரமும்
ஆணையுமே ஆட்சி புரிகின்றன! என்று நினைக்கிறாயோ
சிறைக்காவலாளின் சிந்தையை மயக்கி வைக்கிறேன்
சிறையின் திறவுகோலை எடுத்துக்கொண்டு
போய்த் தாளைத் திறந்து
அவளை உன் கையால் பிடித்து
வெளியில் கொண்டு கொண்டு வந்து சேர்.
மாயக் குதிரைகளை வெளியில் வைத்திருக்கிறேன்.
உன்னைத் திரும்ப
அழைத்து வந்து விடுகிறேன் !
இவ்வளவே என்னால் செய்யக்கூடியது !!

வாஸ்து ஏறு ! புறப்படு !! உடனே !!!

(இரவு —திறந்த வெளி — வாஸ்துவும் கலியனும் கரும்புரவிகளின்மீது ஆரோகணித்துக் காற்றினும் கடிதில் விரைகின்றனர்)

வாஸ்து அதோ பார்! அந்தக் கல்லறைக்கருகில்!!
அவர்கள் செய்வதென்ன?

கலியன் அறியேன் அவர் செயல்!!!

வாஸ்து வீழ்வார்! தாழ்வார்!! விண்ணில் எழுவார்!!!

கலியன் சூனியக்காரரின் கூட்டம் அதுவாம்!

வாஸ்து வீசினர் தாவினர்.

கலியன் வா! வா!. போவோம்!!!

## சிறைக் கோட்டத்து வாயில்.

வாஸ்து கையில் கொத்துச் சாவிகளுடன் சிறு விளக்குடனும் சிறிய இரும்புக் கதவின் முன் —

*வழக்க மில்லா வகையில் என் மனம்*
*பயங்கொளும். இன்றே பாரில் சனித்த*
*மானிடர் பலரும் மனத் துறு துயரம்*
*அனைத்தும் ஒன்று சேர்ந்து அமுக்கும் என்னை?*
*கற்சுவர்க்குள்ளவள் காலம் கழிப்பாள்*
*காதலின் மயக்கே மாது செய் குற்றம்*
*கதவின் முன் இன்னும் காலங் கழிப்பயோ?*
*காதலி முகத்தைக் சுண்டிடப் பயமோ?*
*தாமதம் செய்யிற் போமவள் தலையே!*

(பூட்டைப் பிடிக்கிருன் — உள்ளிருந்து பாடும் குரல் கேட்கிறது)

*அன்னை தட்டுவாணி —*
*என்னைப் பெற்றுக் கொன்ருள்.*
*அப்பன் பழிகாரன் —*
*ஒப்பி என்னைத் தின்ருன்.*
*தங்கை மிக நல்லாள் —*
*அங்கம் எடுத்தன்பாய்*

கங்கைக் கரை சேர்த்தாள் —
அங்கே தங்கியிருந்தேன்.
தென்றல் வந்தன்புடன் —
என் பின் மேல் வீச
அன்றில்புள்ளாயினன் —
கேள் எந்தன் பாட்டே !
சென்றிடு சென்றிடு சிங்காரப் புள்ளே !
சென்றிடு சென்றிடு செல் செல் நில்லாதே !

(வாஸ்து பூட்டைத் திறந்து)

வாஸ்து — ஆ ! அவள் காதலன் அருகில் இருப்பதை
அறியாள் அந்தோ ! வைக்கோல் பாயிலும்
விலங்கும் சலசலத் தொலியும் கேட்கவோ !

(அறையினுள் நுழைகிருன்)

(மரகதம் தரையினில் பரப்பிய வைக்கோலினுள் தலையை மறைத்துக் சுொண்டு)

மரகதம் — வந்துவிட்டார் எனைக் கொண்டு போதற்கே
ஓ ! ஓ !! சாகப் போமோ என்னுல் !

வாஸ்து — வந்தேன் உன்னை வாழ்வித்திடவே.

மரகதம் — (வாஸ்துவின் கால்களில் விழுந்து)

ஐய ! நீ மனிதன் ஆயின் நான் படும்
வெந் துயர் எண்ணி இரக்கங் கொள்வாய்

வாஸ்து — அராற்றினுல் காவல் காரன் விழிப்பான்

(விலங்குகளை அவிழ்க்க சங்கிலியை எடுக்கிருன்)

மரகதம் — கொலையாளே ! எனைக் கொன்றிட உனக்கிங்
கதிகாரம் இன்றளித்ததார் அப்பா !
அதிகாலையில் வந்தாற் போதாதோ !
நள்ளிரவேன் நீ நண்ணினு யிங்கே ?
விடியுமவரை யுயிரோடிருந்திட மனம்
விழைகிறதய்யா. தயவு வைத்திடுவாய்

(எழுந்து நிற்கிருள்)

இளமை இன்னும் கழிய வில்லையே !

இன்னும் நான் வெகு சின்னஞ்சிறுமியே !!
இதற்குள்ளாகவே இறந்திட வேண்டுமோ ?
அழகும் இருந்தது அது எனை அழித்தது !
காதலர் இன்றதி தூரத் துள்ளார் !
அப்போதருகில் இருந்தார் அவரே !!
மாலையும் வாடி மலர்கள் உதிர்ந்தன !!!
வேண்டாம். கையை விட்டிடு ஏழை !
என்ன குறை செய்தேன் இது வரை உனக்கு !!
முன் பின் அறியா உன்னுடன் வீணே
முறை சொலின் யாது பயன் பெறக்கூடும் !!!

வாஸ்து தீயினும் சுடுமித் துயரம் சகிப்பனோ !

மரகதம் முற்றுற உன் அடிமை நான் இட்டம் போற் செய்க
சிசுவிற் கொரு தரம் முலை தர விடுவீர் !!
அன்றிரவெல்லாம் அதனுடன் கொஞ்சினேன்
என்னிட மிருந்ததை என் மனம் நோவ
எடுத்துச் சென்றனர் இப்போதவ ரெலாம்
குழவியை நானே கொன்றதாய்க் கூறுவர்.
இன்பம் எனக்கிலை எக்காலத்தும்
என் கதையைச் சிலர் பாட்டாய்ப் பாடுவர் !
கூற்றினும் கொடியவர் —
ஏதோ பாட்டில் இது ஒரு அடியாம்.
எனக்கு இப்பாட்டை இசைக்கச் சொன்னதார் ?

வாஸ்து (நிலத்தில் மண்டியிட்டு)
துன்பத்தளைகளைத் தொலைத்துனை மீட்க
உன்றன் காலடி பணியும் உன் அன்பன்.

மரகதம் (பக்கத்தில் மண்டியிட்டு)
இறைவனை இருவரும வாழ்த்தி வணங்குவோம் !
அதோபார் அங்கே படியின் அடியிலே
தெரியும் நரகத் தெரியும் பெருந் தீ
கேட்டிடும் கீழே பேய்களில் கூக்குரல் !!

வாஸ்து மரகத மயிலே ! மரகத மயிலே !!

மரகதம் காதலர் குரலே காதில் கேட்டேன்.

(குதித்தெழுகிருள் விலங்குகள் கழன்று விழுகின்றன)
எனை யழைத்திட்டார் இப்போதெங்குளார் ?
விடுதலை பெற்றேன் இனித்தடுப்பாரிலை
இக்கணம் ஓடிச் சிக்கெனப் பிடித்தவர்
கழுத்தைக் கட்டித் தழுவி யணைவேன்!
மரகதம் என்றெனைப் பரிவுடன் அழைத்தார்
அந்தப்படி மேல் நின்றதைப் பார்த்தேன்
கூளியும் பேய்களும் ஊளையிட்டலரும்
எனொலிக்கிடையில் பேணு மென் காதலர்
அன்போடழைத்திடும் இன் குரல் அறிந்தேன்.

வாஸ்து நான் தான் ?

மரகதம் நீரோ ! ஆனல்
மீண்டும் ஒரு முறை அப்படிச் சொல்வீர்
அன்பே (கட்டிக் கொள்கிருள்)
அவரோ ! அவர் தான், அவத்தை யெல்லாம்
இப்போதெங்கே ? நிச்சயம் நீரே !
எந்தனை மீட்க வந்தீர் நீரே !
சிறையின் இருளும் தனையும் ஒழிந்தன.
மீட்கப்பட்டே விட்டேன் நானும்
தலை நாள் உம்மைச் சந்தித்திட்ட
தெருவும் அதோ தெரிகிற தப்பால்
மாலதி யோடும் வரவெதிர் பார்த்துக்
காலம் கழித்திட்ட சோலையும் தெரியும்.

வாஸ்து (அவளை வெளியே கூட்டி வர முயற்சித்து)
வெளியே போவோம் !

மரகதம் வேண்டாம் அவசரம்
நீ யிருந்திடும் இடம் இருப்பேன் நானும்
(அவனுடன் கொஞ்சுகிருள்)

வாஸ்து சனுதியிற் புறப்படு ! சீக்கிரம் ! இனியும்
தாமதித்தால் நமக்காபத்தே மிகும்

மரகதம் அன்பே ! எப்படி ஆபத்தாயினி !
முன் போல் முத்தம் தர முடியாதோ ?
மிகச்சில நாளே பிரிந்திருந்தோம் நாம் !
இதற்குள் முத்தம் இடுவதை மறந்தீர் !
மூச்சுத் திணற முறுக்கிப் பிடித்து
கட்டியணைத்து முத்தம் நீ தருவாய்
முன்பெலாம் ; அப்போதுன் முகம் பார்த்துன்
இன் சொல் கேட்டுளம் இன்புற்றிருந்தேன்.
இன்று நீ யென்னையணைத் திட்ட போதெந்தன்
நெஞ்சம் ஏனே துடி துடித் திட்டது
தருவாய் முத்தம் தருவேன் நானும்
ஏன் உன் வாயில் இன்பமே இல்லை
பேசவும் மாட்டா ஊமைபோ லானாய் !
அந்தோ, உன்றன் அன்பெலாம் எங்கே ?
என் மேற் காதலை யார் கவர்ந்தார்கள் ?

(முகத்தை அப்பால் திருப்பிக்கொள்கிறாள்)

வாஸ்து கண்ணே வருவாய் ! காதலன் நானே !!
என்னுடன் வந்திடு எண்ணேல் எதுவும்
முன்னிலும் பன்மடங் கதிகமாய் நானுனைப்
பாராட்டிடுவேன் ஆனால் இப்போ (து)
என் சொற் கேட்டென் பின்னே வந்திடு.

மரகதம் எனில் அவர் நீயோ ? நீயவர் நிஜமாய் ?

வாஸ்து நான் தான் உண்மையில் நான்தான் ! வந்திடு

மரகதம் விலங்கைத்தரித்து வெளியில் கொண்டு போய்
என்னை நீர் அன்புடன் ஏற்றுக்கொள்வீர் ?
வெறுத்து விலக்கி விடமாட் டீரோ ?
அன்பரே என் நிலை அறிவீரோ நீர் ?

வாஸ்து ஏன் சந்தேகம் ? இரவும் கழிந்தது !

மரகதம் தாயைக் கொன்றேன் அதன் பின் பெற்ற
சேயையும் கொன்ற பாதகி நானே ?
உனக்கும் எனக்கும் சொந்தமக் குழந்தை
உனக்குப் பிறந்தது உனைப்போ லிருந்தது !

நம்பவே முடியலை கனவும் அன்றிது.
மெய்யே மெய்யே கையைக் கொடுங்கள்
கையில் ஏது ஈரம் ? ஐயோ இரத்தம்
துடைத்திடு துடைத்திடு என்ன செய்தாய் நீ ?
காலைப் பிடித்தேன் கத்தியைப் போட்டிடு,

வாஸ்து
செல்வக் கிளியே ? சென்றதை மற உன்
சொல்லொவ் வொன்றும் கொல்லும் எனையே

மரகதம்
துன்பத்திங்கே தங்கிட வேண்டாம்
இடுகாட்டெங்களை எப்படிப் புதைப்பதென்று
உரைத்திடுவேன் அதை உற்று நீர் கேட்டு
அறிந்து நீ நாளைக் கதன்படி செய்வாய்
சிறந்த இடத்தில் அன்னையைச் சேர்த்திடு
அவளுக்கருகில் அண்ணனைப் புதைத்திடு
என்னைச் சிறிது தூரத்தில் இடு
குழவியை வலது கொங்கை மேல் வைத்திடு
என் பக்கத்தில் எவர்க்கும் இடமிலை
உன் பக்கத்தென் உடலைக் கிடத்திடும்
இன்பத்திற் கிணை யெங்குள துலகில்
இத்தகைய இன்பம் எனக்கிலை இனி மேல்
வலிய வந்துனை வருத்துவேன் போனும்
பிரியமுற் றெனை நீ பேணு தொழிலையோ ?
ஆயினும் நீர் என் காதலர் என்பதைக்
கண்களின் அன்பு காட்டிடும் நன்றாய்.

வாஸ்து
என்னை யறிந்திடில் என்னுடன் வந்திடு

மரகதம்
அங்கா ? வெளியிலா ?

வாஸ்து
ஆம் சுதந்திர வெளி !

மரகதம்
வெளியே இருப்பதை அறியேனோ நான் !
சாவும் எனக்கெனும் சவக்குழியுந்தான்
நிரந்தரம் தங்கிட இடம் எனக்கதுவே
பெயர்த்தடி வையேன் எனை விட்டகல்வீர்
உடன் வர விழைவேன் முடியாதே அது !

வாஸ்து
முடியும் ! துணிந்திடு — திறந்தது கதவும்

மரகதம் போகத் துணியேன் — போய்ப்பெற என்னுள ?
எப்பரிசுக்காய்த் தப்பியோடுவதினி ?
திரும்பவும் பிடித்திட இருப்பார் வெளியில்
பிச்சையெடுத்துப் பிழைத்திட விரும்பேன்
எங்கிருந் தாலும் என் நெஞ்செனைச் சுடுமே ?
தாய தேசங்களுக் கோடி ஒளித்தவண்
தலை மறைவாகத்தங்கவும் சகியேன் !
எங்கிருந்தாலும் பிடித்திடுவார் என்னை

வாஸ்து எந்நாளும் இனி உன்னுடன் உறைவேன்.

மரகதம் ஓடிக்காத்திடு, உன் குழந்தையை
ஓடையோரமாய்ப்
போகும் பாதையில்
ஓடு ! ஓடு நீ !
பாலம் தாண்டிடு !!!
அப்புறம் ஒரு கானகம்
கானகத் திடசாரி நீ
சென்றிடில் உளதோர் குளம்
பலகையொன்று
குளக்கரைச்
சலமதைத் தொட நின்றிடும்
அவ்விடத்திலுள்ளது
சென்றெடுத்துடன் வந்திடு
சீக்கிரம் நீ சென்றிடு !!
எழுந்து வந்திட — முயன்றிடு
அதற் கின்னுமே உயிர் இருந்திடும் !
போயதன் உயிர் காத்திடு —
போய்விடு, நீ போய் விடு

வாஸ்து மரகதம் இப்படி மனந்தளராதே
பலவும் நினைத்துக் கலங்கிட வேண்டாம்
துன்பக்கட்டெலாம் தொலைத்துச் சிறைவிட்டு
எட்டி யோரடி வை → இன்பமே வெளியில்

மரகதம் அந்தத்திட்டைக் கடந்தப்பாற் சென்
றிருந்தால் எல்லாம் இருக்கும் சரியாய்

அதோ ! அக்கல் மீதன்னை இருக்கிறாள் !
பயத்தால் மூளையும் குளிர்த்து நடுங்கும்
அன்னையும் அந்தக்கல் போலிருக்கிறாள்
என்னையே பார்ப்பாள் இமை கொட்டாக்கண்
அப்படி இப்படி ஆடுது தலையும் !!
அன்றென்னேரம் தங்கினாள் அவளும்
விழிக்கவே இல்லை ; இருவரும் இன்பம்
அனுபவித்திடுவாள் அவள் துயின்றிட்டாள்
இன்புறு நாளது என்றிடு வேன் நான்

வாஸ்து	என்ன் சொன்னாலும் கேட்டிலை யதனால்
உன்னை வலுவில் இழுத்தே செல்வேன்.

மரகதம்	விட்டிடு ! வலுவில் இழுத்திடச் சகியேன்
கொலை புரி கையால் அழுத்திப் பிரியேல்
இன்பமே என்றும் உனக்களித்தேன் நான்.

வாஸ்து	காதலியே பார். காலையும் ஆனது.

மரகதம்	காலையும் ஆனது, நாளும் வந்தது.
கடை நாள் எனக்கிது மண நாள் ஆமென
மனப்பால் குடித்தேன். மரகதத்துடன் மிக
நெருங்கிப்பழகி நேயமுற்றிருந்ததை
ஒருவருக்கும் நீ உரைத்திட வேண்டாம்
வாடிடும் மாலை ! மணமும் போனது !!
மணவறை யினி நாம் மறவோம் ஆயினும்
மீண்டும் ஒருநாள் நிச்சயம் காண்போம்
சந்தியில் ஜனங்கள் வந்து நிறைந்தனர்
தெருக்கள் முற்றும் நெருங்கிடும் கூட்டம்
சன்னை முழித்துச் சாமணி யடித்தனர்
என்னைக் கட்டியிழுத்துச் செல்கிறார்
கொலைக்களம் கடிதிற் கொண்டு வந்திட்டார்
கூர்வாள் எழுத்தின் நேராய் பின்னிப்
பார்ப்போரெல்லாம் பரபரப்புற்றிட
கதுமெனக் கழுத்தை வெட்டி வீழ்த்திடும்
சவக்குழி மேலுறும் சாந்தமிப்போது !

வாஸ்து  பாவியேன் பிறந்தேன் !

கலியன்  பரிதாபம் வீண்

எழு ! எழு ! இனியேன் ஏக்கமும் இரக்கமும் ?
பொழுது விடிந்திடும் புரவிகள் துடித்திடும்
பேய் போல் நிலத்திருந்தேதோ எழுந்தது
அது அவளே தான் ! அடித்துத் துரத்திடு
இவ்விடம் அவனுக்கென்ன வேண்டுமோ ?
என்னைப் பிடித்துப் போகவே வந்தான்

வாஸ்து  இறவாய் நீயே ! இருப்பாய் நிச்சயம் !!

மரகதம்  ஆண்டவர் உனக்கென்னை அர்ப்பணமாக்கினேன் !

கலியன்  வாவா அவளையும் அழைத்துடன் வந்திடு
இன்றேல் உன்னையும் விட்டு நான் செல்வேன்

மரகதம்  ஈசனே ! என்னை ஈன்றிவ் வுலகில்
ஆட விடுத்த அன்புடைத் தந்தையே
ஆட்கொள்வாயினி அடிமையுன் சேயே !
தூதரையனுப்பிப் பாதகரிடமிருந்து
என்னை மீட்டிடுவாய் என்றும் காத்திடு.
நண்பா உன் முகம் பார்த்திட நடுங்குவேன்.

கலியன்  கடைநாள் தீ தீர்ப்பிவட்காமிப்போது

அசரீரி  ஈசன் அவளை ஏற்றான் உவந்தே !

கலியன்  என்னுடன் வந்திடு இவண் இருக்காதே !

(வாஸ்துவும் கலியனும் போகின்றனர்)

(உள்ளேயிருந்து ஒருகுரல்)  அந்தோ ! வாஸ்து !! வாஸ்து !!!

---

(முதற்பாகம் முற்றும்.)

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 13 | ஒலி | ஒளி |
| 10 | 6 | கூறு | கூறும் |
| 11 | 33 | கடைசி வரிக்கு எதிரில் | மார்ஜனில் 'மாயை' சேர்க்க |
| 14 | 5 | ஒன்றுடன் | ஒன்றொடொன் |
| 16 | 22 | யொருள் | பொருள் |
| 18 | 13 | களிச்சாரத் | களிசரத் |
| 18 | 15 | டின்விசை | டின்னிசை |
| 19 | 11 | என்னே | என்னைப் |
| 20 | 11 | நாவே | நாளே |
| 20 | 18 | வாஸ்து | வஸ்து |
| 20 | 20 | ஒழிவிலர | ஒழிவிலா |
| 21 | 3 | ஒலி மயைகிறது | ஒளி மறைகிறது |
| 22 | 31 | கட்டி | கூட்டி |
| 25 | 21 | வுந்தி | வுததி |
| 25 | 30 | குளதெவை ? | குள எவை ? |
| 26 | 21 | திறபாதல் | நிறம் ஆதல் |
| 27 | 8 | எம்முன் | என்முன் |
| 27 | 15 | கடயமும் | கூடமும் |
| 27 | 28 | விருந்திடும்? | னிருந்திடும் ? |
| 28 | 21 | வியந்தரும் | வியத்தகும் |
| 29 | 16 | அழிவாய் | தழிவாய் |
| 30 | 25 | ஆலையத்தில் | ஆலயத்தில் |
| 30 | 29 | மனிதரு | மணிதரு |
| 30 | 30 | தணிந்திடும் | தணித்திடும் |
| 31 | 19 | இவ்வொளிகள் | இவ்வொலிகள் |
| 32 | 3 | சாலே | சோலேப் |
| 32 | 6 | நல்வழி | தவ்வழி |
| 43 | 3 | செய்தும் | செய்து நும் |
| 44 | 6 | சிறிய | சீறிய |
| 46 | 11 | தெய்வம் | தெய்வதம் |
| 46 | 26 | உயிர்கணம் | உயிர்க்கணம் |
| 47 | 19 | மாய்கையில் | மாயையில் |
| 48 | 20 | மலேக்கு | மனேக்கு |
| 49 | 7 | நமக்கு | உமக்கு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 49 | 8 | வரிக்கெதிர் மார்ஜனில் சேர்க்க வேண்டியது "வாஸ்து" | |
| 49 | 11 | வரிக்கெதிர் மார்ஜனில் சேர்க்க வேண்டியது "வாருணன்." | |
| 50 | 1 | நன்றுய்ப | நன்றுய்ப்ப |
| 52 | 2 | ஏனெவி | ஏனெலி |
| 52 | 23 | டவற்றிற | டவத்திற் |
| 52 | 27 | தெய்வீக | தெய்விக |
| 57 | 25 | தாக்கி | தூக்கிக் |
| 57 | 26 | தெய்வீக | தெய்விக |
| 58 | 32 | கதவும் உன் முன்னுல் | கதவும் முன்னுல் |
| 59 | 12 | கேட்டு நீ சும்மாய் | கேட்டினிச்சும்மா |
| 59 | 19 | கரிது | கரிதது |
| 59 | 22 | செலும் | செல்லும் |
| 60 | 13 | பட்டால் | பட்டாய் |
| 60 | 16 | என்னும் | எனினும் |
| 60 | 22 | இனிமை | இனியவை |
| 60 | 25 | ஐம்புலங்கட்கும் | ஐம்புலன்கட்கும் |
| 60 | 27 | பயோதிர | பயோதர |
| 61 | 1 | செவருமிங்கில்லை | செவரும் இங்கில்லை |
| 61 | 6 | ஒலி | ஒளி |
| 52 | 2 | தோடிடும் | தோடும் |
| 62 | 3 | சென்ற | சென்று |
| 62 | 5 | பல் | பல |
| 52 | 32 | கேட்டு இங்(கு) | கேட்டிங்(கு) |
| 64 | 14 | தூளி | தூலி |
| 69 | 1 | மார்ஜினில் முதல் வரிக்கெதிராகச் சேர்க்க "கலியன்" | |
| 69 | 2 | கடைசியாக சேர்க்க 'உண்மைக்" | |
| 69 | 5 | மார்ஜினில் சேர்க்க "வாஸ்து" | |
| 69 | 6 | திருபித் | திருமித் |
| 70 | 23 | எனைச் | என்னைச் |
| 73 | 20 | உடலிரு | உடனிரு |
| 74 | 7 | கேள் | கேள் ஒரு |
| 74 | 29 | உடம்மையை | உடம்பை |
| 75 | 21 | அலியுறு | அலியுறு |
| 75 | 22 | புளி | புலி |
| 76 | 3 | விலகி | விலகு |
| 81 | 12 | துப | துயர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 85 | 7 | எண்றெண்ணிப் | என்றெண்ணிப் |
| 86 | 8 | றெக்கனத் | றெக்களித் |
| 90 | 17 | சமையலான் | சமையலாள் |
| 94 | 6 | வாய்முடி | வாய் மூடி |
| 95 | 1 | இல்லையோ | இல்லையோர் |
| 95 | 9 | துலைவ | தலைவ |
| 96 | 14 | பாளையில் | பானையில் |
| 101 | 18 | ஜம்பதில் | ஐம்பதின் |
| 102 | 5 | இடப்பவை | இடைப்பவை |
| 192 | 14 | உலாவப் | உலாப் |
| 104 | 9 | விண்ணுலகத்து | விண்ணுலகத்துள |
| 104 | 24 | சயனத் | சயனித் |
| 107 | 17 | நீவி ? | நீவிர் ? |
| 108 | 18 | எனல் இனி | எனில் இனி |
| 107 | 30 | உனைச் | உன்னைச் |
| 109 | 19 | நடைவுடை | நடையுடை |
| 109 | 29 | தவிர | தீவிர |
| 110 | 14 | கேளமையா | கேளுமையா |
| 110 | 28 | பத்தெடுத்துச் | பித்தெடுத்துச் |
| 111 | 29 | தொல்லையருள் | தொல்லையிருள் |
| 112 | 10 | நல்லாள் | நில்லாள் |
| 112 | 22 | ஏமாறும் | ஏமாற்றும் |
| 113 | 2 | உடல் பலவிதமாக | உடலைப் பலவிதமாக |
| 113 | 3 | அவயங்களை | அவயவங்களை |
| 113 | 26 | பெற்றுடல் | பெற்றுடலும் |
| 113 | 81 | புறப்படுவோய் | புறப்படுவோம் |
| 114 | 7 | ஊறிக் | ஊறிப் |
| 116 | 4 | பேதையேன் | பேதையென் |
| 115 | 20 | அவள்மென் | அன்னமென். |
| 115 | 32 | வறியேன் | அறியேன் |
| 116 | 20 | அறியேன் | அறிவேன் |
| 116 | 26 | தொழிதிடு | தொழுதிடு |
| 116 | 29 | இவ்விடம் | இவளிடம் |
| 117 | 8 | நினையும் | நீயும் ? |
| 117 | 9 | ஏவன | மேவன |
| 117 | 12 | மாய்கையால் | மாயையால் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 119 | 16 | யாரோ ? | யாரே ? |
| 119 | 29 | மயல்கிருண் | மயங்கிருள் |
| 120 | 4 | நறவினை | நறவினை |
| 120 | 11 | கனவிலும் | கனிவிலும் |
| 120 | 13 | அதுபொல் | அதுபோல் |
| 120 | 32 | ஆஇவ்வுறையுட் | ஆஇவ்வுறையுட் |
| 122 | 7 | செய்வேன் | செயவா ? |
| 127 | 30 | நினைந்த | நினைத்த |
| 129 | 19 | அடிக்கடி | மாலதி—அடிக்கடி (மார்ஜினில்) |
| 137 | 30 | காடுமுரடான் | மரகதம்—காடுமுரடான் (மார்ஜினில்) |
| 141 | 10 | இவன் | இவள் |
| 142 | 8 | யோசித்தறிவாய் | இரட்டித்திருப்பதில் ஒன்றை விடுக |
| 151 | 5 | குருக்களோ | குருக்களும் |
| 151 | 20 | சென்று | சென்றிட |
| 154 | 3 | தேனின | தேனினி |
| 155 | 22 | கேடெனும் | கேயெனும் |
| 156 | 3 | சென்றார் | சென்றாள் |
| 156 | 9 | எதிர் மார்ஜினில் | ' பாக்கியம் ' சேர்க்க |
| 159 | 30 | நேரத்துள் | நேரத்துன் |
| 160 | 1 | யாமொடு | யாமொடு |
| 160 | 20 | யவிழ்த்திடும் | யவிழ்ந்திடும் |
| | | தளர்த்திடும் | தளர்ந்திடும் |
| 164 | 13 | நீக்கிய | நீங்கிய |
| 164 | 22 | முப்புறம் | முப்புரம் |
| 164 | 23 | தொழுந்து | தொழுந்துனை |
| 186 | 14 | றிடுத்திடு | றிடித்திடு |
| 166 | 18 | அஞ்சொரு | அங்கொரு |
| 174 | 32 | எநிலையெனதையும் | நிலையென எதையும் |
| 183 | 9 | (செல்லு) | (செல்லு) |
| 183 | 34 | ஆளரமத்தைர் | ஆஸ்ரமத்தைச் |
| 185 | 22 | கீழே | நீதே |
| 185 | 22 | பேய்களின் | பேய்களின் |
| 185 | 30 | கழிய | அழிய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 186 | 2 | அதியந்தமில்லா | ஆதியந்தமில்லா |
| 186 | 19 | ஒருவளால் | ஒருத்தி |
| 188 | 27 | கொண்டுகொண்டுவந்து | கொண்டுவந்து |
| 189 | 14 | வழக்கமில்லா | வாஸ்து : பழக்கமில்லா |
| 189 | 20 | கதவின்முன் | கலியன் : கதவின்முன் |
| 191 | 12 | முற்றுற | முற்றும் |
| 193 | 1 | ஆபத்தாயினி | ஆபத்தாமினி |
| 195 | 6 | தாய | தார |
| 195 | 24 | முயன்றிடு | முயன்றிடும் |
| 196 | 6 | தங்கினுள் | தாங்கினுள் |
| 196 | 8 | அனுபவித்திடுவாள், | அனுபவித்திடுவான் |
| 196 | 13 | பிரியேல் | பிடியேல் |
| 196 | 22 | மறவோம் | மருவோம் |
| 196 | 28 | கொளைக்களம் | கொலைக்களம் |
| 196 | 29 | எழுத்தின் | கழுத்தின் |
| 197 | 1 | பிறந்தேன் ! | பிறந்தேன் ? |
| 197 | 5 | மார்ஜனில் சேர்க்க | மரகதம் |
| 197 | 6 | அவளே | அவனே |
| 197 | 10 | ஆண்டவர் | ஆண்டவா ! |
| 197 | 19 | தீதிர்ப்பி | தீர்ப்பி |

# நூற்பொருள் அகராதி.

